உ
ஓம் தத் சத்
ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகள் துணை

ஜகத்குரு ஸ்ரீஆதி சங்கராச்சாரிய ஸ்தாபிதம்
கைலாச சம்பத்கிரி பிரம்ம பீடம்
ஸ்ரீமத் சற்குரு அமலானந்த சுவாமிகள்



# குருபூஜை பெருவிழா

## 66-ம் ஆண்டு நினைவு வெளியீடு

நிகழும் ஸ்ரீ துர்முகி வருடம் ஆவணி 19ம் தேதி **(4.9.2016)** அஸ்த நட்சத்திரம்

# கைவல்ய நவநீதம்

(மூலமும், பொழிப்புரையும்)



## ஸ்ரீமத் கேசவானந்த சுவாமிகள்

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே

- திருமந்திரம்

8-5

ஓம்

தத்சத்

சத்குரு ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகளின்

# குருபூஜை பெருவிழா

## 66-ம் ஆண்டு நினைவு வெளியீடு

எல்லாம் வல்ல ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகளின் 66வது ஆண்டு குருபூஜை பெருவிழா நிகழும் ஸ்ரீ துர்முகி வருடம் ஆவணி மாதம் 19ம் தேதி **(4.9.2016)** அன்று அஸ்த நட்சத்திரத்தில் நடைபெறுகின்றது. இந்த நன்னாளில், நாம் அனைவரும் பெறுவதற்கு அரிய வீடுபேறு அடையும் பொருட்டு, நன்னிலம் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் அருளிய **கைவல்ய நவநீதம்** என்னும் அரிய நூலுக்கு, குடியாத்தம் வேதாந்த சபை தவத்திரு. P.C. ராமலிங்கம் சுவாமிகள், நாம் அனைவரும் எளிதில் புரிந்து கொள்ள, வசதியாக, எளிய சொற்களால் அமைந்த ஒரு பொழிப்புரை வரைந்து, நாம் சிந்திப்பதற்கு ஏற்ற வகையில் வழங்கியுள்ளார்கள்.

இந்நினைவு மலர் வெளியிடுவதற்கு ஆக்கமும், ஊக்கமும், உழைப்பும் கொடுத்த தவத்திரு. பெருவெளிராமன் சுவாமிகள், தவத்திரு. ஜவஹர் சுவாமிகள், தவத்திரு. கு. தியாகராஜன் சுவாமிகள், தவத்திரு. இறைஒளி நாகேந்திரன் சுவாமிகள் மற்றும் தவத்திரு. கிணகர் பிர்மஞானம் சுவாமிகள் அவர்களுக்கும் எங்களது மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றோம்.

இதனை பாராயணம் செய்து அனைவரும் சர்வ துக்க நிவர்த்தி, பரமானந்த பிராப்தியான மோக்ஷத்தை அடைய எல்லாம் வல்ல ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகளின் பேரருளை வேண்டுகிறோம்.

சின்னமலை,
சென்னை.
4.9.2016

இப்படிக்கு,
**சுவாமிகளின் மாணவர்கள்**



# முன்னுரை

வேதாந்தம் படித்துவிட்டால் வீட்டை வீட்டுப் போய்விடுவார்கள் என்று பலரும் நினைக்கின்றார்கள். வேதாந்தம் கற்றாலும் இங்கே தான் இருப்போம். ஆனால் கஷ்டம் மட்டும் போய் விடும். எவ்வாறு எனில், வேதாந்தம் நம்முடைய பார்வையின் கோணத்தை மாற்றி விடும். அதனால் எண்ணத்தின் கோணம் மாறுபடும். வாழ்க்கைக்கு அவசியமானது வேதாந்தம்.

வேதாந்த கருத்துக்கள் அனைத்தையும் திரட்டி, சாரமாகப் பிழிந்து 'கைவல்ய நவநீதம்' எனும் நூலில் நன்னிலம் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள், பாடப் பாடத் திகட்டாத நடையழகும், சிதையாத சீர் அழகும் கொண்ட ஆசிரிய விருத்தப் பாக்களில் அளித்துள்ளார். ஏற்கனவே எழுதப்பட்ட பல உரைகளைத் தொகுத்து, ஒட்டு மொத்தப் பாடலின் விளக்கத்தை ஓரளவுக்கு எளிமையாகப் புரிந்து கொள்வதற்கு ஏற்றவாறு இப்பொழிப்புரை அமைக்கப்பட்டுள்ளது. இது எங்கள் சபையில் படிக்கும் சில ஆரம்ப நிலை வேதாந்த மாணவர்களுக்காக தயாரிக்கப்பட்டது. குறைகள் இருப்பின் ஞானியர்கள் பொறுத்தருள வேண்டுகிறேன்.

இதனை, அமலானந்த மடத்தைச் சார்ந்தவர், மாதந்தோறும் வேதாந்த சத்சங்கம் நடத்தி வருபவர், சென்னை சின்னமலையில் "Horyzon Global Services" தொழில் செய்தாலும், பெரியமலை அளவுக்கு சீடத்துவம் மிகுந்தவரான தவத்திரு. ஸ்ரீதர் சுவாமிகள் நூல் வடிவில் வெளியிடுகின்றார். அவருக்கு மனமார்ந்த அன்புகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதோடு, இத்தகைய சேவை உள்ளம் உடைய அன்னாருக்கு வசதிகளும் வாய்ப்புகளும் மேன்மேலும் பெருக விராட சக்தியைப் பிரார்த்திக்கின்றேன்.

**P.C. இராமலிங்கம்**
அலைபேசி : 99409 27133

குடியாத்தம்
வேலூர் மாவட்டம்.

ஓம் தத் சத்
பரப்பிரஹ்மணே நம:

## இறைவணக்கம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞான குரு வாணியை யுள்நாடு.

## குரு மரபு வணக்கம்

பெருமைபெறு கைலாச சம்பத் கிரிப்
பிரமபீடத் தருட்பெரு மாதிசங்கரர் வழிப்
பேசருநி ஜானந்தர் அச்சுதா னந்தரும்
பிறங்கு வேதாந்த முடிவின்
பொருநிலையி னுருவாய சகஜனிட்டானந்த
போதவா தவனாய சீர்
பொருவில்கங் காராமெனுஞ் ஜீவமுக்தனும்
போற்றுவே தாந்த வித்வ
தருவனைய விமலபர துரிய மெய்ஞ்
ஞானியாய்ச் சாரீரா ஜானந்தரும்
தண்டலை யுடுத்துபுக ழெண்டிசை
பரந்தழகு தாவுதிரு நாகவேட்டுப்
பொருவற்ற தவராஜ சிங்கமாய் வந்தெமைப்
புன்மைதீர்த் தாண்டருள் செய்யும்
புகலும த்துவிதவம லானந்த மெஞ்ஞானி
பொன்னடிக் கேடுணை துணையரோ.

## குரு துதி

தாயினும் இரங்கி எந்தனை வந்தாண்டருள்
தூயவன் சரணமே சுமக்க என்றலை
வாய் துதிசெயக் கரமலர்கள் துய்த்தொழ
நேயமோடு அனுதின நினைக நெஞ்சமே.

நானிவன்றா னவனென்றே நவின்றறியா தேயுழன்ற நாயினேற்குத்
தானமரு நிலையிதுவே தாந்தவுப சாந்தமிது தானே தானா.
மோனமொழி யிதுவென்று நான் மறையிநுப நிடதமொழி முடிவு காட்டும்
ஞானகுரு தேசிகனை நாவகத்தும் பாவகத்தும் நவிற்று வோமே.

ஓம் :
தத் சத்
பரப்பிரஹ்மணே நம:

## பாயிரம்

**பொன்னில மாத ராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்**
**தன்னிலந் தரத்திற் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கு**
**மெந்நிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலா**
**நன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி. (1)**

பொன், நில, மாதர் ஆசை ; பொருந்தினர் , பொருந்தார்
உள்ளம் தன்னில், அந்தரத்தில் , சீவ சாட்சி மாத்திரமாய் நிற்கும் ;
எந்நிலங்களினு(ம்) மிக்க, எ(ஏ)ழுநிலம் அவற்றின் மேலாம்,
நன்னில(ம்) மருவும், ஏகநாயகன் பதங்கள் போற்றி.

பொன்னாசை, மண்ணாசை, பெண்ணாசை ஆகிய மூன்று ஆசைகளும் கூடிய அஞ்ஞானிகள் மற்றும் மூவாசைகளும் கூடாத ஞானிகள் என்னும் இருவகையினர் உள்ளங்களில், ஏற்றத் தாழ்வின்றி, மண்குடம், பொன்குடம் எதுவாக இருந்தாலும், இரண்டிலும் ஒரே விதமாய் நிரம்பும் வெளி-ஆகாயத்தைப்-போல, எந்நிலையிலும் எவ்விதத்திலும் எப்பொழுதும் கலவாமல் சீவ சாட்சி மாத்திரமாக இருக்கின்ற, எல்லாவற்றினும் உயர்வாக விளங்கும் தலைவனின் பாதங்களை வணங்குவாம். [*இது பிரமத்தை வணங்குவதான அர்த்தம். இப்பாடல் இரு பொருள்களில் பாடப்பட்டுள்ளது. மற்றொரு அர்த்தம்—எல்லா பூமிகளிலும் உயர்ந்த பூமியாகிய நன்னிலம் என்ற ஊரில் இருக்கும் (இந்நூலாசிரியர் ஆகிய தாண்டவராய சுவாமிகளின் குருநாதர்) நாயகன் பாதங்களை வணங்குவாம் என்பதாகும்*]

**ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனாய் மாலா**
**யான்றவீ சனுமாய்த் தானே யநந்தமூர்த் தியுமாய் நிற்கும்**
**பூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனாய் நாளுந்**
**தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே. (2)**

ஈன்று,அளித்து,அழிக்கும் செய்கைக்கு,ஏதுவாம்;அயனாய்,மாலாய்,
ஆன்ற ஈசனுமாய் ,தானே அனந்த மூர்த்தியுமாய் நிற்கும் ;
பூன்ற முத்தனுமாய் , இன்பப் புணரி, ஆதவனாய் நாளும்
தோன்றிய,விமல போத சொரூபத்தைப் பணிகின்றேனே.

படைத்தல், காத்தல், அழித்தல் என்ற தொழில்களுக்குக் காரணமான அயன்-திருமால்-ருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளுமாய், அநேக மூர்த்திகளுமாய் நிற்கின்ற பூரணமாகி, ஆனந்தக் கடலில் தினமும் உதிக்கின்ற சூரியனாம் மல அழுக்கு இல்லாத ஞான வடிவத்தைப் பணிகின்றேன்.

**எவருடை யருளால் யானே யெங்குமாம் பிரம மென்பால்**
**கவருடைப் புவன மெல்லாங் கற்பித மென்ற றிந்து**
**சுவரிடை வெளிபோல் யானென் சொரூபசு பாவ மானே**
**னவருடைப் பதும பாத மநுதினம் பணிகின் றேனே. (3)**

எவருடை அருளால், யானே எங்குமாம் பிரமம் ; என்பால்
கவருடைப் புவனம் எல்லாம், கற்பிதம் என்று அறிந்து,
சுவரிடை வெளி போல்,யான்,என் சொரூப சுபாவம் ஆனேன்;
அவருடைப் பதும பாதம்,அநுதினம் பணிகின்றேனே.

காலியிடம் ஒன்றில் எழுப்பப்பட்ட சுவரில், அச்சுவர் எழுப்பப்பட்ட இடத்தில் இருந்த காலியிடம்-வெளி பக்கத்தில் நகர்ந்து கொள்ளாமல் அதனுள் இருப்பதுபோல, பலவகைப்பட்ட பிரபஞ்சங்கள் அனைத்தும் மித்தை-பொய் என்று, அறிந்து அதனுள் எங்கும் இருக்கின்ற பிரமமே நான், அதுவே எனது வடிவமாகும் என்பதை அருளால் உணர வைத்த குருநாதரின் தாமரை மலர்ப் பாதங்களைப் பணிகின்றேன் .

**என்னுடை மனது புத்தி யிந்திய சரீர மெல்லா**
**மென்னுடை யறிவி னாலே யிரவிமுன் னிமமே யாக்கி**
**யென்னுடை நீயு நானு மேகமென் றைக்கியஞ் செய்ய**
**வென்னுடைக் குருவாய்த் தோன்று மீசனை யிறைஞ்சி னேனே. (4)**

என்னுடை மனது, புத்தி, இந்திய சரீரம் எல்லாம்,
என்னுடை அறிவினாலே, இரவி முன் நிமமே ஆக்கி,
என்னுடை நீயும் நானும், ஏகம் என்று ஐக்கியம் செய்ய,
என்னுடைக் குருவாய்த் தோன்றும் ஈசனை,இறைஞ்சினேனே.

என்னுடைய மனம்,புத்தி,புலன்கள், தேகம் அனைத்தும் என்னுடைய அறிவினாலே, சூரியனின் முன் பனி போல் இல்லாமல் ஆக்கி, துவம்-நீ-என்ற சொல்லின் உள்ளார்ந்த அர்த்தமான ஆத்மாவாகிய நீயும், தத்-அது-என்ற சொல்லின் உள்ளார்ந்த அர்த்தமான பிரமமாகிய நானும் ஒன்றே எனும் இக்கியத்தை உபதேசிக்கத் தோன்றிய குருவாகிய ஈசனை வணங்கினேன் .

**அந்தமு நடுவு மின்றி யாதியு மின்றி வான்போல்**
**சந்தத மொளிரு ஞான சற்குரு பாதம் போற்றிப்**
**பந்தமும் வீடுங் காட்டப் பரந்தநூல் பார்க்க மாட்டா**
**மந்தரு முணரு மாறு வத்துதத் துவஞ்சொல் வேனே. (5)**

அந்தமும், நடுவுமின்றி ,ஆதியும் இன்றி வான் போல்,
சந்ததம் ஒளிரும் ஞான சற்குரு பாதம் போற்றி ;
பந்தமும் வீடும் காட்ட, பரந்த நூல் பார்க்க மாட்டா,
மந்தரும் உணருமாறு,வத்து தத்துவம் சொல்வேனே.

ஆரம்பம்-நடு-முடிவு இன்றி எப்பொழுதும் ஒளிர்கின்ற வான் போன்ற ஞான சற்குரு பாதம் வணங்கி, பந்தம் இன்னது, மோட்சம் இன்னது என்று அறிந்து கொள்ள அநேக வேதாந்த நூல்களைப் படித்து விசாரித்து அறிய சாமர்த்தியம் இல்லாத மந்த புத்தி உடையோரும் உணரும் வண்ணம் வத்து-சீவ பிரம-தத்துவத்தைச் சொல்வேன்.

**படர்ந்தவே தாந்த மென்னும் பாற்கடன் மொண்டு முன்னூற்**
**குடங்களி னிறைத்து வைத்தார் குரவர்க ளெல்லாங் காய்ச்சிக்**
**கடைந்தெடுத் தளித்தே னிந்தக் கைவல்ய நவநீ தத்தை**
**யடைந்தவர் விடய மண்டின் றலைவரோ பசியி லாரே. (6)**

படர்ந்த வேதாந்தம் என்னும் பாற்கடல் மொண்டு ,முன்நூல்
குடங்களில் நிறைத்து வைத்தார் குரவர்கள் எல்லாம்; காய்ச்சி,
கடைந்து, எடுத்து அளித்தேன் இந்தக் கைவல்ய நவநீதத்தை,
அடைந்தவர், விடய மண் தின்று அலைவரோ? பசியிலாரே.

விரிந்துள்ள உபநிடதங்கள் என்னும் பாற்கடலில் முகந்து, கொண்டு வந்து, நூல்களாகிய குடங்களில் பூர்வ ஆசாரியர்கள் நிறைத்து வைத்தனர். அவைகளைக் காய்ச்சி, கடைந்து எடுத்து இந்த கைவல்ய நவநீதம் என்னும் நூலினை அளித்தேன். இதனைப் படித்து தெளிந்தவர்கள், தேக வாசனை, சாத்திர வாசனை, உலக வாசனை என்ற விஷயமாகிய மண்ணைத் தின்று அலையமாட்டார்கள். ஏனெனில் அவர்களுக்குப் பசியே இருக்காது. *(மண்ணைத் தின்றால் வயிறு கெடும். அதைப்போல இந்த வாசனைகளாகிய விஷயம் என்பதைப் பற்றிக் கொண்டால் மனம், புத்தி கெட்டுவிடும். இந்த நூலினைப் படித்து விசாரித்து அறிந்தால் அவர்களுக்கு விஷயத்தைத் தின்ன வேண்டிய பசியே இருக்காது அதாவது விஷயத்தின் மேல் கவர்ச்சி எழாது.)*

**முத்தனை வேங்க டேச முகுந்தனை யெனையாட் கொண்ட**
**கத்தனை வணங்கிச் சொல்லுங் கைவல்ய நவநீ தத்தைத்**
**தத்துவ விளக்க மென்றுஞ் சந்தேகந் தெளித லென்றும்**
**வைத்திரு படல மாக வகுத்துரை செய்கின் றேனே. (7)**

முத்தனை , வேங்கடேச முகுந்தனை , எனை ஆட்கொண்ட
க(ர்)த்தனை,வணங்கிச் சொல்லும் கைவல்ய நவநீதத்தை,
தத்துவ விளக்கம் என்றும் , சந்தேகம் தெளிதல் என்றும் வைத்து,
இரு படலமாக வகுத்து,உரை செய்கின்றேனே.

**விளக்கம் :-**

முத்தி உடையவனை வேங்கடேச முகுந்தனை என்னை ஆட்கொண்ட தலைவனை வணங்கிச் சொல்லப்போகும் கைவல்ய நவநீதம் என்ற நூலினைத் தத்துவ விளக்கப்படலம், சந்தேகம் தெளிதல் படலம் என்று இரு படலங்களாகப் பிரித்து உரை செய்கின்றேன் .

**பாயிரம்-7-பாடல்கள் முற்றியது.**

## தத்துவ விளக்கப் படலம்

**நித்திய வநித்தி யங்க ணிண்ணயந் தெரிவி வேக**
**மத்திய இகப ரங்கள் வரு போகங் களினி ராசை**
**சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் றாறு கூட்ட**
**முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சா தனமிந் நான்கே. (1)**

நித்திய அநித்தியங்கள்,நிண்ணயம் தெரி(யும்) விவேகம்;
மத்திய இக, பரங்கள், வரு(ம்) போகங்களில் நிராசை;
சத்தியம் உரைக்க வேண்டும்; சமாதி என்று ஆறு கூட்ட(ம்);
முத்தியை விரும்பும் இச்சை;மொழிவர் சாதனம் இந்நான்கே.

*(உலகில் ஒரு தொழிலைச் செய்ய வேண்டுமானால் அதற்கான கருவி தேவை. கலைத்துறையாக இருந்தால் சாதனம் அதாவது பயிற்சி தேவை. ஞானமார்க்கத்தில் செல்லத் தேவையான சாதனங்கள் நான்கு)* 1.எது நிரந்தரமானது,-அழியாதது, எது நிரந்தரம் இல்லாதது-அழிவது என்று அறிகின்ற விவேக புத்தி (நித்திய அநித்திய வஸ்து விவேகம்) 2.காணப்படும் இவ்வுலகத்திலும், கேட்கப்படும் அவ்வுலகத்திலும் அனுபவிப்பதற்கு உரிய அனைத்தும் கர்மத்தினால் கிடைக்கும் என்பதால் மித்தை-பொய்யாம். துக்க சாதனம் என்று அறிந்து வருகின்ற போகங்களில் நிராசை (இகா முத்திரார்த்த பலபோக விராகம்– இகம்-இவ்வுலகம், அமுத்திரம்-அவ்வுலகம், அர்த்தம்-பொருள், பலம்-பிரயோசனம், விராகம்-ஆசையின்மை) 3.சமம் முதலான ஆறு (சமாதி சட்சம்பத்து) 4.மோட்சத்தை விரும்பும் இச்சை(முமுட்சுத்துவம்) ஆகியவை சாதன சதுட்டயம் எனப்படும் நான்கு சாதனங்கள். *(ஞான யோக மார்க்கத்தில் பயிற்சி மேற்கொள்ள இவை நான்கும் அடிப்படைத் தகுதிகள். இவைகளைக் கடைப்பிடிப்பவர்களே இந்த மார்க்கத்தில் முத்தி அடையத் தகுதியானவர்கள்)*

**சமந்தமம் விடல்ச கித்தல் சமாதானஞ் சிரத்தை யாறாஞ்**
**சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்ட**
**மமர்தரு கருமம் பற்றா தறுத்தலே விடலென் றாகு**
**மமர்செயுங் காம மாதி வரினடக் குதல்ச கித்தல். (2)**

சமம், தமம்,விடல்,சகித்தல்,சமாதானம்,சிரத்தை ஆறாம்;
சமம் அகக் கரண தண்டம் ; தமம் புறக் கரண தண்டம்;
அமர் தரு கருமம் பற்றாது, அறுத்தலே விடல் என்றாகும்;
மமர் செயும் காமமாதி வரின், அடக்குதல் சகித்தல்.

*மூன்றாவது தகுதியான சமம்-ஆதிகளின் ஆறு உட்பிரிவுகள் விவரம்:-* 1.சமம் 2.தமம் 3.விடல்(உபரதி, உபரமம்) 4.சகித்தல்(திதீட்சை) 5.சமாதானம் 6.சிரத்தை என ஆறாகும். <u>சமம்</u> என்பது அகக்கரண தண்டம்-உள்ளம், மனம், புத்தி முதலான அந்தக்கரணத்தை லௌகிக விஷயங்களில் தேவையின்றி செல்லாதவாறு தடுத்தல். <u>தமம்</u> என்பது புறக்கரண தண்டம்-கண், காது, மூக்கு முதலான ஞானேந்திரியங்களைச் சப்தம் முதலிய அதனதன் விஷயங்களில் தேவையின்றி செல்லாதவாறு தடுத்தல். <u>விடல்</u> என்பது பெண், தனம், ஜாதி, அபிமானம் போன்றவை சம்பந்தப்பட்ட சகல கருமங்களும் மீண்டும் வந்து பற்றிக் கொள்ளாதவாறு ஒழித்தல். வீட்டு விஷயங்களில் தன்னை முன்னிலைப்படுத்திக் கொள்ளாமல் காரியங்களை நடக்க விடுதல். <u>சகித்தல்</u> என்பது வினைப்பயன் காரணமாக காமம் முதலான ஆசைகள் வந்தால் அவைகளை விரிய விடாமல் அடங்கச் செய்வது.

**சிரவணப் பொருளைத் தானே சித்தஞ்சிந் திக்கு மாறு**
**சரதமா வைக்கு மித்தைச் சமாதான மென்பர் மேலோர்**
**பரமசற் குருநூ லன்பு பற்றலே சிரத்தை யாகும்**
**வரமிகு சமாதி யாறு வகையின்சொற் பொருளி தாமே. (3)**

சிரவணப் பொருளைத் தானே , சித்தம் சிந்திக்குமாறு,
சரதமா(ய்) வைக்கும் இத்தை,சமாதானம் என்பர் மேலோர்;
பரம சற்குரு, நூல் அன்பு பற்றலே, சிரத்தையாகும்;
வர(ம்) மிகு சமாதி ஆறு வகையின் ,சொற்பொருள் இது ஆமே.

பெரியோர்களிடத்தில் கேட்ட ஞான சாத்திர அர்த்தங்களை அனுபவத்திற்குக் கொண்டு வரத் தொடர்ந்து சிந்தித்தல் சமாதானம் என்பர். குருவாலும், ஞான சாத்திரங்களாலும் உபதேசிக்கப்பட்ட வாக்கியங்களின் பேரில் விசுவாசம் வைத்தலே சிரத்தை ஆகும். சிறப்பு மிக்க சமம் ஆதி - சமம் முதலான ஆறு சொற்களின் பொருள் இதுவே.

**சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை**
**யாதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகு**
**நூதன விவேகி யுள்ள நுழையாது நுழையு மாகில்**
**பூதசன் மங்கள் கோடி புனிதனாம் புருட னாமே. (4)**

சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார்,உலகில் இல்லை;
ஆதலால், இந்த நான்கும் அடைந்தவர்க்கு அறிவு (உ)ண்டாகும்;
நூதன விவேகி உள்ள(ம்) நுழையாது; நுழையுமாகில்,
பூத சன்மங்கள் கோடி; புனிதனாம் புருடனாமே.

எழுத்தாணி, மண்வெட்டி போன்ற சாதனங்கள் எனப்படும் கருவிகள் இல்லாமல் எழுதுதல், மண் தோண்டுதல் போன்ற ஒரு காரியமும் செய்து முடிப்பவர் உலகில் இல்லை. ஆதலால் சாதன சதுட்டயம் என்கிற நான்கு சாதனங்களைப் பூரணமாகக் கடைப்பிடிப்பவர்களுக்கு சீவ பிரம ஐக்கிய ஞானம் உண்டாகும். புதிய விவேகியான ஒருவனின் உள்ளமானது இந்த ஞான வழியில் செல்லாது. செல்லுமாயின் அவன் ஏற்கெனவே பல பிறவிகளில் நிஷ்காம கர்மங்களைச் செய்து அந்தக்கரணம் சுத்தம் அடைந்தவனாகப் பிறப்பு எடுத்தவன் ஆவான்.

**இவனதி காரி யானோ னிந்திரி யங்க ளாலும்**
**புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலுந்**
**தவனமூன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்**
**பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே. (5)**

இவன் அதிகாரி ஆனோன் ; இந்திரியங்களாலும்,
புவன தெய்வங்களாலும், பூத பௌதிகங்களாலும்,
தவனம்(ம்) மூன்று அடைந்து;வெய்யில் சகித்திடாப் புழுப்போல் வெம்பி,
பவம் அறு ஞான தீர்த்தம் படிந்திட, பதறினானே.

இந்த சாதன சதுட்டயம் நான்கும் உடையவனே இந்நூலினைக் கேட்பதற்குத் தகுதியுடைய அதிகாரி ஆவான். அவன் வியாதி, பசி முதலானவற்றால் உண்டாகும் அத்தியான்மிக துக்கம், யட்சர், ராட்சதர், பிரேத, பேய்கள், குளிர், காற்று, வெயில் ஆகியவற்றால் உண்டாகும் அதிதைவ துக்கம், திருடர், புலி, பாம்பு முதலியவற்றால் உண்டாகும் அதிபூத துக்கம் ஆகிய மூன்று துன்பங்களால் வெயிலில் அகப்பட்ட புழுவைப் போல் தாங்க முடியாத துன்பம் அடைந்து வெம்பி, சம்சாரத் துன்பம் போக ஞானமாகிய தீர்த்தத்தில் முழுகிடப் பதறினான்.

**ஆனபின் மனைவி மக்க ளர்த்தவே டணைகண் மூன்றில்**
**கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போல்**
**போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணஞ் சென்று**
**ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே. (6)**

ஆனபின்,மனைவி ,மக்கள்,அர்த்த ஏடணைகள் மூன்றில்,
கானவர் வலையில் பட்டு, கை தப்பி ஓடு(ம்) மான் போல்,
போனவன்,வெறுங் கையோடே போகாத வண்ணம் சென்று,
ஞான சற்குருவைக் கண்டு, நன்றாக வணங்கினானே.

இவ்வாறு ஆன பின்பு, தாரம், புத்திரர், செல்வம் என்னும் மூன்றின்பேரில் உள்ள ஆசைகளில் இருந்தும் வேடர்களுடைய வலையில் அகப்பட்டு அந்த வலையைக் கிழித்துக் கொண்டு தப்பி ஓடும் மானைப்போல் போனவன், வெறுங்கையோடு போகாமல் பூ, பழம் போன்றவற்றை எடுத்துக் கொண்டு சென்று ஞான சற்குருவைக் கண்டு நன்றாக வணங்கினான்.

**வணங்கிநின் றழுது சொல்வான் மாயவாழ் வெனுஞ்சோ கத்தா**
**லுணங்கினே னைய னேயென் னுள்ளமே குளிரும் வண்ணம்**
**பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்ன மாக்கி,**
**யிணங்கிய குருவே யென்னை யிரட்சித்தல் வேண்டு மென்றான். (7)**

வணங்கி நின்று , அழுது சொல்வான்; மாய வாழ்வு எனும்
சோகத்தால் உணங்கினேன்;ஐயனே! என் உள்ளமே குளிரும்
வண்ணம்;பிணங்கிய கோச பாசப் பின்னலைச்சின்னம் ஆக்கி,
இணங்கிய குருவே! என்னை இரட்சித்தல் வேண்டும் என்றான்.

வணங்கி நின்று அழுது சொல்வான்—பொய்யான சம்சார வாழ்வு எனும் சோகத்தால் யான் வாடினேன். ஆதலால், குருவே! என் உள்ளம் குளிரும் வண்ணம் ஒன்றினுள் ஒன்றாக இந்த தேகத்தில் உள்ள பஞ்ச கோசங்களில் 'யான் எனது' என வாழும் அபிமான வடிவ பந்தத்தை நாசமாக்கி என்னை இரட்சித்தல் வேண்டும் என்று கேட்டுக் கொண்டான்.

**அன்னதன் சிசுவை யைய னாமைமீன் பறவை போலத்**
**தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதியி ருத்தி**
**யுன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டு சொல்வேன்**
**சொன்னது கேட்பா யாகிற் றொடர்பவந் தொலையு மென்றான். (8)**

அன்ன தன்சிசுவை,ஐயன்! ஆமை,மீன்,பறவை போலத்
தன் அகம் கருதி, நோக்கி, தடவி , சந்நிதி இருத்தி,
உன்னது பிறவி மாற்றும் உபாயம், ஒன்று உண்டு,சொல்வேன் ;
சொன்னது கேட்பாயாகில்,தொடர்பவம் தொலையும் என்றான்.

அப்படி கூறிய தனது சீடனைக் குருவானவர், ஆமையானது கரையில் இட்ட முட்டைகளை மனதில் நினைத்துப் பார்ப்பது போலத் தமது உள்ளத்தில் நினைத்தும், மீன் தான் இட்ட முட்டைகளைக் கண்ணால் நோக்குவது போல நோக்கியும், பறவையானது தான் இட்ட முட்டைகளைச் சிறகினால் தடவுவது போலத் தடவியும், தன் எதிரே அமர வைத்து, உன் சம்சார துக்கத்தைத் தரும் பிறவியை மாற்றும் வழி உள்ளது. அதனைச் சொல்வேன். கேட்டுத் தவறாமல் பயிற்சி செய்வாயாகில் தொடர்ந்து வரும் பிறவிகள் தொலையும் என்றார்.

**தொடர்பவந் தொலையு மென்று சொன்னதைக் கேட்ட போதே**
**தடமடு மூழ்கி னான்போற் சரீரமுங் குளிர்ந்துள் ளாறி**
**யடருமன் பொழுகு மாபோ லாநந்த பாஷ்பங் காட்டி**
**மடன்மலர்ப் பாத மீண்டும் வணங்கிநின் றீது சொல்வான். (9)**

தொடர்பவம் தொலையும் என்று,சொன்னதைக் கேட்டபோதே,
தடமடு மூழ்கினான் போல் , சரீரமும் குளிர்ந்து, உள் ஆறி
அடரும் அன்பு ஒழுகுமாறு போல் , ஆனந்த பாஷ்பம் காட்டி,
மடல் மலர்ப் பாதம் மீண்டும் வணங்கி நின்று,ஈது சொல்வான்.

தொடர்ந்து வரும் பிறவிகள் தொலையும் என்று ஆசாரியர் சொன்னதைக் கேட்டவுடன், வெயிலால் பாதிக்கப்பட்டு வாடி விசாலமான மடுவிலே மூழ்கியது போல, தேகமும் குளிர்ந்து, மனதின் வெப்பம் தணிந்து, அன்பு பெருகி ததும்புமாறு போல, ஆனந்தக் கண்ணீர் விட்டு, மலர் போன்ற பாதங்களை மறுபடியும் வணங்கி நின்று சொல்கின்றான் .

**சொன்னது கேட்க மாட்டாத் தொண்டனா னாலுஞ் சுவாமி**
**நின்னது கருணை யாலே நீரெனை யாள ல ாமே**
**யுன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டென் றீரே**
**இன்னதென் றதைநீர் காட்டி ஈடேற்றல் வேண்டு மென்றான். (10)**

சொன்னது கேட்க மாட்டாத் தொண்டன் ;ஆனாலும் சுவாமி !
நின்னது கருணையாலே, நீர் எ(ன்)னை ஆளலாமே;
உன்னது பிறவி மாற்றும் உபாயம் ஒன்று, உண்டு என்றீரே;
இன்னதுஎன்று,அதை நீர் காட்டி, ஈடேற்றல் வேண்டும் என்றான்.

உபதேசிப்பதைக் கேட்டு தவறாமல் பயிற்சி மேற்கொள்ளாத தொண்டனாக இருந்தாலும், குருவே தங்களது கருணையாலே தேவரீர் என்னை ஆளுதல் முறைமையல்லவோ! எனது பிறவியை ஒழிக்கும் உபாயம் ஒன்று உண்டு என்று சொன்னீரே, இப்படிப்பட்டது என்று அந்த உபாயத்தை நீர் காட்டி என்னைக் கடைத்தேற்றல் வேண்டும் என்றான் .

**அடங்கிய விருத்தி யானென் றறிந்தபின் செறிந்த மண்ணின்**
**குடம்பையுட் புழுமுன் னூதுங் குளவியின் கொள்கை போலத்**
**தொடங்கிய குருவு மான்ம சொரூபமே மருவ வேண்டி**
**யுடம்பினுட் சீவ னைப்பார்த் துபதேச மோது வாரே. (11)**

அடங்கிய விருத்தியான் என்று அறிந்தபின்,செறிந்த மண்ணில்,
குடம்பையுள், புழு முன் ஊதும் குளவியின் கொள்கை போல,
தொடங்கிய குருவும், ஆன்ம சொரூபமே மருவ வேண்டி,
உடம்பினுள் சீவனைப் பார்த்து, உபதேசம் ஓதுவாரே.

அகங்காரம் ஒடுங்கியவன் என்று அறிந்த பின்னர், மண்ணால் ஆகிய கூட்டினுள் எடுத்து வந்து வைத்த புழுவுக்கு முன்னே தன் வடிவம் ஆகும்படி ஊதுகின்ற குளவியின் கொள்கை போல, உபதேசிக்கத் தொடங்கிய குருவும், சீடன் ஆன்ம வடிவமாக ஆவதற்கு அவன் உடம்பினுள் இருக்கும் சீவனைப் பார்த்து உபதேசம் செய்யலானார்.

**வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்தி றந்து**
**தீராத சுழற்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்**
**பேராத கால நேமிப் பிரமையிற் றிரிவன் போத**
**மாராயுந் தன்னைத் தானென் றறியுமவ் வளவுந் தானே. (12)**

வாராய் என் மகனே ! தன்னை மறந்தவன் பிறந்து, இறந்து
தீராத சுழற் காற்றுற்ற, செத்தை போல் சுற்றிச் சுற்றி,
பேராத கால நேமிப் பிரமையில் திரிவன் ; போதம்
ஆராயும் தன்னை, தான் என்று அறியும் ;அவ்வளவும் தானே.

வாராய் என் மகனே! தன்னை யார் என்று விசாரித்து அறியாதவன், பிறந்து இறந்து நீங்காத சுழல் காற்றில் அகப்பட்ட செத்தை போல் போவதும் வருவதுமாக காலச் சக்கர சுழற்சியில் சுழன்று கொண்டே இருப்பான். எதுவரை? ஞான சாத்திரப் பயிற்சியினால் ஆராய்ந்து தான் யார் என்று விசாரித்து தான் பிரமமே என்று அறியும் காலம் வரையில்.

**தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேல்**
**பின்னையத் தலைவன் றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வ**
**னுன்னைநீ யறிந்தா யாகி லுனக்கொரு கேடு மில்லை**
**யென்னைநீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே.** (13)

தன்னையும் , தனக்கு ஆதாரத் தலைவனையும் கண்டானேல்,
பின்னை, அத்தலைவன் தானாய், பிரமமாய், பிறப்புத் தீர்வன்;
உன்னை நீ அறிந்தாய் ஆகில், உனக்கு ஒரு கேடும் இல்லை;
என்னை நீ கேட்கையாலே ,ஈது உபதேசித்தேனே.

தன்னையும்-ஆபாசன் ஆன சீவனையும், தனக்கு ஆதாரத் தலைவனையும்-ஆன்மா/கூடஸ்தன்-அறிந்து விட்டால், பின்பு அந்த கூடத்தன் என்கிற ஆன்மாவாய், ஆன்மாவே பிரமம் என்று தெளிந்து உணர்ந்து பிறப்பிலிருந்து விடுபடுவான். இவ்வாறு உனது நிஜ வடிவத்தை உணர்ந்தால் உனக்கு ஒரு கேடும் இல்லை. என்னைக் கேட்டதாலே இதனை உனக்கு உபதேசித்தேன்.

**என்னைத்தான் சடனா வுள்ளத் தெண்ணியோ சொன்னீ ரையா**
**தன்னைத்தா னறியா மாந்தர் தரணியி லொருவ ருண்டோ**
**பின்னைத்தா னவர்க ளெல்லாம் பிறந்திறந் துழலு வானே**
**னின்னைத்தா னம்பி னேற்கு நிண்ணய மருளு வீரே.** (14)

என்னைத்தான் (அ)சடனா,உள்ளத்து எண்ணியோ?சொன்னீர் ஐயா!
தன்னைத்தான் அறியா மாந்தர் தரணியில் ஒருவர் உண்டோ?
பின்னைத்தான் அவர்கள் எல்லாம் பிறந்து,இறந்து உழல்வான் ஏன்?
நின்னைத்தான் நம்பினேற்கு நிண்ணயம் அருள்வீரே !

குருவே! என்னை மூடனாக உள்ளத்தில் கருதியோ சொன்னீர். தன்னைத்தான் அறியாத மாந்தர்கள் உலகில் யாரேனும் உளரோ? பிறகு, அவர்கள் எல்லாம் பிறந்தும் இறந்தும் சுழலுவது ஏன்? தங்களையே நம்பிய எனக்கு அந்த நிச்சயத்தை உள்ளவாறு உபதேசிப்பீர்.

**இன்னது தேகந் தேகி யிவனென வுணர்வான் யாவ**
**னன்னவன் றன்னைத் தானென் றறிந்தவ னாகு மென்றார்**
**சொன்னபின் றேகி யாரித் தூலமல் லாம லென்றான்**
**பின்னது கேட்ட வையர் பீழையு நகையுங் கொண்டார். (15)**

இன்னது தேகம், தேகி இவன், என உணர்வான் யாவன் ?
அன்னவன் தன்னைத் தான் என்று,அறிந்தவன் ஆகும் என்றார்;
சொன்ன பின், தேகி யார் ? இத்தூலம் அல்லாமல் என்றான்;
பின்னது கேட்ட ஐயர் பீழையும், நகையும் கொண்டார்.

இது தேகம், இவன் தேகி என்று பிரித்து அறிபவன் எவனோ அவனே தன்னைத்தான் அறிந்தவன் ஆகும் என்றார். இவ்வாறு சொன்னபின், தான் இந்த தூல தேகம் அல்லாமல் வேறே தேகி யார்? என்பதைக் காணேன், இருந்தால் காணப்படாமல் இருப்பானா என்று சீடன் கூறினான். அது கேட்ட குரு, துன்பமும் புன்னகையும் கொண்டார்.

**தேகமல் லாமல் வேறே தேகியார் காணே னென்றாய்**
**மோகமாங் கனவில் வந்து முளைத்தவ னெவனீ சொல்வாய்**
**சோகமங் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவனார் சொல்வா**
**யாகநீ நனவி லெண்ணு மறிவுதா னேது சொல்வாய். (16)**

தேகம் அல்லாமல் வேறே தேகி யார் ? காணேன் ! என்றாய்;
மோகமாம் கனவில் வந்து, முளைத்தவன் எவன்? நீ சொல்வாய்;
சோகமாம் கனவு தோன்றாச் சுழுத்தி கண்டவன் யார்? சொல்வாய்;
ஆக, நீ நனவில் எண்ணும் அறிவுதான் ஏது? சொல்வாய்.

தேகத்தைத் தவிர,வேறே அன்னியமாக தேகி காணப்படாததால் இல்லை என்று சொன்னாய். தூக்கமாகிய மோகத்தில் கனவில் வந்து விஷயங்களை அறிபவன் யார்? நீ சொல்வாய். சோகமாம் கனவில்லாத ஆழ்துயிலில் நன்றாக உறங்கினேன் என்பதை அறிந்தவன் யார்? நீ சொல்வாய். நனவில் விஷயங்களை அறிகின்ற அறிவுதான் யாது? நீ சொல்வாய் என்றார் குரு.

**நனவுகண் டதுநான் கண்ட நனவுள நினைவு நீங்கிக்**
**கனவுகண் டதுஞ்சு ழுத்தி கண்டதும் வேறொன் றேபோற்**
**றினமநு பவிப்ப தொக்குந் தெரியவு மில்லை சற்றே**
**மனதினி லுதிக்கும் பின்னே மறைக்கும தருளு வீரே. (17)**

நனவு கண்டது, நான் கண்ட நனவு (உ)ள நினைவு நீங்கி,
கனவு கண்டதும்,சுழுத்தி கண்டதும், வேறு ஒன்றே போல்,
தினம் அனுபவிப்ப(து) ஒக்கும்;தெரியவும் இல்லை ;சற்றே,
மனதினில் உதிக்கும்;பின்னே மறைக்கும்;அது அருளுவீரே.

விழிப்பில் விஷயங்களை அறிந்ததும், நான் கண்ட விழிப்பு உலக நினைவுகள் நீங்கி, கனவில் அறிந்ததும், ஆழ்துயிலில் அறிந்ததும் இத்தேகத்திற்கு வேறான தேகியே போல நாள்தோறும் அனுபவிப்பதாகவும், அதே சமயம் சர்வ காலமும் தெரியவும் இல்லை. இமைப்பொழுது மனதில் தெரிகிறது. உடனே மறைக்கிறது. இது தெரியும்படி உபதேசம் செய்வீர்.

**தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறைக் காட்டு வார்போ**
**லாலத்தி னுடுக்கள் காட்டி யருந்ததி காட்டு வார்போற்**
**றூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூப மான**
**மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கி னாரே. (18)**

தாலத்தின் மரங்கள் காட்டி, தனிப் பிறைக் காட்டுவார் போல்;
ஆலத்தின் உடுக்கள் காட்டி, அருந்ததி காட்டுவார் போல்;
தூலத்தை முன்பு காட்டி, சூக்கும சொரூபமான மூலத்தை,
பின்பு காட்ட முனிவரர் தொடங்கினாரே.

பூமியில் உள்ள மரங்களின் கிளை நுனியைக் காட்டி மூன்றாம் பிறையைக் காட்டுவார் போலவும், ஆகாயத்தில் உள்ள வசிட்டர் முதலான நட்சத்திரங்களை முன்னே காட்டி, அருந்ததி நட்சத்திரத்தைப் பின்னே காட்டுவார் போலவும், தூலமான சீவன், உலகங்களைக் காட்டிப்பின்பு சூக்கும வடிவான பிரமத்தைக் காட்ட சிறந்தவரான ஆசாரியர் ஆரம்பித்தார்.

**அத்தியா ரோப மென்று மபவாத மென்றுஞ் சொல்லு**
**முத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்த மெல்லா**
**மித்தையா மாரோ பத்தாற் பந்தமா மபவா தத்தான்**
**முத்தியா மிவ்வி ரண்டின் முந்தியா ரோபங் கேளாய். (19)**

அத்தியாரோபம் என்றும்,அபவாதம் என்றும் சொல்லும் உத்தியால்,
பந்தம்,வீடு என்று(உ)ரைக்கும் வேதாந்தம் எல்லா(ம்);
மித்தையாம் ஆரோபத்தால் பந்தமாம்; அபவாதத்தால் முத்தியாம்;
இவ்விரண்டில், முந்தி ஆரோபம் கேளாய்.

ஆரோபம் - அபவாதம் என்று சொல்லக்கூடிய உத்தியால்-கிரமத்தால், பந்தம் - வீடு இவைகளைக் குறித்து வேதாந்த சாத்திரம் பேசுகின்றது. பொய்யான ஆரோபத்தால் பந்தமே உண்டாகும். அபவாதத்தால் முத்தியே உண்டாகும். இந்த இரண்டில் முதலில் ஆரோபத்தைப் பற்றிக் கேட்பாய்.

**ஆரோப மத்தி யாசங் கற்பனை யாவ வெல்லா,**
**மோரோர்வத் துவினில் வேறே யோரோர்வத் துவினை யோர்த**
**னாரூடு பணியாய்த் தோன்ற னரனாகித் தறியிற் றோன்ற**
**னீரூடு கானற் றோன்ற னிறந்தலம் வெளியிற் றோன்றல். (20)**

ஆரோபம்,அத்தியாசம்,கற்பனை ஆவ(து) எல்லாம்,
ஓர் ஓர் வத்துவினில்,வேறே ஓர் ஓர் வத்துவினை ஓர்தல்;
நார் ஊடு பணியாய்த் தோன்றல்; நரனாகித் தறியில் தோன்றல்;
நீர் ஊடு கானல் தோன்றல்; நிறம் தலம் வெளியில் தோன்றல்.

ஆரோபம், அத்தியாசம், கற்பனை (இவை அனைத்தும் ஒரே அர்த்தம் உடைய சொற்கள்) ஆகிய அனைத்தும் ஒரு பொருளினிடத்து அதற்கு வேறான ஒரு பொருளினை உணர்தல் ஆகும். கயிறில் பாம்பு இருப்பதாகத் தோற்றம் அளித்தல், கம்பத்தில் மனிதன் நிற்பதாகத் தோற்றம் அளித்தல், கானலில் நீர் உள்ளதாகத் தெரிதல், ஆகாயத்தில் நீல நிறம் இருப்பதாகத் தோற்றம் அளித்தல்.

**இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி,**
**யொப்பமா யிரண்டற் றொன்றா யுணர்வொளி நிறைவாய் நிற்கு**
**மப்பிர மத்திற் றோன்று மைம்பூத விகார மெல்லாஞ்**
**செப்புகற் பனையி னாலே செனித்தவென் றறிந்து கொள்ளே. (21)**

இப்படிப் போல, நாம, ரூபங்கள் இரண்டும் இன்றி,ஒப்பமாய்,
இரண்டற்று,ஒன்றாய்,உணர்வொளி நிறைவாய் நிற்கும்;
அப்பிரமத்தில் தோன்றும் ஐம்பூத விகாரம் எல்லாம்,
செப்பு கற்பனையினாலே,செனித்தவென்று அறிந்து கொள்ளே.

*(பஞ்ச பூதங்களும், அண்டங்களும், பிரபஞ்சமும், உயிரினங்களும் தோன்றாத காலத்தில்)* மேற்சொல்லியதைப் போல, பெயரும் வடிவமும் இல்லாமல் சமமாயும், இரண்டாக இல்லாமல் ஒன்றாகவும், உணர்வு ஒளி நிறைந்ததாயும் 'பிரமம் மட்டுமே' இருந்தது. அந்தப் பிரமத்தில் பஞ்ச பூத முதலிய விகாரங்கள்- காரியங்கள்- அனைத்தும் இனிக் கூறப்படும் கற்பனைகளாலே உண்டாயின என்று தெரிந்துகொள்வாய். *(பிரமத்தைத் தவிர ஏனைய அனைத்தும் பொய்யானவை நிரந்தரமானவை அல்ல என்பதாலே கற்பனை என்று கொள்ளப்படுகிறது*

**அதுதானெப் படியென் றக்கா லநாதியாஞ் சீவ ரெல்லாம்**
**பொதுவான சுழுத்தி போலப் பொருந்துமவ் வியத்தந் தன்னி**
**லிதுகால தத்து வப்பே ரீசனுட் பார்வை யாலே**
**முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்த மாமே. (22)**

அதுதான் எப்படி என்றக்கால்,அநாதியாம் சீவர் எல்லாம்,
பொதுவான சுழுத்தி போல,பொருந்தும் அவ்வியத்தம் தன்னில்,
இது, கால தத்துவப் பேர், ஈசன் உட்பார்வையாலே,
முதுமூல சுபாவம் விட்டு, முக்குணம் வியத்தம் ஆமே.

அந்த படைப்பு முறை தான் எப்படி என்று கேட்டால், அனாதியாக உள்ள சீவ கோடிகள் யாவும், சர்வ சாதாரண அனுபவமான ஆழ்துயில் போல, படைப்புக்கு முன்னே மாயையின் கண்ணே இருக்கும். இந்த மாயையானது கால தத்துவம் என்னும் பெயருடைய ஈசுவரனுடைய பார்வையாலே, காரணத்தன்மை நீங்கி மூவகை குணங்களாகப் பிரகாசித்தது. *[இயக்கம் இல்லாத பிரமத்தில் இயக்கம் தோன்றிய போது, மாயை (மூலப்பிரகிருதி) என்பதும் அதனுள்ளேயே முக்குண வடிவிலே அமைந்துவிட்டது]*

**உத்தம வெளுப்புச் செம்மை யுரைத்திடு கறுப்பு மாகுஞ்**
**சத்துவ குணத்தி னோடு ரசோகுணந் தமோகு ணந்தான்**
**சுத்தமோ டழுக் கிருட்டாச் சொல்லுமுக் குணமு மூன்றா**
**யொத்துள வேனுந் தம்மு ளொருகுண மதிக மாமே. (23)**

உத்தம வெளுப்பு, செம்மை, உரைத்திடு(ம்) கறுப்பும் ஆகும்;
சத்துவ குணத்தினோடு ரசோகுணம் , தமோ குணந்தான்;
சுத்தமோடு,அழுக்கு,இருட்டாச் சொல்லு(ம்) முக்குணமு(ம்) மூன்றாய்,
ஒத்துளவேனும் தம்முள், ஒரு குணம் அதிகமாமே.

சத்துவ குணம், இரஜோ குணம், தமோகுணம் ஆகிய மூன்றுக்கும் முறையே வெண்மை, செம்மை, கருப்பு நிறங்களையும், சுத்தம், அழுக்கு, இருட்டு எனவும் ஒப்பிட்டுச் சொல்வர். இம் மூன்று குணங்களும் ஒரே விதமாக ஒத்துளது ஆகும். இருப்பினும் ஒரு கால கட்டத்தில்-ஒரு கணத்தில் ஒரு குணம் மட்டுமே மேலோங்கி நிற்கும்.

**ஒருவழி யிதுவா மித்தை யொருவழி வேறாச் சொல்வர்**
**மருவுமவ் வியத்தந் தானே மகதத்வ மாகு மந்த**
**வருண்மக தத்து வந்தா னகங்கார மாகு மென்றுங்**
**கருவகங் கார மூன்றாக் காட்டிய குணமா மென்றும். (24)**

ஒருவழி இதுவாம்; இத்தை ஒருவழி வேறாச் சொல்வர்;
மருவும் அவ்வியத்தம் தானே ,மக தத்துவம் ஆகும் ;
அந்த அருள் மக தத்துவந்தான், அகங்காரம் ஆகும் என்றும்;
கரு அகங்கார(ம்) மூன்றாக் காட்டிய குணமாம் என்றும்.

இது ஒரு சிருட்டிக் கிரமம் ஆகும். இதனை வேறொரு கிரமமாகவும் பெரியோர் சொல்வர். கர்ம வாசனைகளோடு சீவர்கள் பொருந்தியிருக்கும் அவ்வியத்தமே-சமட்டி புத்தி ரூபமான- மக தத்துவமாகத் தோன்றும் என்றும் சொல்லிய அந்த மக தத்துவமே அகங்கார தத்துவமாகத் தோன்றும் எனவும் காரணமான அந்த அகங்கார தத்துவமானது முவகையாகச் சொன்ன சத்துவம் முதலான குண வடிவங்கள் ஆகும் என்றும்.

**இக்குணங் களிலே விண்போன் றிருக்குஞ்சிற் சாயை தோன்று**
**முக்குணங் களினுந் தூய்தா முதற்குண மாயை யாகு**
**மக்குணப் பிரமச் சாயை யந்தரி யாமி மாயை**
**யெக்குணங் களும்பற் றாதோ னிமித்தகா ரணனா மீசன்.** **(25)**

இக்குணங்களிலே,விண் போன்று இருக்கும் சிற்சாயை தோன்றும்;
முக்குணங்களினும்,தூய்தாம்) முதற் குணம் மாயையாகும் ;
அக்குணப் பிரமச் சாயை, அந்தரியாமி; மாயை,
எக்குணங்களும் பற்றாதோன், நிமித்த காரணனாம் ஈசன்.

சத்துவம் முதலான குணங்களில், ஆகாசம் போல இருக்கும் சித்தின் பிரதிபிம்பம் உண்டாகும். மூன்று குணங்களினும் சுத்தமான முதல் குணம் ஆகிய சத்துவ குணம் மாயை என்று சொல்லப்படும். அந்தச் சுத்த சத்துவம் பிரதானமாக உடைய மாயையில் பிரதிபலிக்கும் பிரமத்தின் பிரதிபிம்பம் அந்தர்யாமி ஆகும். அவனே தனக்குச் சரீரமான மாயையிலும் அதன் பரிணாமம் ஆகிய கல்யாண குணங்களுக்குள்ளே எந்தக் குணங்களிலும் அகந்தை, மமதை, அபிமானம் இல்லாத நிமித்த காரணன் ஆகிய ஈசன் ஆம்.

**ஈசனுக் கிதுசு ழுத்தி யிதுவேகா ரணச ரீரங்**
**கோசமா நந்த மாகுங் குணமிரா சதம வித்தை**
**தேசறு மவித்தை தோறுஞ் சிற்சாயை சீவ கோடி**
**நாசமா முயிர்க்கப் போது நாமமும் பிராஞ்ஞ னாமே.** **(26)**

ஈசனுக்கு இது சுழுத்தி , இதுவே காரண சரீரம்;
கோசம் ஆனந்தமாகும் ; குணம் இராசதம் அவித்தை;
தேசறும் அவித்தை தோறும், சிற் சாயை சீவ கோடி ;
நாசமாம் உயிர்க்கு, அப்போது நாமமும் பிராஞ்ஞனாமே.

ஈசனுக்கு இந்த மாயையே சுழுத்தி அவத்தை ஆகும். இதுவே காரண தேகமும் ஆனந்தமய கோசமும் ஆகும். இரஜோ குணம் அவித்தை என்று சொல்லப்படும். மலின சத்துவமான அவித்தைகள் எல்லாவற்றிலும் பிரதி பிம்பித்துள்ள சித்தின் பிரதிபிம்பங்களே சீவ கோடிகள் ஆகும். நாசமாகின்ற உயிர்களுக்கு காரிய சரீரங்களை அடையாமல் அவித்தை மாத்திர உபாதி உடையதாக இருக்கும் அச்சமயத்தில் பிராஞ்ஞன் என்று பெயராகும்.

**அழுக்கொடு பற்றுஞ் சீவர்க் கதுவேயா நந்த கோசஞ்**
**சுழுத்திகா ரணச ரீரஞ் சொன்னதிம் மட்டு மோக**
**முழுக்குணத் திரண்டால் வந்த மூலவா ரோபஞ் சொன்னோம்**
**வழுத்துசூக் குமவா ரோப வழியுநீ மொழியக் கேளாய். (27)**

அழுக்கொடு பற்றும் சீவர்க்கு, அதுவே ஆனந்த கோசம் ;
சுழுத்தி காரண சரீரம் ; சொன்னது இம்மட்டு(ம்), மோக
முழுக் குணத்து இரண்டால் வந்த,மூல ஆரோபம் சொன்னோம் ;
வழுத்து சூக்கும ஆரோப வழியு(ம்), நீ, மொழியக் கேளாய்.

மலின சத்துவமான அவித்தையே சீவர்களுக்கு ஆனந்தகோசம், சுழுத்தி, காரணதேகம். இதுவரையில் கூறியது முழு மோகமான சுத்த சத்துவம், மலின சத்துவம் என்னும் மாயை, அவித்தைகளால் உண்டான காரண அத்தியாசத்தைக் கூறினோம். இனி சூக்கும பிரபஞ்ச அத்தியாசக் கிரமத்தையும் கூறுகிறேன். நீ கேட்பாய்.

**ஏமமா யாவி னோத வீசனா ரருளி னாலே**
**பூமலி யுயிர்கட் கெல்லாம் போகசா தனமுண் டாகத்**
**தாமத குணமி ரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்**
**வீமமா மூட லென்றும் விவிதமாந் தோற்ற மென்றும். (28)**

ஏம மாயா வினோத ஈசனார் அருளினாலே,
பூமலி உயிர்கட்கு எல்லாம், போக சாதனம் உண்டாக;
தாமத குணம், இரண்டு சத்தியாய் பிரிந்து தோன்றும்;
வீமமா(ம்) மூடல் என்றும், விவிதமாம் தோற்றம் என்றும்.

களிப்பு, மாயையினால் ஆக்கல் முதலிய லீலைகள் ஆகியவற்றை உடையவனான ஈசுவரனின் சிறப்பு மிக்க தண்ணருளினால், எஞ்சிய கரும வாசனைகளோடு தோற்றத்திற்கு வராத நிலையில் உள்ள சீவர்களுக்கெல்லாம் போகத்தை அனுபவிக்க சாதனமான சூக்கும தேகங்கள் உண்டாகும் பொருட்டு, மாயை தமோகுணத்தை பிரதானமாகக் கொண்டு, கனத்த ஆவரணம்-மறைப்பு-என்றும், பலவான விட்சேபம்-தோற்றம்-என்றும் இருவகை சத்திகளாக- ஆற்றலாக-பிரிந்து தோன்றும்.

**தோற்றமாஞ் சக்தி தன்னிற் சொல்லிய விண்ணாம் விண்ணிற்**
**காற்றதாங் காற்றிற் றீயாங் கனலினீர் நீரின் மண்ணாம்**
**போற்றுமிவ் வைந்து நொய்ய பூதங்க ளென்று பேராஞ்**
**சாற்றுமற் றிவற்றிற் போக சாதன தநுவுண் டாகும்.** **(29)**

தோற்றமாம் சக்தி தன்னில்,சொல்லிய விண்ணாம் ; விண்ணில்
காற்றதாம் ; காற்றில் தீயாம் ; கனலில் நீர் ; நீரில் மண்ணாம் ;
போற்றும் இவ்வைந்தும் , நொய்ய பூதங்கள் என்று பேராம்;
சாற்று(ம்) மற்று இவற்றில், போக சாதன தனு உண்டாகும்.

விட்சேபமாகிய சத்தியிலிருந்து, கலப்பில்லாத, சப்தத்தை உடைய ஆகாயம் தோன்றியது. ஆகாசத்திலிருந்து தொடுஉணர்ச்சி-பரிசம் உடைய காற்று தோன்றியது. காற்றிலிருந்து ஒளி உடைய நெருப்பு தோன்றியது. நெருப்பில் இருந்து சுவை உடைய தண்ணீர் தோன்றியது. நீரிலிருந்து வாசனை உடைய மண் தோன்றியது.சொல்லப்பட்ட இந்த ஐந்தும் நொய்ய பூதங்கள்- சூக்கும பூதங்கள்-அபஞ்சீகிருத பூதங்கள் எனப்படும். இந்த அபஞ்சீகிருத பூதங்களில் இருந்து போக சாதனமாகிய சூக்கும தேகங்கள் உண்டாகும்.

**ஆதிமுக் குணமிப் பூத மடங்கலுந் தொடர்ந்து நிற்குங்**
**கோதில்வெண் குணத்தி லைந்து கூறுணர் கருவி யாகு**
**மோதிய பின்னை யைந்து முளம்புத்தி யிரண்டா ஞான**
**சாதன மாமிவ் வேழுஞ் சற்குணப் பிரிவி னாலே.** **(30)**

ஆதி முக்குணம், இப்பூதம் அடங்கலும் தொடர்ந்து நிற்கும் ;
கோதில் வெண் குணத்தில் ஐந்து கூறு, (உ)ணர் கருவி ஆகும்;
ஓதிய பின்னை ஐந்தும் உளம்,புத்தி இரண்டாம்;
ஞான சாதனமாம் இவ்வேழும், சற்குணப் பிரிவினாலே.

காரணமான தமோகுணம் முக்கியமாக உடைய மாயையிடத்தில் உள்ள தமசில் சத்துவம், தமசில் இராசதம், தமசில் தமசு என்னும் முக்குணங்கள் இந்த ஐந்து பூதங்களிலும் தொடர்ந்து இருக்கும். பஞ்ச பூதங்களின் குற்றமற்ற சத்துவ குணத்தின் பங்கில் எடுத்து வெவ்வேறாக வைத்த ஐந்து பங்கும் ஞானேந்திரியங்கள் ஆகின. சொல்லிய அப்பூதங்களின் சத்துவ குணப் பங்கில் எடுத்து ஒன்றாக வைத்த ஐந்து பங்கும் மனம், புத்தி என்னும் அந்தக்கரணங்கள் ஆகின. இந்த ஏழு தத்துவங்களும் தமசில் சத்துவ குணப்பிரிவினால் உண்டானதால் ஞான சாதனம் என்று சொல்லப்படும். *(அதாவது உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இந்தினையும் மனம், புத்தி இரண்டாக அடக்கிக் கூறுவர். தமசில் முக்குணங்கள் கலந்து பிரிவை உண்டாக்குவதற்கு முன்பாக, தமோகுணம் பிரதானமாக இருந்த போது கலப்பில்லாத சூக்கும பூதங்கள் தோன்றியது. அவைகளில் இருந்தே தமசில் முக்குணக் கலப்பினால் சூக்கும தேகங்கள் தோன்றுவதால், முக்குணங்களும் எல்லா பூதங்களிலும் இருக்கும் என்பது கருத்து. அதனாலேயே முக்குணம் இல்லாத உலகம் மற்றும் பொருள்கள் எதுவுமில்லை)*

**இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்து மைந்தும்**
**பிராணவா யுக்க ளென்றும் பெருந்தொழிற் கருவி யென்றும்**
**பராவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகஞ்**
**சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய வுயிர்கட் கெல்லாம். (31)**

இராசத குணத்தில், வேறு இட்டு எடுத்த கூறு ஐந்தும், ஐந்தும்,
பிராணவாயுக்கள் என்றும், பெரும் தொழில் கருவி என்றும்,
பராவிய பெயராம் ;இந்தப் பதினேழும் இலிங்க தேகம்;
சுர(ர்) ,அசுரர்,நரர்,விலங்காய்த் தோன்றிய,உயிர்கட்கு எல்லாம்.

சூக்கும பூதங்களின் தமசில் இராசத குணப் பங்கில் எடுத்துத் தனித்தனியே வைத்த ஐந்து பங்கும் பெருந் தொழில் கருவிகள்-கர்மேந்திரியம் எனவும் பிராணன் முதலிய வாயுக்கள் என்றும் பெயராகின. அந்தக்கரணம்-2+ஞானேந்திரியம்-5+ பிராணன் முதலிய வாயுக்கள்-5+ கர்மேந்திரியம்-5 ஆக இந்த பதினேழு தத்துவங்களும் தேவர், அசுரர், மானிடர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன எனத் தோன்றிய உயிர்களுக்கு எல்லாம் சூக்கும தேகங்கள் ஆகின.

**இவ்வுடன் மருவுஞ் சீவ னிலங்குதை சதனென் றாவ**
**னிவ்வுடன் மருவு மீச னிரணிய கர்ப்ப னாவ**
**னிவ்வுட லிரண்டு பேர்க்கு மிலிங்கசூக் குமச ரீர**
**மிவ்வுடற் கோச மூன்றா மிதுகனா வவத்தை யாமே. (32)**

இவ்வுடல் மருவும் சீவன் ,இலங்கு தைசதன் என்று ஆவன்;
இவ்வுடல் மருவும் ஈசன் ,இரணிய கர்ப்பன் ஆவன்;
இவ்வுடல் இரண்டு பேர்க்கும், இலிங்க சூக்கும சரீரம்;
இவ்வுடல் கோசம் மூன்றாம்; இது கனா அவத்தையாமே.

இந்த சூக்கும தேகத்தில் பொருந்திய சீவன் 'தைசதன்' என்று பெயர் சொல்லப்படுவான். இந்த சூக்கும தேகத்தில் பொருந்திய ஈசன் 'இரணியகருப்பன்' என்று சொல்லப்படுவான். இப்பதினேழு தத்துவ மயமான தேகமே சீவன், ஈசன் இருவருக்கும் சூக்கும-இலிங்க-தேகம் என்னும் பெயருடையது. இந்த தேகமானது பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம் எனும் மூன்று கோசங்கள் ஆம். இது சொப்பன-கனவு-அவத்தை ஆகும்.

**சூக்கும சடமிம் மட்டுஞ் சொல்லினோ மிப்பாற் றூல**
**மாக்குமா ரோபந் தானு மடைவினின் மொழியக் கேளாய்**
**தாக்குமிவ் வுயிர்க்குத் தூல தநுவும்போ கமுமுண் டாகக்**
**காக்குமவ் வீசன் பஞ்சீ கரணங்கள் செய்தான் றானே. (33)**

சூக்கும சடம் இம்மட்டும் சொல்லினோம்; இப்பால்,
தூலம் ஆக்கும் ஆரோபந்தானும் அடைவினின் மொழியக் கேளாய்;
தாக்கும் இவ்வுயிர்க்குத் தூல தநுவும் , போகமும் உண்டாக,
காக்கும் அவ்வீசன், பஞ்சீகரணங்கள் செய்தான் தானே.

சூக்கும தேக அத்தியாசத்தை-கற்பனையை இதுவரையில் கூறினோம். இனி தூல தேக முதலிய பிரபஞ்சத்தைச் சிருட்டிக்கும் அத்தியாரோபத்தையும்-கற்பனையையும்-கிரமமாகச் சொல்லக் கேட்பாய். சூக்கும தேகங்களில் கூடிய இவ்வுயிர்களுக்கு அவரவர் கருமத்திற்குத் தக்கவாறு தூல தேகமும், அத்தேகங்களுக்கு உரிய போகங்களும் உண்டாதல் பொருட்டு, யாவரையும் காக்கும் அந்த ஈசன், கலப்பில்லாத தனித்தனியான அபஞ்சீகிருத சூக்கும பூதங்களைப் பஞ்சீகரணம் செய்தான்.

**ஐந்துபூ தமும்பத் தாக்கி யவைபாதி நந்நான் காக்கி**
**நந்துதம் பாதி விட்டு நான்கொடு நான்குங் கூட்ட**
**வந்தன தூல பூத மகாபூத மிவற்றி னின்றுந்**
**தந்தன நான்காந் தூல தநுவண்ட புவன போகம். (34)**

ஐந்து பூதமும் பத்து ஆக்கி ,அவை பாதி நந்நான்கு ஆக்கி,
நந்து தம் பாதி விட்டு , நான்கொடு நான்கும் கூட்ட,
வந்தன தூல பூத(ம்) மகா பூதம், இவற்றினின்று
தந்தன நான்காம்; தூல தநு, அண்ட, புவன, போகம்.

ஐந்து பூதங்கள் ஒவ்வொன்றையும் சமமாக இரண்டிரண்டு பாகமாக பாதி பாதியாக ஆக்கி, அவைகளில் ஒரு பாதியை அப்படியே வைத்து மற்ற ஒவ்வொரு பாதியை நான்கு பாகங்களாக- நான்கு அரைக்கால் பகுதிகளாக-பிரித்து, பிரிக்கப்படாத அரைப்பாகத்தை விட்டு, பிரித்த நான்கு அரைக்கால் பகுதிகளுடன் மற்ற நான்கு பூதங்களின் அரைக்கால் பகுதி நான்கினையும் சேர்க்க தூல பூதங்கள் உண்டாயின. பஞ்சீகிருத தூல மகாபூதங்களான இவைகளில் இருந்து புலன்களுக்கு விஷயமான தூல பிரமாண்டமும், பதினான்கு புவனங்களும், சீவர்கள் அனுபவிக்கத் தக்க அன்னம் முதலியனவும், நால்வகை பிறப்பும் ஆகிய தூல தேகம் உண்டாயின.

**தூலமே மருவுஞ் சீவன் சொல்லிய விசுவ னாகுந்**
**தூலமே மருவு மீசன் சொலும்விராட் புருட னாகுந்**
**தூலமே யன்ன கோசந் துன்னுஞ்சாக் கிரவ வத்தை**
**தூலகற் பனையீ தென்று தொகுத்தது மனத்திற் கொள்வாய். (35)**

தூலமே மருவும் சீவன்,சொல்லிய விசுவன் ஆகும்;
தூலமே மருவும் ஈசன்; சொ(ல்)லும் விராட் புருடன் ஆகும் ;
தூலமே அன்ன கோசம் ; துன்னும் சாக்கிர அவத்தை;
தூல கற்பனை ஈது என்று,தொகுத்தது மனத்தில் கொள்வாய்.

தூல தேகத்தில் பொருந்தும் சீவன் 'விசுவன்' எனப்படுவான். அந்த தூலதேக சமட்டியில் பொருந்தும் ஈசன் 'விராட் புருஷன்' எனப்படுவான். தூல தேகமே அன்னமய கோசம் ஆகும். தூல தேகமே சகல புலன்களும் செயல்படும் விழிப்பு-சாக்கிரம்-அவத்தைக்கு இடம் ஆகும். தூல பிரபஞ்ச அத்தியாரோபம்-கற்பனை இது என்று தொகுத்துக்கூறியதை மனதில் கொள்வாய்.

**சீரிய வீச னார்க்குஞ் சீவர்க்கு முபாதி யொன்றே**
**லாரிய குருவே பேத மறிவதெப் படியென் றக்கால்**
**காரிய வுபாதி சீவன் காரண வுபாதி யீசன்**
**வீரிய மிகுச மட்டி வியட்டியாற் பேத மாமே. (36)**

சீரிய ஈசனார்க்கும், சீவர்க்கும் உபாதி ஒன்றேல்,
ஆரிய குருவே! பேதம் அறிவது எப்படி? என்றக்கால்,
காரிய உபாதி சீவன்; காரண உபாதி ஈசன்;
வீரிய(ம்) மிகு சமட்டி, வியட்டியால் பேதமாமே.

ஈசனுக்கும், சீவர்களுக்கும் துலம் சூக்கும உபாதி ஒன்றாக இருக்குமாயின், குருவே! வேறுபாடு அறிவது எவ்வாறு என்று கேட்டால், காரிய உபாதியை உடையவன் சீவன். காரண உபாதியை உடையவன் ஈசன். இவ்விருவருக்கும் மகத்துவம் மிக்க சமட்டி-வியட்டி என்பதனால் பேதம் உளது.

**மரங்கள்போல் வியட்டி பேதம் வனமெனல் சமட்டி பேதஞ்**
**சரங்கடா வரங்கள் பேதத் தனியுடல் வியட்டி யென்பார்**
**பரம்பிய வெல்லாங் கூட்டிப் பார்ப்பதே சமட்டி யென்பா**
**ரிரங்கிய பலசீ வர்க்கு மீசர்க்கும் பேத மீதே.** **(37)**

மரங்கள் போல் வியட்டி பேதம், வனம் எனல் சமட்டி பேதம்;
சரங்கள், தாவரங்கள், பேதத் தனி உடல் வியட்டி என்பார்;
பரம்பிய எல்லாம், கூட்டிப் பார்ப்பதே சமட்டி என்பார்;
இரங்கிய பல சீவர்க்கும், ஈசர்க்கும் பேதம் ஈதே.

தனித்தனி மரங்கள் போன்றது வியட்டி. மரங்கள் அனைத்தும் ஒருங்கே சேர்ந்துள்ள காடு போன்றது சமட்டி. இதுவே பேதம். தாவரங்கள், உயிரினங்களின் தனித்தனி உடல்கள் வியட்டி என்பார். அனைத்து தேகங்களும் உள்ளடக்கியது சமட்டி என்பார். சீவர்களுக்கும் ஈசனுக்கும் இதுவே பேதமாகும். *(தனித்தனி மரங்கள் போன்றது தனித்தனி சீவர்களின் உடல்கள். எல்லா மரங்களும் சேர்ந்துள்ள போது மரங்கள் என்று சொல்வதில்லை, காடு என்று சொல்வது போல் எல்லா தேகங்களும் சேர்ந்த பெரிய தேகம் என்பது சமட்டி)*

**கற்பனை வந்த வாறு காட்டினோங் காண்ப வெல்லாஞ்**
**சொற்பனம் போலு மென்றே துணிந்தவன் ஞானி யாவான்**
**செற்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்தவா காசம் போல**
**வற்புத முத்தி சேரு மபவாத வழியுங் கேளாய்.** **(38)**

கற்பனை வந்தவாறு காட்டினோம் ; காண்ப(ன) எல்லாம்,
சொப்பனம் போலும் என்றே, துணிந்தவன் ஞானி ஆவான்;
செற்புதை மழைக்காலம் போய் , தெளிந்த ஆகாசம் போல,
அற்புத முத்தி சேரும் அபவாத வழியும் கேளாய்.

கற்பனை-அத்தியாரோபம் வந்த வழியைக் கூறினோம். காணப்படுகின்ற அகங்காரம் முதலான பிரபஞ்சம் அனைத்தும் கனவில் தோன்றும் பிரபஞ்சம் போல் மித்தை என்று திடமாகத் துணிந்தவனே ஞானியாவான். நெருங்கிய மழைக்கால மேகம் போய், தெளிந்த ஆகாசம் போல, ஒப்பிடமுடியாத ஆனந்த வடிவமாயுள்ள மோட்சம் அடையக் காரணமான அபவாத வழியும் இனி கேட்பாய்.

**அரவன்று கயிறென் றாற்போ லாளன்று தறியென் றாற்போல்**
**குரவன்சொல் லுபதே சத்தாற் கூறுநூ லொளியைக் கொண்டு**
**புரமன்று புவன மன்று பூதங்க ளன்று ஞானத்**
**திரமென்னும் பிரம மென்று தெளிவதே யபவா தங்காண். (39)**

அரவு அன்று கயிறு என்றாற் போல்,ஆள்அன்று தறி என்றாற் போல்,
குரவன் சொல் உபதேசத்தால் கூறு(ம்) நூல் ஒளியைக் கொண்டு,
புரம் அன்று, புவனம் அன்று, பூதங்கள் அன்று ; ஞானத் திரம் என்னும் பிரமம்
என்று , தெளிவதே அபவாதம் காண்.

இது பாம்பு அன்று கயிறு என்று தெளிந்தது போலவும், இவ்வுருவம் மனிதன் அன்று கட்டையே என்று தெளிந்தது போலவும், குருநாதர் உபதேசத்தாலும், வேதாந்த சாத்திர விசாரணையாலும் இது தேகம் அன்று, இது புவனம் அன்று, இது பூதங்கள் அல்ல, திடமான சொருப ஞானம் என்னும் பிரமமே என்று ஐயம் சிறிதுமின்றி தெளிந்து துணிவதே அபவாதம் ஆகும்.

**படமுநூ லும்போற் செய்த பணியும்பொன் னும்போற் பார்க்கிற்**
**கடமுமண் ணும்போ லொன்றாங் காரிய கார ணங்க**
**ளுடன்முதற் சுபாவ மீறா வொன்றிலொன் றுதித்த வாறே**
**யடைவினி லொடுக்கிக் காண்ப தபவாத வுபாய மாமே. (40)**

படமும் நூலும் போல்,செய்த பணியும் பொன்னும் போல் பார்க்கில்,
கடமும் மண்ணும் போல் ஒன்றாம், காரிய காரணங்கள்;
உடல் முதல் சுபாவம் ஈறாய், ஒன்றில் ஒன்று உதித்தவாறே,
அடைவினில் ஒடுக்கிக் காண்பது , அபவாத உபாயமாமே.

காரியமாகிய சகத்தையும், அதற்கு உபாதான-முதல் காரணமாகிய பிரமத்தையும், சுருதி, தருக்க, அனுபவங்களால் விசாரித்துப் பார்க்கும் போது, காரியமாகிய ஆடையும் அதற்கு உபாதான-முதல் காரணமாகிய நூலும் போலவும், காரியமாகிய ஆபரணமும் அதற்கு உபாதான-முதல் காரணமாகிய பொன்னும் போலவும், காரியமாகிய குடமும் அதற்கு உபாதான-முதல் காரணமாகிய மண்ணும் போலவும், வேறாகத் தோன்றாமல் அபேதம் ஆகும்.அதுபோல தூல தேகம் முதல் அவித்தை-மாயை வரை ஒன்றில் ஒன்று உண்டான படியே கீழிருந்து மேலாக ஒன்றில் ஒன்றை ஒடுக்கிப் பார்ப்பது அபவாத உபாயம் ஆகும்.

**தூடண தமத்தில் வந்த தோற்றமாஞ் சத்தி செய்யு**
**மேடணை விகாரஞ் சொன்னீ ரிரண்டுசத் திகளென் றீரே**
**மூடலாஞ் சத்தி செய்யு மோகமுஞ் சொல்லு மையா**
**கேடறக் குருவே யென்னக் கிருபையோ டருள்செய் வாரே. (41)**

தூடண தமத்தில் வந்த , தோற்றமாம் சத்தி செய்யும்,
ஏடணை விகாரம் சொன்னீர்! இரண்டு சத்திகள் என்றீரே;
மூடலாம் சத்தி செய்யும் மோகமும் சொல்லும் ஐயா !
கேடு அறக் குருவே! என்ன, கிருபையோடு அருள் செய்வாரே.

நிந்திக்கத்தக்க தமோகுணப் பிரதானத்தில்-மாயையில் இருந்தும் உண்டான விட்சேபம்- தோற்றம்- என்கிற சத்தி செய்த ஆகாசம் முதலிய பிரபஞ்ச விகாரத்தை-உற்பத்தியை அருளிச் செய்தீர். தாமத குணம் இரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும் என்றீர். மற்றொரு சத்தியான ஆவரண வடிவ சத்தி செய்கின்ற மயக்கத்தையும் எனது துன்பம் அற ஆசாரியரேஸ உபதேசித்து அருளும் என்று கேட்க, கிருபையோடு அருளுவார்.

**தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத்தாங் கண்ட**
**ஞானிக டமையு மன்றி நாஸ்திந பாதி யென்னு**
**மூனிடை யுயிர்க ளுள்ளத் துணர்விழி குருடாம் வண்ணம்**
**வானிலந் திசைகண் மூடு மழைநிசி யிருள்போன் மூடும். (42)**

தான் நிகர் தனக்காம் ஈசன் தனையும், தங்களைத் தாம் கண்ட
ஞானிகள் தமையும் அன்றி; நாஸ்தி , நபாதி என்னும்
ஊன் இடை உயிர்கள் உள்ளத்து,(உ)ணர்விழி குருடாம் வண்ணம்;
வான்,நிலம், திசைகள் மூடும்; மழை நிசி இருள் போல் மூடும்.

தனக்குத் தானே நிகரான ஈசனையும், சாட்சியாக விளங்கும் நிஜவடிவான தம்மைத் தாம் அறிந்த ஞானிகளையும் தவிர, பிரமம் என்பது இல்லை(நாஸ்தி), அஃது இருந்தால் தெரியாதா(நபாதி) என்று சொல்லும் மற்ற சீவர்களின் அந்தக்கரணத்தின் ஞானப்பார்வை குருடாகும்படி ஆகாயம், பூமி, திசைகளைக் கண்ணுக்குத் தோன்றாதவாறு மறைக்கின்ற கார்கால இராத்திரி இருள் போல மறைக்கும். அதுவே ஆவரண சத்தியின் மோகம் ஆகும்.

**பூன்றமாம் பிரமத் தூக்கும் புறத்துள விகாரங் கட்கு**
**மான்றகூ டத்த னுக்கு மகத்துள விகாரங் கட்குந்**
**தோன்றிய பேதஞ் சற்றுந் தோன்றாமன் மறைத்து மூடு**
**மூன்றிய பவவி யாதி யுண்டாக்கு முபாதி யீதே. (43)**

பூன்றமாம் பிரமத்துக்கும், புறத்து உள விகாரங்கட்கும்;
ஆன்ற கூடத்தனுக்கும் , அகத்து உள விகாரங்கட்கும்;
தோன்றிய பேதம், சற்றும் தோன்றாமல், மறைத்து மூடும்;
ஊன்றிய பவ வியாதி , உண்டாக்கும் உபாதி ஈதே.

பூரணமாகிய பிரமத்திற்கும், புறத்தில் இதுவென்னும் விருத்தி விஷயமாகவுள்ள ஆகாசம் முதலான பிரபஞ்சத்திற்கும், அறிவு வடிவான ஆத்மாவுக்கும், உள்ளே நான் என்னும் விருத்தி விஷயமாகவுள்ள அகங்காரம் முதலியவைகளுக்கும், சுபாவமாக விளங்கும் பேதங்கள் சற்றும் உணர்வு விழிக்கு தோன்றாமல் மறைத்து அப்பேதங்கள் தெரியவொட்டாமல் ஆவரணசத்தி மூடும். கடந்து செல்வதற்கு அரிதான, வலிமை பெற்றுள்ள பிறவியாகிய நோயை வளர்க்கும் உபாதி இந்த ஆவரண சத்தியே.

**ஆதார மறைந்து போனா லாரோப மெங்கே தோன்று**
**மாதார மறையா தாகி லாரோப மிலையே யென்றா**
**லாதாரஞ் சமம்வி சேட மாமென விரண்டு கூறா**
**மாதாரஞ் சமமா மெங்கு மாரோபம் விசேட மாமே. (44)**

ஆதாரம் மறைந்து போனால், ஆரோபம் எங்கே தோன்றும்?
ஆதாரம் மறையாதாகில் , ஆரோபம் இல்லையே என்றால்,
ஆதாரம், சமம் விசேடமாம் என இரண்டு கூறாம் ;
ஆதாரம் சமமாம் எங்கும், ஆரோபம் விசேடமாமே.

அந்தி மாலைப் பொழுதில் ஆதாரமான கயிறு தோன்றாதது போல் ஆவரண சத்தியினால் எல்லாவற்றுக்கும் ஆதாரமான பிரமம் பார்வைக்குத் தோன்றாது மறைந்து போனால், கயிற்றில் பாம்பு போல பிரமத்தில் ஆரோபித்துள்ள ஜகத்து ஓரிடத்தும் உண்டாக மாட்டாதே. மதிய வேளை வெயிலில் கயிறு தெரிவது போல ஆதாரமான பிரமம் மறைக்காமல் தெரியுமாயின், பாம்பு தெரியாதது போல பிரமத்தில் ஆரோபமாக ஜகத்து உண்டாக நியாயம் இல்லையே என்று சந்தேகம் கொண்டால், ஆதாரம் என்பது சமம்-சாமான்யம், விசேடம் என்று இரண்டு பிரிவுகள் உடையது. அதிக தேசம், அதிக காலத்தில்

**சகமதி லிதுவென் சுட்டாஞ் சமானந்தான் மறைந்தி டாது**
**மிகவிது கயிறா மென்னும் விசேடந்தான் மறைந்து போகு**
**மகமெனுஞ் சமானந் தன்னை யஞ்ஞான மறைத்தி டாது**
**பகர்விசே டமதாஞ் சீவன் பரமெனு மதனை மூடும். (45)**

சகமதில், இது என்(னும்) சுட்டால்,சமானந்தான் மறைந்திடாது;
மிக இது கயிறாம் எனும், விசேடந்தான் மறைந்து போகும்;
அகம் எனும் சமானம் தன்னை,அஞ்ஞானம் மறைத்திடாது;
பகர் விசேடமதாம் சீவன், பரம் எனும் அதனை மூடும்.

உலகில் அந்தி மாலைப் பொழுதில் கிடக்கும் கயிறில் தெரியும் தோற்றத்தை இது பாம்பு என்று சொல்லுமிடத்தில் 'இது' என்று சுட்டிக்காட்டப்படும் சமான்ய வடிவம் மறையாது. பாம்பு இல்லை என்று தெளிந்த பின்பு 'இது' கயிறு என்று சொல்லும் போதும் 'இது' காணப்படும். விசேஷ பாகம்-பாம்பு என்பது தான் பெரும்பாலும் மறைந்து போகும். அது போல கற்பித விசேஷமாகச் சொல்லப்படும் சீவ பாவனை தோன்றுமிடத்தில் யான் உளன் என்னும் சாமான்ய வடிவமாகிய ஆதாரத்தை ஆவரண சத்தி மறைக்காது. யான் சேதனம், ஆனந்த, வியாபக, நித்திய சுத்த, நித்திய முத்த வடிவமான பிரமம் என்னும் விசேஷ வடிவத்தையே மறைக்கும்.

**கேவல நிலைதோன் றாமற் கெடுத்தது பஞ்ச கோசஞ்**
**சீவனுஞ் சகத்து மாகிச் செனித்தவிட் சேப மன்றோ**
**வாவ ரணந்தா னேபா ழனர்த்தமென் றுரைத்த தேதோ**
**மேவருங் குருவே யென்று வினாவிடின் மகனே கேளாய். (46)**

கேவல நிலை தோன்றாமல் கெடுத்தது, பஞ்சகோசம்;
சீவனும், சகத்துமாகி செனித்த விட்சேபம் அன்றோ?
ஆவரணந்தானே பாழ் அனர்த்தம்,என்று உரைத்தது ஏதோ?
மேவரும் குருவே! என்று வினாவிடின், மகனே கேளாய்.

சீவ பிரம இக்கிய நிலையைக் கயிறினைப் பாம்பாகக் காட்டுவது போல விளங்க வொட்டாமல் மறைத்துக் கெடுத்தது, அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்தமயம் என்னும் இந்து கோசங்களும் அவற்றின் அபிமானியான சீவனும், ஆகாச முதலான சகத்தாகவும் உண்டான விட்சேப சத்தி அல்லவா! இவ்வண்ணம் இந்த விட்சேப சத்தியே கொடியதாக இருக்க, கிடைத்தற்கு அரிய குருவே! ஆவரண சத்தி தான் பாழாக்கியது என்று சொல்வதற்கு யாது காரணம் என்று கேட்டால், மகனே! கேட்பாய்.

**தோற்றமாஞ் சத்தி தானுந் துன்பமாம் பவமா னாலு**
**மாற்றலான் முத்தி சேர்வார்க் கனுகூல மாகுங் காணீ**
**யூற்றமாம் பகற்கா லம்போ லுபகார நிசியா லுண்டோ**
**மாற்றமென் னுரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப்பொல் லாதே. (47)**

தோற்றமாம் சத்தி தானும், துன்பமாம் பவமானாலும்,
ஆற்றலான் முத்தி சேர்வார்க்கு அனுகூலமாகும் ; காண் நீ !
ஊற்றமாம் பகல் காலம் போல், உபகாரம் நிசியால் உண்டோ ?
மாற்றம் என்ன உரைப்பேன்?மைந்தா! மறைப்பது மிகப் பொல்லாதே.

விட்சேப வடிவ சத்தியானது, விவேகம் இல்லாது அபிமானம் கொண்டதனால் புண்ணிய பாவ வசத்தால் துன்பமயமான பிறவிக்குக் காரணமாய் இருந்தாலும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல் முதலியவற்றால் மோட்சம் அடைய ஆர்வம் கொள்கின்ற விவேகிகளுக்கு குரு, சாத்திரம் மூலமாக சகாயமாகும் என்று அறிவாய். எல்லோருக்கும் முயற்சி செய்வதற்கு உறுதுணையாக இருக்கின்ற பகல் காலத்தைப் போல், இரவு காலத்தினால் உபகாரம் இருக்கமுடியுமா? உன் வினாவுக்கு இந்த உவமானம் இன்றி வேறு என்ன பதில் சொல்வது மைந்தா! மறைக்கின்ற ஆவரண சத்தி தான் மிகவும் பொல்லாதது.

**சுழுத்தியிற் பிரள யத்திற் தோற்றமாஞ் சகங்கண் மாண்டு**
**மழுத்திய பவம்போய் முத்தி யடைந்தவ ரொருவ ருண்டோ**
**முழுத்தவிட் சேப மெல்லா முத்தியிற் கூட்டு கிற்குங்**
**கொழுத்தவா வரண முத்தி கூடாமற் கெடுத்த கேடே. (48)**

சுழுத்தியில், பிரளயத்தில், தோற்றமாம் சகங்கள் மாண்டும்,
அழுத்திய பவம் போய், முத்தி அடைந்தவர் ஒருவர் உண்டோ?
முழுத்த விட்சேபம் எல்லாம், முத்தியில் கூட்டு கிற்கும் ;
கொழுத்த ஆவரணம் , முத்தி கூடாமல் கெடுத்த கேடே.

நாள்தோறும் உண்டாகின்ற சுழுத்தியிலும்-ஆழ்துயிலிலும், பிரளயத்திலும். விட்சேப வடிவ சத்தி உண்டாக்கிய சகங்கள் அழிந்தும், தம்மைத் துன்பத்தில் அழுத்திய பிறவியானது மீண்டும் உண்டாகாமல் நீங்கி மோட்சம் அடைந்தவர் ஒருவரும் இல்லை. ஆதலால் முழுதுமான விட்சேப சத்தி அனைத்தும் மோட்சத்தை அடைய உதவக் கூடியவை. கனமான ஆவரண சத்தி தான் விதையில் முளை போல சீவர்களிடத்தில் இருந்து மோட்சம் அடையாமல் கெடுக்கின்ற கெடுதியைச் செய்வது.

**சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்ற மான**
**சத்தியும் பொய்யே யென்றாற் சத்திசா தனமா வந்த**
**முத்தியும் பொய்யா மென்னின் மோகநித் திரைவி லங்கா**
**னித்திரை தெளியு மாபோ னிருவாண நிலைமெய் யாமே. (49)**

சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்றமான,
சத்தியும் பொய்யே என்றால்? சத்தி சாதனமா வந்த
முத்தியும், பொய்யாம் என்னில், மோக நித்திரை விலங்கால்,
நித்திரை தெளியுமா(ம்) போல், நிருவாண நிலை மெய்யாமே.

கிளிஞ்சலில் ஆரோபமாகப் பிரதிபலித்த வெள்ளி போல், பிரமத்தில் ஆரோபமாய் உண்டான விட்சேப வடிவ சத்தியும் மித்தை-பொய்யே என்று சொன்னால், அந்த விட்சேப சத்தி வடிவமாக குரு, சாத்திர சாதனம் மூலம் உண்டான மோட்சமும் மித்தை என்று சந்தேகம் கொண்டால், பொய்யான-கனவு நித்திரையில் கண்ட புலி முதலிய விலங்கினால் நித்திரை தெளிந்த வழி-சாக்கிரம் விழிப்பு வந்தது-போல மித்தையாகிய விட்சேப சத்தி வடிவ குரு சாத்திர முதலியவற்றால் உண்டாகும் முத்தியும் சத்தியம் ஆகும்.

**இம்பரி னஞ்சை நஞ்சா லிரும்பினை யிரும்பா லெய்யு**
**மம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர்**
**வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்**
**தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே. (50)**

இம்பரில், நஞ்சை நஞ்சால், இரும்பினை இரும்பால்,
எய்யும்அம்பினை அம்பால்,பற்றும் அழுக்கினை அழுக்கால்
மாய்ப்பர்;வம்பியன் மாயை தன்னை, மாயையால் மாய்ப்பர்;
பின்னைத் தம்பமாம் அதுவுங் கூட ,சவம் சுடும் தடி போல் போமே.

இவ்வுலகில் விஷத்தை அதற்குப் பிரதிகூலமான விஷத்தினாலும், இரும்பினை இரும்பாலும், எய்கின்ற அம்பினை அதற்குப் பிரதிகூலமான அம்பினாலும், துணியில் பற்றிய அழுக்கினை உவர் மண்ணாகிய அழுக்கினாலும் கெடுப்பர். அதுபோல ஆத்ம அனாத்ம விசாரம் உடையவர் அசுத்த மாயையைச் சுத்த மாயையால் கெடுப்பர். பின்பு, நின்ற அந்தப் பெரிய மாயையும் கூட பிணம் சுடும் போது சிதறுவதைத் தள்ளிவிடுவதற்கு உதவும் தடி எவ்வாறு பிணத்தைச் சுட்ட பிறகு அந்த நெருப்பிலேயே போட்டு எரிக்கப்படுகிறதோ அவ்வாறு கெடும்.

**இந்தமா யையினாற் சீவர்க் கேழவத் தைகளுண் டாகு**
**மந்தவே ழவத்தை தம்மை யடைவினின் மொழியக் கேளாய்**
**முந்தவஞ் ஞான மூடன் முளைத்தல்கா ணாத ஞானஞ்**
**சந்ததங் கண்ட ஞானந் தழல்கெடல் குளிர்மை யாதல். (51)**

இந்த மாயையினால், சீவர்க்கு ஏழு அவத்தைகள் உண்டாகும்;
அந்த ஏழு அவத்தை தம்மை, அடைவினில் மொழியக் கேளாய்;
முந்த அஞ்ஞானம்,மூடல்,முளைத்தல்,காணாத ஞானம்,
சந்ததம் கண்ட ஞானம், தழல் கெடல், குளிர்மையாதல்.

இந்த மாயையினால் சீவர்க்கு ஏழு அவத்தைகள் உண்டாகும். அந்த ஏழு அவத்தைகளையும் கிரமமாகச் சொல்கிறோம் கேட்பாய். முதலாவது அஞ்ஞானம். (2-வது) ஆவரணம்(மூடல்). (3-வது) விட்சேபம் (தோற்றம்/ முளைத்தல்). (4-வது) காணாத ஞானம் (பரோட்ச ஞானம்). (5-வது) கண்ட ஞானம் (அபரோட்ச ஞானம்) (6-வது) சோக நிவர்த்தி (தழல் கெடல்). (7-வது) குளிர்மை ஆதல் (நிரங்குச திருப்தி/ எல்லையில்லா ஆனந்தம்)

**பிரமமாந் தனைம றந்த பேதைமை யேயஞ் ஞானம்**
**பரனிலை காணோ மென்று பகர்தலா வரண மூட**
**னரனொரு கருத்தாற் சீவ னானென முளைத்த றோற்றங்**
**குரவன்வாக் கியத்தாற் றன்னைக் குறிக்கொளல் பரோட்ச ஞானம் (52)**

பிரமமாம் தனை, மறந்த பேதமையே அஞ்ஞானம் ;
பர நிலை காணோம் என்று, பகர்தல் ஆவரண மூடல்;
நரன் ஒரு கருத்தால், சீவன் நான் என, முளைத்த தோற்றம்;
குரவன் வாக்கியத்தால்,தன்னைக் குறிக்கொளல் பரோட்ச ஞானம்.

விசாரத்திற்கு முன்னர் சம்சார பற்றில் மூழ்கி பிரம வடிவமாகிய சாட்சி வடிவ ஆத்மாவே நான் என்பதை மறந்த அறியாமையே அஞ்ஞானம். பிரமம் இல்லை, காணப்படவில்லை என்று சொல்லுதல் ஆவரணம். நான் மானுடன்- இப்போது கருமங்களைச் செய்வதால் இனிக் கரும பலன்களை அனுபவிப்பேன் என்னும்-ஒரு எண்ணத்தால், சீவன் நான் என்று கருதுதல் முளைத்தல். பின்னர், சத்திய ஞானம் அனந்தம் பிரமம் என்று பிரமத்தின் இருப்பினைக் கூறும் குருவின் உபதேசத்தால், தன்னை ஆத்மாவுக்கு வேறாக இல்லாத பிரமம் என்று அறிந்து கொள்ளல் கண்ட ஞானம்-பரோட்ச ஞானம்.

**தத்துவ விசாரஞ் செய்து சகலசந் தேக மும்போ**
**யத்துவி தந்தா னாத லபரோட்ச ஞான மாகுங்**
**கர்த்தனாஞ் சீவ பேதங் கழிவதே துக்கம் போதன்**
**முத்தனா யெல்லாஞ் செய்து முடிந்ததா நந்த மாமே. (53)**

தத்துவ விசாரம் செய்து, சகல சந்தேகமும் போய்,
அத்துவிதம் தானாதல், அபரோட்ச ஞானமாகும் ;
கர்த்தனாம், சீவ பேதம் கழிவதே, துக்கம் போதல் ;
முத்தனாய், எல்லாம் செய்து முடிந்தது ஆநந்தமாமே.

நீயே பிரமம் என்னும் மகாவாக்கியத்தால் பிரம விசாரம் செய்து, சகல சந்தேகமும் நீங்கி, அத்வைதப் பிரமமே தான் ஆதல் கண்டஞானம்-அபரோட்ச ஞானம் ஆகும். நான் கர்த்தா(/அனுபவிப்பவன்-போக்தா-என்னும் சீவத்துவம் போவதே துக்க நிவர்த்தியாம். சகல துக்கங்களிலிருந்தும் விடுபட்டவனாய்ச் செய்யத்தக்கன அனைத்தும் செய்து, அடையத் தக்கன அனைத்தும் அடைந்தனன் என்னும் சந்தோஷமே ஆனந்தம் ஆகும்.

**இதுநினக் கறியும் வண்ண மிப்படி யொருதிட் டாந்தம்**
**புதுமையாங் கதைகேள் பத்துப் புருடரோ ராற்றை நீந்தி**
**யுதகதீ ரத்தி லேறி யொருவனொன் பதுபே ரெண்ணி**
**யதனொடு தசமன் றானென் றறியாமன் மயங்கி நின்றான். (54)**

இது நினக்கு அறியும் வண்ணம், இப்படி ஒரு திட்டாந்தம்;
புதுமையாம் கதை கேள்; பத்துப் புருடர் ஓர் ஆற்றை நீந்தி,
உதக தீரத்தில் ஏறி , ஒருவன் ஒன்பது பேர் எண்ணி,
அதனொடு,தசமன் தான் என்று அறியாமல்,மயங்கி நின்றான்.

ஆன்மா ஒருவனுக்கே ஏழு அவத்தைகளும் உண்டாம் என்பது உனக்குத் தெளிவாகத் தோன்றும் வகையில் உதாரணமாக விசித்திரமான ஒரு கதையினைக் கேட்பாய். பத்து மனிதர்கள் ஓர் நதியைக் கடந்து, நதியின் கரையில் ஏறி, ஒருவன் மற்ற ஒன்பது பேர்களை எண்ணி, அந்த ஒன்பது பேர்களோடு பத்தாமவன் தானே என்று அறியாமல் பிரமித்து நின்றான்.

**அறியாத மயலஞ் ஞான மவனிலை காணோ மென்றல்**
**பிறியாவா வரண மாகும் பீழைகொண் டழல்விட் சேப**
**நெறியாளன் றசம னுண்டு நிற்கின்றா னென்ற சொல்லைக்**
**குறியாக வெண்ணி நெஞ்சிற் கொள்வது பரோட்ச ஞானம். (55)**

அறியாத மயல் அஞ்ஞானம்;அவன்இ(ல்)லை,காணோம் என்றல்,
பிறியா ஆவரணம் ஆகும்; பீழை கொண்டு அழல் விட்சேபம்;
நெறியாளன், தசமன் உண்டு, நிற்கின்றான், என்ற சொல்லைக்
குறியாக எண்ணி, நெஞ்சில் கொள்வது பரோட்ச ஞானம்.

ஒன்பது மனிதர்களை நன்றாகப் பார்ப்பவனாக இருந்தும் மயக்கத்தினால் ஒன்பது பேர்களை எண்ணிய தன்னைப் பத்தாமவனாக அறியாத மயக்கமே அஞ்ஞானம். பத்தமாவன் ஆகிய தான் பத்தாமவன் இல்லை, காணப்படவில்லை என்று கூறுதல் நீங்காத ஆவரணம் ஆகும். நதியில் பத்தாமவன் இறந்து விட்டான் என்னும் துக்கம் கொண்டு அழுதல் விட்சேபம். அவ்விடம் வந்த ஒருவன், பத்தாமவன் சாகவில்லை, இருக்கின்றான் என்று கூறியதை அந்தக்கரணத்தில் நிச்சயமாகக்கொள்வது காணாத ஞானம்-பரோட்ச ஞானம்.

**புண்ணிய பதிகன் பின்னும் புருடரொன் பதின்மர் தம்மை**
**யெண்ணுநீ தசம னாவை யென்னவே தன்னைக் காணல்**
**கண்ணினிற் கண்ட ஞானங் கரைதல்போ வதுநோய் போத**
**றிண்ணிய மனதி லையந் தெளிதலா நந்த மாமே. (56)**

புண்ணிய பதிகன் பின்னும், புருடர் ஒன்பதின்மர் தம்மை
எண்ணும் நீ, தசமன் ஆவை என்னவே, தன்னைக் காணல்,
கண்ணினில் கண்ட ஞானம்; கரைதல் போவது,நோய் போதல்;
திண்ணிய மனதில், ஐயம் தெளிதல் ஆநந்தமாமே.

தர்மவானாய் நன்மார்க்கத்தில் செல்லும் வந்தவன், பின்னரும் ஒன்பது பேர்களை எண்ணுகின்ற நீயே பத்தாவது மனிதன் என்று உணர்த்தவே, தானே பத்தாமவன் என்பதை நேரடியாகக் கண்டு உணர்தல் கண்டஞானம்-அபரோட்ச ஞானம். பத்தமாவன் நதியில் இறந்து விட்டான் என்று அழுத அழுகை போவதே துக்க நிவர்த்தி. திடமாகிய தனது சித்தத்தில் சந்தேகம் நீங்கி சந்தோஷம் உண்டாதலே ஆனந்தம் ஆகும்.

**தசபுமான் றனைக்கண் டாற்போற் சற்குரு மூர்த்தி யேயென்**
**னிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டு மென்றான்**
**சுசிபெறு மிலக்கி யார்த்தந் தொம்பதந் தற்ப தங்கட்**
**கசிபத வைக்கியஞ் செய்யு மதுசெயு முண்மை கேளாய்.** **(57)**

தச புமான், தனைக் கண்டாற் போல், சற்குரு மூர்த்தியே!
என்நிச வடிவினை, யான் காண, நீர் காட்டல் வேண்டும் என்றான்;
சுசி பெறும் இலக்கியார்த்தம்; தொம் பதம், தத் பதங்கட்கு,
அசி பத ஐக்கியம் செய்யும்; அது செயும் உண்மை கேளாய்.

பத்தாமவன் தன்னைப் பத்தாவது மனிதனாகக் கண்டது போல, சற்குரு மூர்த்தியே! என் நிஜ வடிவமான ஆத்மாவை பிரமமாக யான் அறியும்படி தேவரீர் காட்ட வேண்டும் என்று சீடன் கேட்டுக்கொண்டான். சாமவேத மகாவாக்கியமானது துவம் பதம், தத் பதங்களின் இலட்சியார்த்தம்-உட்பொருளான அது நீ ஆகின்றாய் என்னும் அசிபதப் பொருளான ஐக்கியத்தைப் விட்டுவிடாத லட்சணையால் போதிக்கும். அவ்வாறு போதிக்கும் தத்துவத்தின் அர்த்தத்தைக் கேட்பாய்.

**விண்ணொன்றை மகாவிண் ணென்று மேகவிண் ணென்றும் பாரின்**
**மண்ணொன்று கடவிண் ணென்று மருவிய சலவிண் ணென்று**
**மெண்ணுங்கற் பனைபோ லொன்றே யெங்குமாம் பிரம மீச**
**னண்ணுங்கூ டத்தன் சீவ னான்குசை தந்ய மாமே.** **(58)**

விண் ஒன்றை மகா விண் என்றும்,மேக விண் என்றும்;
பாரில், மண் ஒன்று கட விண் என்றும், மருவிய சல விண் என்றும் ;
எண்ணும் கற்பனை போல் ஒன்றே, எங்குமாம் பிரமம், ஈசன்,
நண்ணும் கூடத்தன், சீவன்; நான்கு சைதன்யமாமே.

ஆகாயம் ஒன்றாய் இருந்த போதிலும், உபாதியினால் மகா ஆகாயம் என்றும், மேகத்தில் நீர் நிறைந்துள்ள போது அதில் பிரதிபலிக்கின்ற ஆகாயத்தை மேக ஆகாயம் என்றும், உலகில் மண்ணால் செய்யப்பட்ட குடத்தில் காலியான இடத்தில் உள்ள ஆகாயத்தைக் குட ஆகாயம் என்றும் குடத்தில் நீர் நிறைந்திருக்கும் போது அந்த நீரில் பிரதிபலிக்கின்ற ஆகாயத்தை ஜல ஆகாயம் என்றும் சொல்கின்ற கற்பனை போல, எங்கும் நிறைந்திருக்கும் ஒரே சைதன்யம் பிரமம், ஈசன், கூடஸ்தன்(ஆத்மா), சீவன் என நான்கு சைதன்யங்களாக ஆகின்றது.

**பூச்சிய வீசன் சீவன் புகல்பத மிரண்டி னுக்கும்**
**வாச்சியம் லட்சி யந்தான் மலமிலாப் பிரம மான்மா**
**காச்சிய பாலி னெய்போற் கலந்தொன்றாங் கடைந்தெ டுக்கு**
**மாச்சிய மென்ன வுன்னை யறிந்துநீ பிறிந்து கொள்ளே. (59)**

பூச்சிய ஈசன் சீவன், புகல் பதம் இரண்டினுக்கும் வாச்சியம்;
லட்சியந்தான், மலம் இல்லாப் பிரமம், ஆன்மா ;
கா(ய்)ச்சிய பாலில் நெய் போல் கலந்து ஒன்றாம்; கடைந்து எடுக்கும்
ஆச்சியம் என்ன? உன்னை அறிந்து , நீ பிறிந்து கொள்ளே.

தத துவம் அசி- நீ அதுவாக இருக்கின்றாய் - என்ற வாக்கியத்தில் தத் என்ற சொல்லின் வாக்கிய அர்த்தம் ஈசுவரன், உட்பொருளான இலட்சிய அர்த்தம் பிரமம் ஆகும். துவம் என்ற சொல்லின் வாக்கிய அர்த்தம் சீவன், உட்பொருளான இலட்சிய அர்த்தம் ஆத்மா என்பதாகும். காய்ச்சப்பட்ட பாலில் நெய் கலந்து ஒன்றாய் இருப்பது போல, அந்த வாச்சிய அதாவது வாக்கிய அர்த்தமும், இலட்சிய அர்த்தமும் கலந்து ஒன்றாய் இருக்கின்றன. மத்தினால் கடைந்தெடுக்கும் நெய்யைப் போல் விவேகத்தால் இலட்சிய அர்த்தமான உன்னை நீ அறிந்து வாச்சியார்த்தத்தில் இருந்தும் பிரித்து உணர்வாய்.

**பிறிவதெப் படியென் றக்காற் பிணமாகு முடனா னென்னு**
**மறிவினைக் கொல்லல் வேண்டு மைம்பூத விகார மன்றோ**
**வெறியதோர் துருத்தி மூக்கின் விடுவது போலுன் மூக்கா**
**லெறிபிரா ணனுநீ யல்லை யிராசத குணவி காரம். (60)**

பிறிவது எப்படி? என்றக்கால், பிணமாகும் உடல் நான் எனும்,
அறிவினைக் கொல்லல் வேண்டும்; ஐம்பூத விகாரமன்றோ?
வெறியது ஓர் துருத்தி மூக்கின் விடுவது போல், உன் மூக்கால்,
எறி பிராணனு(ம்), நீ அல்லை; இராசத குண விகாரம்.

அவ்வாறு வாச்சியார்த்தத்தில் இருந்து பிரிந்து வேறுபட்டு அறிவது எப்படி என்று கேட்டால், பிணமாகச் சிதைந்து போகின்ற அன்னமய கோசமான தூல தேகத்தை ஆத்மா என்று கருதும் பிராந்தியைக் கெடுத்தல் வேண்டும். அத்தேகம் பஞ்ச மகாபூதங்களின் காரியமாக உண்டானதால், வெறுமையான ஒரு தோல் துருத்தி முக்கினால் காற்றை விடுவது போல், உனது முக்கினால் சுவாசிக்கின்ற சடமான பிராணமய கோசமும் நீ அல்ல. இது பஞ்ச பூதங்களின் இராசத குணத்தின் காரியம் என்று தெளியவேண்டும்.

**கரணமா மனது புத்தி கருத்தாவா மவையான் மாவோ**
**தரமுள விரண்டு கோசஞ் சத்துவ குணவி காரம்**
**வரமறு துயிலா நந்த மயனையு நானென் னாதே**
**விரவிய தமவஞ் ஞான விருத்தியின் விகார மாமே. (61)**

கரணமாம் மனது; புத்தி கருத்தவாம்; அவை ஆன்மாவோ?
தரமுள இரண்டு கோசம், சத்துவ குண விகாரம்;
வரம் அறு, துயில் ஆனந்தமயனையும், நான் என்னாதே;
விரவிய, தம அஞ்ஞான விருத்தியின் விகாரமாமே.

கரணமாகிய மனம், கருத்தா ஆகும் புத்தி ஆகியவையும் நீ ஆகமாட்டாய். மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம் ஆகிய இரண்டு கோசங்களும் பஞ்ச பூதத்தின் சத்துவ குணத்தின் காரியமாகும். சிறப்பு இல்லாத சுழுத்தியில் உள்ள ஆனந்த மயனையும் ஆத்மா என்று கருதாதே. இது தமோகுண வடிவ அஞ்ஞான விருத்தியின் காரியம்.

**சத்தொடு சித்தா நந்தஞ் சமந்திரஞ் சாட்சி யேக**
**நித்தியம் வியாபி யான்மா நீயது வாவ றிந்து**
**பொத்தொடு சடந்துக் காதி பொருந்துபே தங்க ளான**
**குத்திர பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியி லாவாய். (62)**

சத்தொடு சித்து, ஆநந்தம், சமம், திரம், சாட்சி, ஏகம்,
நித்தியம், வியாபி, ஆன்மா; நீ அதுவா அறிந்து,
பொத்தொடு சடம் துக்காதி, பொருந்து பேதங்களான,
குத்திர பஞ்ச கோசக் குகை விட்டு, வெளியில் ஆவாய்.

சத்தாய், சித்தாய், ஆனந்தமாய், சமமாய், ஸ்திரமாய், சாட்சியாய், ஏகமாய், நித்தியமாய், வியாபகமாய் பஞ்சகோசங்களுக்கும் ஆதாரமான ஆத்மாவே நீ. அத்தன்மை உடைய ஆன்மாவாகவே உன்னை அறிந்து, மித்தை, சட, துக்க முதலியவை பொருந்துகின்ற மேலே சொன்ன ஆன்ம சுபாவத்திற்கு விபரீத சுபாவங்களால் வஞ்சகத்தை உடைய பஞ்ச கோசங்களாகிய குகையே ஆன்மா என்று கருதும் மயக்கத்தை விட்டு நீங்கி வெளியில் வருவாய்.

**பஞ்சகோ சமும்விட் டப்பாற் பார்க்கின்ற பொழுது பாழே**
**விஞ்சிய ததுவல் லாமல் வேறொன்றுந் தெரியக் காணே**
**னஞ்சன விருளை யோநா னகமென வநுப விப்பேன்**
**வஞ்சமில் குருவே யென்ற மகன்மதி தெளியச் சொல்வார். (63)**

பஞ்சகோசமும் விட்டு, அப்பால் பார்க்கின்ற பொழுது பாழே;
விஞ்சியது அதுவல்லாமல், வேறு ஒன்றும் தெரியக் காணேன்;
அஞ்சன இருளையோ ? நான் அகம் என அனுபவிப்பேன்!
வஞ்சமில் குருவே! என்ற, மகன் மதி தெளியச் சொல்வார்.

அன்னமயம் முதலான ஐந்து கோசங்களையும் விட்டு, அதற்கு அப்பால் பார்க்கின்ற பொழுது சூனியமே மிஞ்சியது. அந்த சூனியத்தை அன்றி வேறே ஒரு பொருளும் தோன்றக் கண்டிலேன். கருமையான இருளையோ-சூனியத்தையோ 'நான்' என்று அனுபவிப்பேன்? வஞ்சம் இல்லா குருவே என்று கேட்ட சீடன் புத்தி தெளியுமாறு உபதேசிப்பார்.

**முன்புக றசமன் புத்தி மோகத்தா லெண்ணி யெண்ணி**
**யொன்பது பேரைக் கண்ட வொருவனாந் தனைக்கா ணாத**
**பின்பவ னிடையிற் கண்ட பெரியபா ழவனோ பாரா**
**யன்புள மகனே காண்ப தடங்கலுங் காண்பா னீயே. (64)**

முன் புகல் தசமன், புத்தி மோகத்தால் எண்ணி எண்ணி,
ஒன்பது பேரைக் கண்ட ஒருவனாம்,தனைக் காணாத பின்பு,
அவன் இடையில் கண்ட, பெரிய பாழ் அவனோ ? பாராய்;
அன்புள மகனே! காண்பது அடங்கலும்,காண்பான் நீயே !

முன்சொன்ன பத்தாமவன் புத்தியில் உள்ள அஞ்ஞானத்தால் திரும்பத் திரும்ப எண்ணி ஒன்பது பேர்களைக் கண்டு பத்தாம் மனிதனான தன்னைப் பத்தாமவனாக் காணாத போது, அவனிடத்தில் காணப்பட்ட பெருஞ்சூனியம் அவன் ஆவானோ? இதனை ஊகித்துப் பாராய். சிரத்தையுள்ள மகனே உன்னால் காணப்படுகின்ற அனைத்தும் சூனியம் உள்பட காண்பவன் ஆன நீயே நீ ஆவாய்.

**தூலசூக் குமவஞ் ஞானந் தோன்றுமூன் றவத்தை தாமுங்**
**காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங் கல்லோ லங்கள்**
**போலவே வந்து வந்து போனவெத் தனையென் பேனா**
**னாலமர் கடவு ளாணை யவைக்கெலாஞ் சாட்சி நீயே. (65)**

தூல, சூக்கும, அஞ்ஞானம் தோன்று(ம்) மூன்று அவத்தை தாமும்;
காலம் ஓர் மூன்றும்,சன்மக் கடல் எழும் கல்லோலங்கள் போலவே,
வந்து வந்து போனவை எத்தனை என்பேன்? நான்;
ஆலமர் கடவுள் ஆணை! அவைக்கு எல்(ல்)லாம் சாட்சி நீயே !

தூல தேகம், சூக்கும தேகம், காரண தேகம் ஆகிய மூவகைத் தேகங்களும், அம்மூவகைத் தேகங்களைப் பற்றிக் கொண்டு தோன்றுகின்ற விழிப்பு, கனவு, ஆழ்துயில் என்னும் மூவகை அவத்தைகளும், காலம் மூன்றும், பிறவியாகிய கடலில் எழுந்து அழியும் அலைகள் போலவே தோன்றித் தோன்றி அழிந்தனவற்றை எவ்வளவு என்று யான் கூறுவேன். கல்லாலின் நிழலில் எழுந்தருளி உபதேசித்த தட்சிணாமூர்த்தியின் மேல் சத்தியம் அவை அனைத்துக்கும் நீயே சாட்சியாம்.

**எல்லாங்கண் டறியு மென்னை யேதுகொண் டறிவே னென்று**
**சொல்லாதே சுயமாஞ் சோதிச் சுடருக்குச் சுடர்வே றுண்டோ**
**பல்லார்முன் றசமன் றன்னைப் பார்ப்பதுந் தனைக்கொண் டேதா**
**னல்லாமற் பதினொன் றானு மவனிடத் துண்டோ பாராய். (66)**

எல்லாம் கண்டு அறியும் என்னை,ஏது கொண்டு அறிவேன்?
என்று சொல்லாதே! சுயமாம் சோதி சுடருக்கு, சுடர் வேறு உண்டோ?
பல்லார் முன்,தசமன் தன்னைப் பார்ப்பதும்,தனைக் கொண்டே தான்;
அல்லாமல், பதினொன்றானும் அவனிடத்து உண்டோ! பாராய்.

சூன்யம் முதலிய சர்வத்தையும் சாட்சியாய் அறியும் என்னை யாதொரு பிரகாசம் கொண்டு அறிவேன் என்று சொல்லாதே. சுயம் பிரகாசமாகிய அறிவுக்குப் பிரகாசம் தர வேறு பிரகாசம் உண்டோ? ஒன்பது பேர்களுக்கு முன்னே பத்தாமவன் தன்னைப் பத்தாமவன் என்று அறிவதும் தன்னாலே அன்றி தனக்கு வேறே பதினொன்றாம் மனிதன் அந்த பத்தாமவனிடத்தில் உண்டோ? ஊகித்துப் பாராய்.

**அறிவுக்கு மறிவு செய்யு மறிவுவே றுண்டென் றெண்ணு**
**மறிவற்ற குதர்க்க மூடர்க் கனவத்தை பலமாய்த் தீரு**
**மறிபடும் பொருணீ யல்லை யறிபடாப் பொருணீ யல்லை**
**யறிபொரு ளாகு முன்னை யநுபவித் தறிவாய் நீயே. (67)**

அறிவுக்கும் அறிவு செய்யும் அறிவு, வேறு உண்டு என்று எண்ணும்,
அறிவற்ற குதர்க்க மூடர்க்கு, அநவத்தை பலமாய்த் தீரும்;
அறிபடும் பொருள் நீ அல்லை; அறிபடாப் பொருள் நீ அல்லை;
அறிபொருள் ஆகும் உன்னை, அனுபவித்து அறிவாய் நீயே.

சுயம் பிரகாசமான ஞானத்திற்கும் அறிவைத்தரும் வேறு பிரகாசம் உண்டு என்று கருதுகின்ற- ஆத்மா சுயம்பிரகாசம் என்ற-அறிவு அற்ற குதர்க்க மூடர்களுக்கு அனவஸ்தா தோஷம் பிரயோஜனமாய் முடியும். அறிபடும் பொருள் நீ அல்ல, அறிபடாப் பொருளும் நீ அல்ல. அறிபடும்-அறிபடாப் பொருளுமாகிய சகலப் பிரபஞ்சத்தையும் சுயம்பிரகாசத்தால் அனுபவரூபமாக அறிகின்ற பொருள் நீயாம். அப்படி சுயம்பிரகாச வடிவினான உன்னை தர்க்கங்களை விட்டு, கர்த்திரு கர்மபாவனை கழன்ற அனுபவத்திருந்து நீ அறிவாய்.

*

**மதுரமாங் கட்டி சுட்ட மாப்பணி யார மெல்லா**
**மதுரமாக் கியவ தற்கு மதுரந்தான் சுபாவ மன்றோ**
**வதுவிது வெனுஞ்ச டங்க ளறிவாக வறிவைத் தந்தே**
**யதுவிது விரண்டு மாகா வகம்பொரு ளறிவாய் நீயே. (68)**

மதுரமாம் கட்டி சுட்ட மாப்பணியாரம் எல்லாம்,மதுரம் ஆக்கிய
அதற்கு, மதுரந்தான் சுபாவம் அன்றோ? அது, இது ,எனும்
சடங்கள், அறிவாக அறிவைத் தந்தே, அது, இது, இரண்டும்
ஆகா(து); அகம் பொருள் அறிவாய் நீயே.

இனிப்பு சுபாவமாகிய வெல்லம் சேர்த்துச் சுட்ட மாவினால் ஆன பணியாரம் எல்லாம் தன் குணமான இனிப்பு சுவை உடையதாகப் பண்ணிய வெல்லத்திற்கு இனிப்பு தான் சுபாவம் அல்லவா! அவ்வாறு அறிபடாப் பொருள் அறிபடும் பொருள் என்னும் சடங்கள் விளங்குகின்ற வண்ணம் அறிவைத் தந்து, அந்த அறிபடாப் பொருள், அறிபடும் பொருள் ஆகிய இரண்டுமாக இல்லாமல் அறிவு வடிவாய் அவற்றிற்கு வேறாக அகம் பதத்தின் அதாவது துவம் பதத்தின் லட்சியார்த்தம்- உட்பொருள் 'நீயே' என்று அறிவாய்.

**இந்தநீ துவம்ப தத்தி னிலட்சியப் பொருளா மென்றும்**
**பந்தமில் பிரம மேதற் பதந்தனி லிலட்சி யார்த்த**
**மந்தமாஞ் சீவ னீச னவர்களே வாச்சி யார்த்தஞ்**
**சந்ததம் பேத மாவார் தமக்கயிக் கியங்கூ டாதே.** **(69)**

இந்த நீ, துவம் பதத்தின் இலட்சியப் பொருளாம் என்றும்,
பந்தமில் பிரமமே, தத் பதந்தனில் இலட்சியார்த்தம்;
அந்தமாம் சீவன், ஈசன் அவர்களே வாச்சியார்த்தம்;
சந்ததம் பேதம் ஆவார்; தமக்கு ஐக்கியம் கூடாதே.

மூன்று தேகங்களுக்கும் பஞ்ச கோசங்களுக்கும் வேறாகவும், மூன்று அவத்தைகளுக்கு சாட்சியாயும் அகம் பதத்தின் லட்சியார்த்தமாயும் உள்ள நீ, துவம் பதத்தின் லட்சியார்த்தமாம். எக்காலத்தும் பந்தம் அற்ற பிரமமே தத் பதத்திற்கு லட்சியார்த்தம்-உட்பொருள். வித்தையினால் நாசமாகும் சீவ ஈசுரரே முறையே அப்பதங்கள் இரண்டிற்கும் வாச்சியார்த்தம். சர்வகாலமும் பரஸ்பரம் பேதம் உடையரான சீவ ஈசுரர்க்கு அபேதம்- ஐக்கியம்-உண்டாகாது.

**பேதமா னதுவுங் கேளாய் பெயராலு மிடங்க ளாலு**
**மோதரு முபாதி யாலு முடலாலு முணர்வி னாலும்**
**பாதலம் விசும்பு போலப் பலதூர மகன்று நிற்ப**
**ராதலா லிவர்க்கெந் நாளு மயிக்கியமென் பதுகூ டாதே.** **(70)**

பேதமான அதுவும் கேளாய் ; பெயராலும், இடங்களாலும்,
ஓதரும் உபாதியாலும் , உடலாலும், உணர்வினாலும்;
பாதலம் விசும்பு போல, பல தூரம் அகன்று நிற்பர்;
ஆதலால், இவர்க்கு எந்நாளும் ஐக்கியம் என்பது கூடாதே.

சீவ ஈசுரர்க்குப் பேதம் உண்டாயிருப்பதையும் கேள். சீவ-ஈசுரர் என்னும் பெயர்களாலும், பிண்டம்-அண்டம் என்னும் இடங்களாலும், சத்து-அசத்து என்று நிச்சயித்து சொல்லுதற்கு அரிய காரிய காரண உபாதிகளாலும், வியட்டி-சமட்டி தேக அபிமானங்களாலும், சிற்றறிவு- பேரறிவு என்ற உணர்வினாலும், பாதாளமும் விண்ணுலகமும் போல வெகுதூரம் வேறுபட்டு சீவரும் ஈசுரரும் நிற்பர். ஆகவே,சீவ ஈசுரர்க்கு எக்காலத்திலும் இக்கியம் உண்டாகாது.

**வடநூல்வல் லவர்கள் சொல்லும் வாசகப் பொருள்சே ராம**
**லிடராகிற் பொருளாம் வண்ண மிலக்கணை யுரையாற் கொள்வார்**
**திடமான வதுவு மூன்றாச் செப்புவார் விட்ட தென்றும்**
**விடலிலா தென்றும் விட்டு விடாததென் றும்பே ராமே. (71)**

வடநூல் வல்லவர்கள், சொல்லும் வாசகப் பொருள் சேராமல்
இடராகில்,பொருளாம் வண்ணம், இலக்கணை உரையால் கொள்வார்;
திடமான அதுவும் மூன்றாச் செப்புவார்; விட்டது என்றும்,
விடல் இலாது என்றும், விட்டு விடாதது என்றும் பேராமே.

வடநூல் வல்லவர்கள் வேதம், புராணங்களில் சொல்லப்படும் வாசகங்களின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முயலும் போது, வாக்கிய அர்த்தம் பொருந்தாமல் விரோதமாகத் தெரியுமாகில், முரண்பாடு இன்றி பொருள் உணரும் படிக்கு இலட்சணா வாக்கியத்தால்- உட்பொருள் அர்த்தத்தைக் கொள்வர். திடமாகிய அந்த இலட்சணையும் மூன்று வகையாகச் சொல்கின்றனர். அவை விட்ட லட்சணை என்றும் விடாத லட்சணை என்றும் விட்டுவிடாத லட்சணை என்றும் சொல்லப்படுகின்றன.

**கங்கையிற் கோஷ மென்றுங் கறுப்புச்சேப் போடு தென்றுந்**
**தங்கிய சோயந் தேவ தத்தனென் றுஞ்சொல் வார்க**
**ளிங்குதா ரணங்க ளாக்கி யிந்தமூன் றுரைக ளாலே**
**துங்கநூல் விரோத மான சொல்லெலாம் பொருளாந் தானே. (72)**

கங்கையில் கோஷம் என்றும், கறுப்பு,சேப்பு ஓடுது என்றும்,
தங்கிய, சோயம் தேவதத்தன் என்றும் சொல்வார்கள்;
இங்கு உதாரணங்கள் ஆக்கி, இந்த மூன்று உரைகளாலே,
துங்க நூல் விரோதமான ,சொல் எ(ல்)லாம் பொருளாம் தானே.

கங்கையில் கிராமம் இருக்கிறது என்றும், கருப்பு நிற்கச் சிவப்பு ஓடுகின்றது என்றும், அந்த இத்தேவதத்தன் என்றும் வாக்கிய அர்த்தங்கள் விரோதமாகத் தெரியும் இடத்தில் இம்மூன்றையும் உதாரணங்களாக வடநூல் வல்லவர்கள் சொல்கின்றனர். இம்முவகை இலட்சணா வாக்கியங்களாலே பெருமை பொருந்திய சாத்திரங்களில் அர்த்தம் முரண்பாடாகத் தோன்றும் வாக்கியங்கள் எல்லாம் முரண்பாடு இன்றி தானே அர்த்தமாகும்.

**பன்னிய சோய மென்னும் பதங்களின் வாச்சி யார்த்த**
**மன்னிய தேசங் கால மவனிவ னென்ப வெல்லாஞ்**
**சொன்னவிவ் விரோதம் விட்டுத் தொடரிலக் கியம்வி டாம**
**லுன்னிடிற் றேவ தத்த னொருவனை வெளியாக் காட்டும்.** (73)

பன்னிய சோயம் என்னும் பதங்களின், வாச்சியார்த்தம்;
அந்நிய தேசம், காலம், அவன், இவன் என்பவெல்லாம்;
சொன்ன இவ்விரோதம் விட்டு, தொடர் இலக்கியம் விடாமல்,
உன்னிடில் தேவதத்தன் ஒருவனை, வெளியாக் காட்டும்.

மேலே மூன்றாவதாக சொல்லிய அந்த இத்தேவதத்தன் என்பதில், அவன் இவன் என்னும் பதங்களில் காணப்படும் தூர தேசம், சமீப தேசம், கடந்த காலம், நிகழ்காலம், அந்த தேவதத்தன், இந்த தேவதத்தன் என்பன அனைத்தும் வாச்சியார்த்தம். இவைகள் ஒன்றற்கொன்று விரோதம் உள்ளதை விட்டு, அவைகளின் உட்பொருளான இலட்சியார்த்தம் விடாமல் ஆலோசித்துப் பார்க்கில், தேவதத்தன் என்னும் ஓர் புருஷனை விரோதம் இல்லாமல் பிரத்தியட்சமாகக் காட்டும். *(நாற்பது வருடங்களுக்கு முன்பு பத்ராஜலத்தில் பார்த்த) அந்த ராமனே இப்போது சென்னையில் நம் முன்னால் நிற்கும் இந்த ராமன் ஆவான் என்று சொல்லும் போது, அந்தக் காலம், அந்த இடம், வாலிபவயது ஆகியவை 40 ஆண்டுகளுக்கு முந்தைய ராமனைக் குறிப்பது. இந்தக் காலம், இந்த இடம், முதியவயது ஆகியவை இன்றைய நாளைக் குறிப்பது. ஆனால், அந்த-இந்த இவற்றை நீக்கி விட்டால், 'ராமன்' - முன்பு பார்த்தவனும், முன்னால் நிற்பவனும் - ஒருவனே என்பதைப் புரிந்து கொள்கிறோம். அந்த-இந்த பதங்களை விட்டு விட்டும், ராமன் என்ற பதத்தை விடாமலும் பொருள் கொள்வது விட்டுவிடாத லட்சணை ஆகும்)*

**தத்துவ மெனும்ப தங்கள் பிரமமாய்ச் சாட்சி யான**
**வத்துவை விடாமற் பேத வாச்சியார்த் தத்தை விட்டு**
**நித்தமு மதுநீ யாகு நீயது வாகு மென்னு**
**மத்தமு மகண்ட மென்றே யசிபத வைக்கியங் காட்டும்.** (74)

தத்துவம் எனும் பதங்கள், பிரமமாய், சாட்சியான,
வத்துவை விடாமல், பேத வாச்சியார்த்தத்தை விட்டு,
நித்தமும் அது நீயாகும், நீ அதுவாகும் என்னும் அ(ர்)த்தமும்,
அகண்டம் என்றே அசிபத ஐக்கியம் காட்டும்.

(சாம வேத மகாவாக்கியம் - தத் துவம் எனும் பதங்கள்) அது நீ என்னும் பதங்களின் பிரமமாயும், சாட்சியாயும் உள்ள சேதன பாகமான (இலட்சியார்தத்தை) விடாமல், பேத தர்மங்களை உடைய வாச்சியார்த்த பாகங்களை விடுத்து, சர்வ காலமும் பிரமமே நீயாம், நீயே பிரமம் ஆம் என்று சொல்லும் அசிபதத்தின் பொருளும் ஏகமே என்று ஐக்கியத்தை உணர்த்துகின்றது.

**கடநீரின் மேகநீரிற் கண்டவா னிரண்டும் பொய்யே**
**குடவானும் பெரிய வானுங் கூடியொன் றாமெப் போது**
**மிடமான பிரமஞ் சாட்சி யிரண்டுமெப் போது மேகந்**
**திடமாகச் சுவாநு பூதி சிவோகமென் றிருந்தி டாயே. (75)**

கட நீரில், மேக நீரில், கண்ட வான் இரண்டும் பொய்யே;
குட வானும், பெரிய வானும் கூடி, ஒன்றாம் எப்போதும்;
இடமான பிரமம், சாட்சி இரண்டும், எப்போதும் ஏகம்;
திடமாகச் சுவானுபூதி, சிவோகம் என்று இருந்திடாயே.

குட நீரிலும், மேக நீரிலும் பிரதிபிம்பத்துள்ள ஜல ஆகாசம், மேக ஆகாசம் இரண்டும் உபாதிகளால் கற்பிதம் என்பதால் மித்தை-பொய்யே. காலியாக உள்ள குடத்தின் ஆகாசமும் மகா ஆகாசமும் எப்போதும் எப்படி ஏகமோ அப்படி வியாபகமான பிரமமும், சாட்சியும் இரண்டும் சர்வகாலமும் ஐக்கியமாம். இது திடமாதல் பொருட்டு, சிவோகம்-சிவமே நான் - நானே சிவம் என்று தெளிந்து-நிதித்தியாசனம் மூலமாக உண்டாகும் அத்வைத வடிவமான-பிரமானுபூதியில் இருப்பாய்.

**தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமற்**
**பஞ்சகோ சமுங்க டந்து பாழையுந் தள்ளி யுள்ளிற்**
**கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடத்தன் பிரம மென்னு**
**நெஞ்சமு நழுவி யொன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான். (76)**

தஞ்சமாம் குருவும் சொன்ன, தத்துவ வழி தப்பாமல்,
பஞ்ச கோசமும் கடந்து, பாழையும் தள்ளி, உள்ளில்
கொஞ்சமாம் இருப்பும் விட்டு, கூடத்தன் ,பிரமம் என்னும்
நெஞ்சமும் நழுவி, ஒன்றாய் நின்ற பூரணத்தைக் கண்டான்.

தனக்குப் பெருந்துணையாகிய ஆசாரியர் அருளிய தத்துவ வழி தவறாமல், அன்னமயம் முதல் ஆனந்தமயம் வரை பஞ்சகோசமும் தானல்ல என்று தள்ளி, அவைகளுக்கு வேறாக பஞ்சகோசங்களின் அபாவமான அதாவது பஞ்சகோசங்கள் இல்லாத இடமான சூனியத்தையும் ஒழித்து, அகத்தில் பஞ்சகோச சூனியங்களைக் காணுகின்ற அனுபவ வடிவ சாட்சி தான் என்றிருந்த சிறிதாகிய நிலையையும் விடுத்து, கூடத்தன் பிரமம் என்ற நினைப்பும் நழுவி, ஒன்றாய் நின்ற பரிபூரணமான பிரமத்தை அனுபவித்தான்.

**அனுபவா நந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகித்**
**தனுகர ணங்க ளாதி சகலமு மிறந்து சித்தாய்**
**மனதுபூ ரணமாய்த் தேக மானசற் குருவுங் காண**
**நனவினிற் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவ மானான். (77)**

அனுபவ ஆனந்த வெள்ளத்து அழுந்தியே ,அகண்டமாகி,
தனு, கரணங்களாதி சகலமும் இறந்து, சித்தாய்,
மனது பூரணமாய், தேகமான சற்குருவும் காண,
நனவினில் சுழுத்தியாகி, நன்மகன் சுபாவம் ஆனான்.

அநுபூதி வடிவ பிரமானந்த சமுத்திரத்தில் அழுந்தி, பேதமின்றிய அகண்டம் ஆகி, தேகம், இந்திரியங்கள் முதலிய அனைத்து நாமருபங்கள் ஒழிந்து சித்து ருபமாய், மனம் பரிபூரணமாய், திருவுருவான சற்குருவும் பார்த்தருள நனவில் சுழுத்தி உடையவனாய் நல்ல சீடன் ஆனவன் தனது சுபாவ வடிவமாயினான்.

**அளிமக னெடும்போ திவ்வா றானபின் மனது மெள்ள**
**வெளியில்வந் திடவு ணர்ந்தான் விமலதே சிகனைக் கண்டான்**
**றுளிவிழி சொரியப் பாதந் தொழுதுவீழ்ந் தெழுந்து சூழ்ந்தான்**
**குளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான். (78)**

அளி மகன் நெடும் போது இவ்வாறான பின், மனது மெள்ள
வெளியில் வந்திட உணர்ந்தான்; விமல தேசிகனைக் கண்டான்;
துளி விழி சொரிய, பாதம் தொழுது, வீழ்ந்து,எழுந்து ,சூழ்ந்தான்;
குளிர்முகச் சுவாமி கேட்க, கும்பிட்டு ,நின்று சொல்வான்.

அன்புள்ள சீடன் வெகுநேரம் இவ்வாறு இருந்து அதன் பின்னே, அந்தக்கரணமானது கிரமமாக வெளியில் வர அறிந்து, அஞ்ஞான மலம் அற்ற குருவைத் தரிசித்து, ஆனந்தக் கண்ணீர் வடிய, குருவின் பாதங்களில் விழுந்து வணங்கி, எழுந்து வலம் செய்து, கைகூப்பி நின்று, குளிர்ச்சி பொருந்திய குருசுவாமியிடம் சொல்வான்.

**ஐயனே யெனதுள் ளேநின் றநந்தசன் மங்க ளாண்ட**
**மெய்யனே யுபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி**
**யுய்யவே முக்தி நல்கு முதவிக்கோ ருதவி நாயேன்**
**செய்யுமா றொன்றுங் காணேன் றிருவடி போற்றி போற்றி. (79)**

ஐயனே! எனது உள்ளே நின்று, அனந்த சென்மங்கள் ஆண்ட
மெய்யனே! உபதேசிக்க, வெளி வந்த குருவே போற்றி!
உய்யவே, முக்தி நல்கும் உதவிக்கு ஓர் உதவி, நாயேன்
செய்யுமாறு, ஒன்றும் காணேன்; திருவடி போற்றி! போற்றி !

ஐயனே! எனது உள்ளே நின்று, எண்ணிலாத பிறவிகளில் செய்த கர்மங்களினால் அந்தக் கரணங்களில் உள்ள மல தோஷ விட்சேப தோஷங்களைப் போக்கி என்னை ஆண்டருளிய மெய்யனே! ஆவரண தோஷம் நீங்கி எனது நிஜவடிவத்தை யான் அறிந்து ஆனந்தம் அடைய உபதேசிக்க எழுந்தருளிய குருவே போற்றி! யான் ஈடேற மோட்சத்தை ஞானவாயிலாகத் தந்தருளிய இணையற்ற உதவிக்கு நாயேன் கைம்மாறு செய்யும் வகை ஒன்றும் காணேன். திருவடி போற்றி! போற்றி!

**சிட்டனிவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்**
**கிட்டவா வெனவி ருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்**
**துட்டமாந் தடைகண் மூன்றுந் தொடராமற் சொரூப ஞான**
**நிட்டனா யிருக்கி னீதே நீசெயு முதவி யாமே. (80)**

சிட்டன் இவ்வாறு கூற; தேசிகர் மகிழ்ந்து நோக்கி,
கிட்டவா என இருத்தி, கிருபையோடு அருளிச் செய்வார்;
துட்டமாம் தடைகள் மூன்றும் தொடராமல், சொருப ஞான
நிட்டனாய் இருக்கில், ஈதே நீ செயும் உதவியாமே.

சீடன் இவ்வாறு கூற, ஆசாரியர் சந்தோஷம் கொண்டு அவனை நோக்கி, அருகே வாவென்று அழைத்து இருத்தி, கருணையோடு அருளிச் செய்வார். தீமையாகிய தடைகள்-பிரதிபந்தம்-மூன்றும் உன்னைப் பின்தொடர்ந்து வராமல் சொருப ஞானத்தில் நிலைத்து இருப்பாய் ஆயின், அதுவே நீ எனக்கு செய்யும் உதவி ஆகும்.

**நீநானென் றிரண்டி லாம னிறைந்தபூ ரணமா யெங்கு**
**நானாகத் தெளிந்த ஞான நழுவுமோ குருவே யென்றான்**
**றானாகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற் றோன்று**
**மானாலுந் தடைக ளுண்டே லநுபவ முறைத்தி டாதே. (81)**

நீ,நான் என்ற இரண்டு(ம்) இல்(ல்)லாமல்,நிறைந்த பூரணமாய்,
எங்கும் நானாகத் தெளிந்த ஞானம், நழுவுமோ குருவே?என்றான்;
தானாகும் பிரம ரூபம், சற்குரு, நூலால் தோன்றும்; ஆனாலும் தடைகள்
உண்டேல் ,அனுபவம் உறைத்திடாதே.

தத் பதத்தின் உட்பொருளான 'நீ' பிரமம் என்றும், துவம் பதத்தின் உட்பொருளான 'நான்' கூடத்தன் என்றும் கருதுகின்ற இந்த துவைத கற்பனையும் இல்லாமல் நிறைந்த பரிபூரணமாய் எவ்விடத்தும் யான் ஒருவனே உளன் என்று அனுபவமாகத் தெளிந்த ஞானமானது நழுவுமோ ஆசாரியரே என்று சீடன் கேட்டான். தன் மயமாகும் பிரம வடிவமானது சற்குரு உபதேசத் தாலும் சாத்திர விசாரத்தாலும் அனுபவம் ஆகும். ஆனாலும் தடைகள்-பிரதிபந்தம்- இருக்குமானால், அந்த அனுபவம் திடப்பட மாட்டாது.

**தடையெவை யெனிலஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்**
**படர்செயு மிந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே**
**யுடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமி வற்றைத்**
**திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்த றெளித லாலே. (82)**

தடை எவை எனில்? அஞ்ஞான(ம்), சந்தேக(ம்), விபரீதங்கள்;
படர் செ(ய்)யும் இந்த மூன்றும், பல சன்மப் பழக்கத்தாலே,
உடன் உடன் வரும்;வந்தக்கால்,உயர் ஞானம் கெடும்; இவற்றைத்
திடமுடன் கெடுப்பாய்; கேட்டல் ,சிந்தித்தல், தெளிதலாலே.

தடை எவை எனில், அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் ஆகும். துன்பத்தைத் தருகின்ற இம்முவகைத் தடைகளும் முன் பல சன்மங்களில் பழகிவந்த பரிச்சயத்தினால் அடிக்கடி வரும். அவை உண்டாயின், மேலான சீவ பிரம இக்கிய ஞானம் பலன்கொடுக்காமல் போய்விடும். இவற்றை கேட்டல் (சிரவணம்), சிந்தித்தல் (மனனம்), தெளிதல் (நிதித்தியாசனம்) ஆகிய இவைகளினால் திடமாக இருந்து நாசம் செய்வாய்.

**அக்கினிக் கட்டுப் பட்டா லற்பமுஞ் சுடமாட் டாது**
**மக்கின ஞானத் தாலே வந்தபந் தமும்வே வாது**
**சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்த றெளித லாலே**
**விக்கின மடஞ்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே.** (83)

அக்கினிக் கட்டுப்பட்டால், அற்பமும் சுட மாட்டாது;
மக்கின ஞானத்தாலே, வந்த பந்தமும் வேவாது;
சிக்கெனப் பழகிக் கேட்டல், சிந்தித்தல், தெளிதலாலே;
விக்கின மடம், சந்தேகம், விபரீதம் போக்குவாயே.

அக்கினியானது மணிமந்திரங்களாலே அடக்கப்படுமாயின் கொஞ்சமும் சுடமாட்டாது. அது போல அஞ்ஞான சந்தேக விபரீதங்களால் அமிழ்த்தப்பட்ட தத்துவ ஞானமாகிய அக்கினியினால் அநாதி காலமாக தொடர்ந்து வந்துள்ள கர்த்தா தன்மை முதலான பந்தமும் வேகாது. உறுதியாக பயிற்சி செய்து சிரவணம், மனனம், நிதித்தியாசனங்களாலே மோட்சத்திற்குத் தடையாக உள்ள அஞ்ஞான சந்தேக விபரீதங்களை ஒழிப்பாய்.

**பிரமபா வனையை மூடிப் பேதங்காட் டுவதஞ் ஞானங்**
**குரவன்வாக் கியநம் பாமற் குழம்புவ தாஞ்சந் தேகந்**
**திரமறு சகமெய் யென்றுந் தேகநா னென்று முள்ளே**
**விரவிய மோகந் தானே விபரீத மென்பர் மேலோர்.** (84)

பிரம பாவனையை மூடி ,பேதம் காட்டுவது அஞ்ஞானம்;
குரவன் வாக்கிய(ம்) நம்பாமல், குழம்புவதாம் சந்தேகம்;
திரம் அறு சகம் மெய் என்றும்,தேக(ம்) நான் என்றும்,
உள்ளே விரவிய மோகந் தானே, விபரீதம் என்பர் மேலோர்.

பிரம பாவனையை மறைத்து நான் பிரமம் அல்ல என்று பேதத்தை நினைப்பூட்டுவது அஞ்ஞானம். நீ பிரமம் என்று ஆசாரியர் கூறிய வாக்கியத்தை நம்பாமல் நான் பிரமமோ இல்லையோ என்று குழம்புவது சந்தேகம். நிலையின்றிய சகத்தைச் சத்தியம் என்றும் அனாத்மாவாகிய தேகத்தை நான் என்றும் உள்ளத்தில் படர்ந்த மோகமே விபரீதம் என்பர் மேலோர்.

**தத்துவ வநுபோ கந்தான் சாதித்தல் கேட்ட லென்பா**
**ரொத்துள பொருளூ கத்தா லுசாவல்சிந் தித்த லென்பார்**
**சித்தமே காந்த மான தெரிசனந் தெளித லென்பார்**
**நித்தமிப் படிசெய் தக்கா னிருவாணம் பெறுவாய் நீயே. (85)**

தத்துவ அனுபோகந்தான், சாதித்தல், கேட்டல் என்பார்;
ஒத்துள பொருள் ஊகத்தால் உசாவல், சிந்தித்தல் என்பார்;
சித்தம் ஏகாந்தமான தெரிசனம்,தெளிதல் என்பார்;
நித்தம் இப்படி செய்தக்கால், நிருவாணம் பெறுவாய் நீயே.

பிரமத்தின் தொடர் நினைவாகிய விருத்தியை வேதாந்த அர்த்த சிந்தனையினால் அடிக்கடி எண்ணி நிலைபெறச் செய்தல் சிரவணம் என்பர். சிரவணத்தால் அறிந்த பொருளை அபேதத்தைக் கொடுப்பதும் பேதத்தைப் போக்குவதுமான உத்தியினால் ஆராய்தலைச் சிந்தித்தல்(மனனம்) என்பர். சித்தம் பிரமத்தின் நினைவு மாத்திரமாக நிற்கும் அனுபவத்தைத் தெளிதல் (நிதித்தியாசனம்) என்பர். நாள்தோறும் இவ்வாறு சிரவணம் முதலியவற்றை அனுட்டித்து வந்தால் அஞ்ஞானம் முதலான தடைகள் நீங்கி நீ மோட்சம் அடைவாய்.

**எத்தனை நாண்ஞா தாவு ஞானமு மிருக்கு முன்பா**
**லத்தனை நாளும் வேண்டு மப்பாலோர் செயலும் வேண்டா**
**நித்தமும் வெளிபோற் பற்றா ஞேயமாத் திரமாய்ச் சீவன்**
**முத்தரா னவர் விதேக முத்திபெற் றிருப்பா ரென்றும். (86)**

எத்தனை நாள் ஞாதாவும், ஞானமும் இருக்கும் உன்பால்?
அத்தனை நாளும் வேண்டும்; அப்பால் ஓர் செயலும் வேண்டா(ம்);
நித்தமும் வெளி போல் பற்றா(து),ஞேய(ம்) மாத்திரமாய்,
சீவன்முத்தர் ஆனவர், விதேக முத்தி பெற்றிருப்பார் என்றும்.

எவ்வளவு காலம் வரையில் ஞானத்தின் கர்த்தாவாகிய அந்தக்கரணமும், அந்தக்கரண விருத்தி வடிவ ஞானமும் உன்னிடத்திருக்குமோ அவ்வளவு காலமும் சிரவண முதலானவற்றின் பயிற்சி இருக்க வேண்டும். காண்பான், காட்சி என்னும் விகற்பங்கள் நீங்கி சீவ பிரம ஐக்கிய ஞானத்திற்கு விஷயமான சிதாநந்த மாத்திரமாய் நின்ற பின்னர், சிரவணம் முதலான ஒரு அனுஷ்டானமும் தேவையில்லை. நாள்தோறும் ஆகாயம் போல அசங்க சிதான்மா மாத்திரமாய் சீவன் முத்தர் ஆயினோர் பிராரர்த்த நாசத்தில் விதேக முத்தி அடைந்து என்றும் அதுவாய் இருப்பர்.

**ஞானமார் சீவன் முத்தர் நால்வகை யாவர் கேளாய்**
**வானிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்ட**
**னானவர் நாம மாகு மவர்களிற் பிரம வித்தின்**
**றானமு மற்றை மூவர் தாரதம் மியமுஞ் சொல்வேன். (87)**

ஞானமார் சீவன் முத்தர்,நால்வகை ஆவர் கேளாய்;
வான் நிகர் பிரமவித்து, வரன்,வரியான், வரிட்டன் ஆனவர்
நாமம் ஆகும்; அவர்களில்,பிரமவித்தின் (ஸ்)தானமும்,
மற்றை மூவர் தாரதம்மியமும் சொல்வேன்.

ஞானம் நிறைந்த சீவன் முத்தர்கள் நான்கு வகையினர் கேட்பாய். ஆகாயத்தை ஒத்த பிரம வித்து, வரன், வரியான், வரிட்டன் என்பவை அவர்களின் நாமங்கள். அவர்களில் பிரமவித்தின் அனுபவ நிலையையும், ஏனைய மூவருடைய தாரதம்மியத்தையும் கூறுகின்றேன்.

**தீரராய் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியு முன்னம்**
**வாரமா யிருந்த தங்கள் வருணமாச் சிரமஞ் சொன்ன**
**பாரகா ரியமா னாலும் பலர்க்குப கார மாக**
**நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர். (88)**

தீரராய், பிரமவித்தாய்,தெளிந்தவர்,தெளியு(ம்) முன்னம்
வாரமாய் இருந்த ,தங்கள் வருண(ம்),ஆச்சிரமம் சொன்ன
பார காரியம் ஆனாலும், பலர்க்கு உபகாரமாக,
நேரதாச் செய்வர்; தீர்ந்த நிலை விடார் சீவன்முத்தர்.

மன தைரியம் உடையராய் பிரமஞானிகளாய்த் தெளிந்தவர், அப்படி தெளிவதற்கு முன்னர் தங்களுடைய வருண ஆசிரமங்களைப் பற்றி சாத்திரங்களில் சொல்லப்பட்டுள்ள கருமங்கள் செய்வதற்குக் கஷ்டமாக இருந்தாலும் அக்கருமங்களைப் பலருக்கும் உபகாரமாக சாத்திரத்திற்கு முரண்படாமல் நேர்மையாகச் செய்பவர். அப்படி செய்தபோதிலும் வேதம் சொல்லிய அத்வைத நிச்சயத்தை விடாதவர்கள் சீவன் முத்தர்-வாழ்கின்ற போதே முத்தராக உள்ளோர்.

**காமமா திகள்வந் தாலுங் கணத்திற்போ மனத்திற் பற்றார்**
**தாமரை யிலைத்தண் ணீர்போற் சகத்தொடுங் கூடி வாழ்வார்**
**பாமர ரெனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்**
**ஊமரு மாவா ருள்ளத் துவகையாஞ் சீவன் முத்தர்.** **(89)**

காமமாதிகள் வந்தாலும், கணத்தில் போம், மனத்தில் பற்றார்;
தாமரை இலைத் தண்ணீர் போல், சகத்தொடும் கூடி வாழ்வார்;
பாமரர் எனக் காண்பிப்பார்;பண்டிதத் திறமைக் காட்டார்;
ஊமரும் ஆவார்; உள்ளத்து உவகையாம் சீவன்முத்தர்.

பிராரர்த்தத்தின் வலிமையால் காமம் முதலியவை எழுந்தாலும்-அவை உடனே திடமான வைராக்கியம் முதலிய சுத்த வாசனை முயற்சி இன்றியே எழுவ்தால்-கணத்தில் போய்விடும். அஞ்ஞானிகளைப் போல் அவைகளை அந்தக்கரணத்தில் வாசனையாகப் பற்ற விடார். தாமரை இலை தண்ணீரில் இருந்தாலும் தண்ணீர் ஒட்டாதது போல் உலக விவகாரத்தில் கூடியிருந்தாலும் பற்றாது வாழ்வர். சாதாரண மக்களைப் போலக் காட்டிக்கொள்வார். பண்டிதத் திறமையைக் காட்ட மாட்டார்கள். சலனம் எழாமையால் மௌனமாய் இருப்பர். உள்ளத்தில் எல்லையற்ற திருப்தி உடையவர் சீவன் முத்தர்.

**பேதகன் மத்தால் வந்த பிராரத்த நாநா வாகு**
**மாதலால் விவகா ரங்க ளவரவர்க் காவ வாகும்**
**மாதவஞ் செயினுஞ் செய்வார் வாணிபஞ் செயினுஞ் செய்வார்**
**பூதலம் புரப்பா ரையம் புகுந்துண்பார் சீவன் முத்தர்.** **(90)**

பேத கன்(ர)மத்தால் வந்த பிராரத்த(ம்), நாநா ஆகும்;
ஆதலால் விவகாரங்கள், அவரவர்க்கு ஆவவாகும்;
மாதவம் செ(ய்)யினும் செய்வார்; வாணிபம் செ(ய்)யினும் செய்வார்;
பூதலம் புரப்பார் ; ஐயம் புகுந்து உண்பார் சீவன்முத்தர்.

கடந்த கால வினையாகிய சஞ்சித வினையின் பேதத்தால் வந்த பிராரர்த்தம் பலவிதமாகும். ஆதலால் விவகாரங்களும் அவரவர் பிராரர்த்த வினைக்குத் தகுந்தவாறு அமையும். பெரிய தவத்தினைச் செய்ய நேர்ந்தாலும் செய்வர். வியாபாரம் செய்ய நேர்ந்தாலும் செய்வர். பூதலம் காக்க நேர்ந்தாலும் பூமியைப் பரிபாலனம் செய்வர். பிச்சை எடுத்து உண்ண நேர்ந்தாலும் உண்பர் சீவன் முத்தர்.

**சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்மு**
**னின்றது புசிப்பார் வெய்யி னிலவாய்விண் விழுது வீழ்ந்து**
**பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா வொன்றும் பாரார்**
**நன்றுதீ தென்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர்.** **(91)**

சென்றது கருதார்; நாளைச் சேர்வது நினையார்; கண்முன்
நின்றது புசிப்பார்; வெய்யில் நிலவாய்; விண் விழுது வீழ்ந்து;
பொன்றின சவம் வாழ்ந்தாலும், புதுமையா(ய்) ஒன்றும் பாரார்;
நன்று, தீது என்னார்; சாட்சி நடுவான சீவன் முத்தர்.

சோக மோகங்கள் இல்லாமையால் போனதைப்பற்றி நினையார்கள். வருங்காலத்தில் இனி வர இருப்பதைப் பற்றியும் நினையார்கள். நிகழ்காலத்தில் கண் முன்னே பிராரர்த்தத்தினால் வந்து நிற்கின்ற போகங்களைப் புசிப்பார். சூரிய ஒளியான வெயில் சந்திர ஒளியைப் போல் குளிர்ச்சியாகி, ஆகாசத்தில் இருந்து விண்கல் விழுந்து இறந்து போன சடலம் பிழைத்தாலும் ஆச்சரியமாக ஒன்றையும் பார்க்கமாட்டார்கள். ஒன்றை நன்று என்றும், மற்றொன்றைத் தீது என்றும் சொல்லாதவர்கள். சாட்சியாய் நடு நிற்கும் சீவன் முத்தர்.

**பின்னைமூ வரிலி ரண்டு பேர்களுஞ் சமாதி யோகந்**
**தன்னையுற் றிருப்பார் தேக சஞ்சார நிமித்தந் தானா**
**யுன்னுவோன் வரன்வேற் றோரா லுணர்பவன் வரியா னாகு**
**மன்னியர் தம்மாற் றன்னா லறியாதோன் வரிட்ட னாமே.** **(92)**

பின்னை மூவரில், இரண்டு பேர்களும் சமாதி யோகந் தன்னை
உற்றிருப்பார்; தேக சஞ்சார நிமித்தந் தானாய் உன்னுவோன்
வரன்;வேற்றோரால் உணர்பவன் வரியான் ஆகும்;
அன்னியர் தம்மால், தன்னால் அறியாதோன் வரிட்டனாமே.

வரன், வரியான், வரிட்டன் என்னும் ஏனைய மூவர்களில் வரன், வரியான் என்னும் இரண்டு பேர்களும் சமாதியோகத்தில் பொருந்தி இருப்பார்கள். தேகம் நிலைப்பதற்காக இன்றியமையாத பிச்சை முதலியவற்றின் பொருட்டு, தானாகவே நிட்டை கலைந்து உணவுகொள்ளக் கருதுபவர் வரன் ஆகும். வெளியில் உள்ள கருமம் சிறிதுமின்றி யோகாநந்த நிட்டையிலேயே இருப்பவனாய் பிறரது முயற்சியினால் சமாதியில் இருந்து விழித்து உணவு கொள்பவர் வரியான் ஆகும். வரனைப் போல் தானாக உணர்தலும் இன்றி, வரியானைப் போல் அந்நியராலும் உணர்தல் இன்றி எப்போதும் சமாதியில் இருப்பவன் வரிட்டன் ஆகும். *(வரிட்டன் உணவு கொள்வது சிறுகுழந்தைகள் உறங்கிக்கொண்டே உணவு கொள்வது போல இருக்கும்)*

**அரிதாகு மிவர்க ளிவ்வா றநேகரா னாலு முத்தி**
**சரியாகும் பாடு பட்ட சமாதிக்குப் பலனே தென்றால்**
**பெரிதான திருஷ்ட துக்கம் பிரமவித் தநுப விப்பன்**
**வரியானும் வரனு மற்றை வரிட்டனுஞ் சுகமாய் வாழ்வார். (93)**

அரிதாகும் இவர்கள், இவ்வாறு அநேகரானாலு(ம்),
முத்தி சரியாகும்; பாடுபட்ட சமாதிக்குப் பலன் ஏது? என்றால்,
பெரிதான திருஷ்ட துக்கம், பிரம வித்து அனுபவிப்பன்;
வரியானும்,வரனும், மற்றை வரிட்டனும் சுகமாய் வாழ்வார்.

கிடைத்தற்கு அரிதான இந்த சீவன் முத்தர்கள் இவ்வாறு பிராரர்த்த வசத்தால் பலவாறு பேதமான விவகாரங்களை உடையவர்களாக இருந்தாலும் ஞானத்தில் தாரதம்மியம் இல்லாமையால்-ஏற்றத் தாழ்வின்றி-ஞான பலனான மோட்ச சுகம் அவர்களுக்குத் தாரதம்மியம் இன்றி சமமாகும். வரன் முதலியோர் சிரமப்பட்டு அடைந்திருக்கும் நிர்விகற்ப சமாதிக்குப் பலன் ஏது என்றால், பிராரர்த்த வசத்தால் உண்டாகின்ற பெரிதான பிரத்தியட்ச துக்கத்தை பிரம வித்து அனுபவிப்பன். வரனும், வரியானும், வரிட்டனும் சீவன் முத்திச் சுகத்தையே உடையவர்களாய் வாழ்வார்கள்.

**பிரமஞா னிகளுங் கர்மப் பேதையர் போலே வாழ்ந்தாற்**
**றிரமுறு மஞ்ஞா னம்போய்ச் செனியாத வழியே தென்றால்**
**பரவுமா காச மொன்றிற் பற்றாது மற்றை நான்கும்**
**விரவின தோடுங் கூடும் விதமிரு வோரு மாவர். (94)**

பிரம ஞானிகளும்,கர்மப் பேதையர் போலே வாழ்ந்தால்,
திரம்உறும் அஞ்ஞானம் போய் ,செனியாத வழியேது? என்றால்,
பரவும் ஆகாசம் ஒன்றில் பற்றாது ; மற்றை நான்கும்,
விரவினதோடும் கூடும்; விதம் இருவோரும் ஆவார்.

பிரம வித்துக்களும் கர்மங்களை உடைய அறிவீனரைப் போலவே பிராரர்த்தத்திற்குத் தக்க பிரபஞ்ச விவகாரங்களை உடையவர்களாய் வாழ்ந்தால், கடந்து போவதற்கு அரிய அஞ்ஞானம் போய் மீண்டும் பிறவாதிருக்க காரணம் யாது என்று கேட்பாயாகில், வாயு முதலிய பூத பௌதிகங்கள் அனைத்திலும் விரிந்திருக்கும் ஆகாயமானது ஒன்றிலும் பற்றாது ஏனைய வாயு முதலான நான்கு பூதங்களும் தம்மோடு கலந்துநிற்கும் பொருள்களோடும் சம்பந்தம் இன்றி நிற்கும் செயல்போல் ஞானி, அஞ்ஞானி இருவரும் ஆவார்கள்.

**சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவனய னெடுமா லான**
**மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து சன்ம**
**பாவன மானா ரென்று பழமறை முழங்கு மிப்பான்**
**மேவருஞ் சீவன் முத்தர் விதேகமுத் தியுநீ கேளாய்.** **(95)**

சீவன் முத்தரைச் சேவித்தோர் சிவன்,அயன்,நெடுமால் ஆன
மூவரும் மகிழ, நோன்பு முழுவதும் செய்து , சன்மப் பாவனம்
ஆனார் என்று,பழமறை முழங்கும்;இப்பால்,
மேவரும் சீவன் முத்தர்,விதேக முத்தியும் நீ கேளாய்.

சீவன் முத்தரைச் சேவித்தவர்கள் சிவன், அயன், அரி மூவரும் சந்தோஷம் கொள்ள, தவங்கள் அனைத்தையும் குறைவறச் செய்து, பிறவி பரிசுத்தம் ஆனவர்கள் என்று அநாதியான வேதங்கள் முழங்குகின்றன. இனி அடைதற்கு அரிய மகிமை வாய்ந்த சீவன் முத்தர் அடைகின்ற விதேக முத்தியையும் நீ கேளாய்.

**பஞ்சினை யூழித் தீப்போற் பலசன்ம விவித வித்தாஞ்**
**சஞ்சித மெல்லா ஞானத் தழல்சுட்டு வெண்ணீ றாக்குங்**
**கிஞ்சிதா காமி யந்தான் கிட்டாமல் விட்டுப் போகும்**
**விஞ்சின பிராரத் தத்தின் வினையநு பவித்துத் தீரும்.** **(96)**

பஞ்சினை ஊழித் தீப்போல்,பல சன்ம விவித வித்தாம்;
சஞ்சிதம் எல்லாம்,ஞானத் தழல் சுட்டு வெண்ணீறு ஆக்கும்;
கிஞ்சித் ஆகாமியந்தான், கிட்டாமல் விட்டுப் போகும் ;
விஞ்சின பிராரத்தத்தின், வினை அனுபவித்துத் தீரும்.

பஞ்சினை ஊழிக்கால தீ எப்படி எரிக்குமோ அது போல, அநேக சன்மங்கட்கு பலவித வித்தாகிய சஞ்சித கர்மம் அனைத்தையும் ஞான அக்கினியானது எரித்துப் பஸ்மம் ஆக்கும். ஆகாமிய கர்மம்-எதிர்கால வினை கொஞ்சமும் இல்லாமல் விட்டுப்போகும். மீதமுள்ள பிராரர்த்தத்தின் கர்மம் அனுபவித்துத் தொலையும்.

**பொறுமையாற் பிராரத் தத்தைப் புசிக்குநாட் செய்யுங் கர்ம**
**மறுமையிற் றொடர்ந்தி டாமன் மாண்டுபோம் வழியே தென்றால்**
**சிறியவ ரிகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வா**
**ரறிவுளோ ரறிந்து பூசித் தறமெலாங் கைக்கொள் வாரே.** **(97)**

பொறுமையால், பிராரத்தத்தைப் புசிக்கு(ம்) நாள் செய்யும் கர்மம்,
மறுமையில் தொடர்ந்திடாமல் மாண்டுபோம்; வழியேது? என்றால்,
சிறியவர் இகழ்ந்து, ஞானி செய்த பாவத்தைக் கொள்வார்;
அறிவு (உ)ளோர் அறிந்து,பூசித்து,அறம் எ(ல்)லாம் கைக்கொள்வாரே.

பொறுமையால் பிராரர்த்தத்தின் பயனான சுகதுக்கங்களை சீவன் முத்தித் தசையில் அனுபவிக்கும் பொழுது சீவன் முத்தர் தேகம் முதலியவற்றால் செய்கின்ற புண்ணிய பாவ வடிவமான கர்மங்கள் அவரைத் தொடராமல் தொலைந்து போகும் வழி ஏது என்றால், அறிவில்லாத சிறியவர் பார்வை தோஷத்தால் அவரை நிந்தித்து, அச்சீவன் முத்தர் தேகத்தினால் செய்த பாவங்களை ஏற்றுக் கொள்வர். அறிவுடையோர் அறிந்து பூசித்து அவரின் புண்ணியம் அனைத்தையும் ஏற்றுக் கொள்வர்.

**அரியமெய்ஞ் ஞானத் தீயா லவித்தையா முடனீ றாகும்**
**பெரியதூ லமுங்கா லத்தாற் பிணமாகி விழுமந் நேர**
**முரியசூக் குமச ரீர முலையிரும் புண்ட நீர்போற்**
**றுரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தி லிறந்து போமே.** **(98)**

அரிய மெய்ஞ்ஞானத் தீயால், அவித்தையாம் உடல் நீறாகும்;
பெரிய தூலமும்,காலத்தால் பிணமாகி விழும்; அந்நேரம்,
உரிய சூக்கும சரீரம், உலை இரும்பு உண்ட நீர் போல,
துரியமாய், விபுவாய், நின்ற சொரூபத்தில் இறந்து போமே.

அரிய மெய்ஞ்ஞானத் தீயால் அவித்தையாகிய காரண தேகம் வெந்து நீறு ஆகும். கனமான தூல தேகமும் அதற்கு நியமித்த காலத்தில் சவமாய் விழுந்துவிடும். அப்பொழுது உரிய சூக்கும தேகமானது கொல்லன் உலையில் காய்ந்த இரும்பின் மீது விழுந்த நீர்த்துளி போல துரியமாயும் பூரணமாயும் என்றும் நிற்கின்ற சொருபத்தில் லயமாகிவிடும்.

**கடமெனு முபாதி போனாற் ககனமொன் றானாற் போல**
**வுடலெனு முபாதி போன வுத்தரஞ் சீவன் முத்த**
**ரடிமுடி நடுவு மின்றி யகம்புற மின்றி நின்ற**
**படிதிகழ் விதேக முத்திப் பதமடைந் திருப்ப ரென்றும். (99)**

கடம் எனும் உபாதி போனால்,ககனம் ஒன்றானாற் போல,
உடல் எனும் உபாதி போன உத்தரம்,சீவன்முத்தர்;
அடி , முடி, நடுவும் இன்றி,அகம்,புறம் இன்றி நின்ற,
படி திகழ்,விதேக முத்திப் பதம் அடைந்திருப்பர் என்றும்.

குடமாகிய உபாதியானது இல்லாமல் போனால் குட ஆகாசமானது மகா ஆகாசத்தோடு ஏகமாவது போல, தேகமாகிய உபாதிகள் நீங்கினவர் சீவன் முத்தர். ஆதியும், அந்தமும், மத்தியும் இன்றி, உள்ளும் புறமும் இன்றி, தான் இருந்தபடியே விளங்குகின்ற விதேக முத்திப் பதத்தைப் பெற்று சதா அவ்வண்ணமே இருப்பர்.

**சொல்லிய மகனே யெங்குஞ் சூழ்வெளி யிருக்க மண்ணைக்**
**கெல்லிய பின்பு தோன்றுங் கிணற்றினா காசம் போலே**
**யொல்லையாம் பிரம நூலா லுற்றது போலே தோன்று**
**மெல்லையி னாமெப் போது மேகமென் றிருந்து வாழ்வாய். (100)**

சொல்லிய மகனே! எங்கும் சூழ்வெளி இருக்க,மண்ணைக்
கெல்லிய பின்பு,தோன்றும் கிணற்றின் ஆகாசம் போலே,
ஒல்லையாம், பிரம நூலால் உற்றது போலே தோன்றும்;
எல்லையில் நாம், எப்போதும் ஏகம், என்று இருந்து வாழ்வாய்.

சொல்லிய மகனே! எங்கும் நிறைந்துள்ள ஆகாசம் தானிருந்தபடியே இருக்க பூமியில் உள்ள மண்ணைத் தோண்டிய பின்னர் அப்போது தான் புதியதாக உண்டானது போல் தோன்றுகின்ற கிணறின் ஆகாசம்-வெற்றிடம்-போல், ஏற்கெனவே சித்தமாயுள்ள பிரமம் குரு உபதேசத்தாலும் சாத்திர விசாரத்தாலும் அப்போது புதியதாக அடையப்பட்டது போல் தோன்றும். அவ்வாறு தோன்றினும் அது உண்மை இல்லாததால் எல்லையில்லாத வியாபகமான பிரமமாகிய நாம் எப்போதும்-இதற்கு முன்னும்-ஏகப் பிரமமே என்று இருந்து வாழ்வாய்.

**கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க னாவூர்**
**வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு**
**பீனமாந் தறிபு மானிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே**
**ஞானமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்தி டாதே.** **(101)**

கானல் நீர்,கிளிஞ்சில் வெள்ளி ,கந்தர்ப்ப நகர், கனாவூர்,
வான மை, கயிற்றில் பாம்பு, மலடி சேய், முயலின் கோடு,
பீனம் ஆம் தறி புமானில், பிரபஞ்சம் எல்லாம் பொய்யே;
ஞானம் மெய் மகனே ! உன்னை,நம் ஆணை,மறந்திடாதே.

**விளக்கம் :-**

கானல் நீர், கிளிஞ்சலில் வெள்ளியின்தோற்றம், கந்தர்வ நகரம், கனவில் தோன்றிய ஊர், ஆகாயத்தில் நீல நிறம், கயிற்றில் பாம்பின் தோற்றம், மலடி மகன், முயல்கொம்பு, பருமையான கம்பத்தில் மனிதன் தோற்றம் ஆகிய அனைத்தும் போல, பிரபஞ்சம் அனைத்தும் மித்தை-பொய்யே. பிரமமே மெய்-சத்தியம். மகனே இத்தன்மை உடைய உன்னை-ஆன்மாவை-நம் மேல் ஆணை மறந்திடாதே.

**தத்துவ விளக்கப் படலம் முற்றியது**
**ஆக மொத்தம் 101 பாடல்கள்**

# சந்தேகம் தெளிதல் படலம்

**நரர்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்**
**உரமுறக் குத்திக் குத்தி யுறைப்பிக்கு முபாயம் போலப்**
**பரமசிற் சொரூபந் தன்னிற் பற்றிய மனோவி ருத்தி**
**திரநிலை பெறச்சந் தேகந் தெளிதலை மொழிகின் றேனே.** (1)

நரர்குழி பறித்து, மெள்ள நாட்டிய நெடிய கம்பம்,
உரமுறக் குத்திக் குத்தி, உறைப்பிக்கும் உபாயம் போல,
பரம சிற் சொரூபம் தன்னில்,பற்றிய மனோவிருத்தி,
திரநிலை பெற,சந்தேகம் தெளிதலை மொழிகின்றேனே.

பந்தல் கால் நடுவதற்கு, மாந்தர் குழிதோண்டி மெள்ள அதில் நிறுத்திய நீண்ட கம்பமானது அசையாமல் வலுவாக நிற்கும் பொருட்டு, கம்பத்தை ஆட்டி அசைத்துப் பார்த்து, கல், மண் இட்டு கெட்டித்துக் கெட்டித்துப் பலப்படுத்துகின்ற உபாயம் போல, பிரமத்தில் பேதமின்றி லயமான மனோவிருத்தியானது சலனமின்றி திடமாக பிரமத்திலேயே நிலைத்து நிற்பதற்காக சந்தேகம் தெளிதல் படலத்தைக் கூறுகின்றேன் .

**நற்கருத் துடையோ னாகி ஞானவா னாகி நின்றோன்**
**மர்க்கட நியாயம் போல மகாபூத விகாரந் தொட்டு**
**நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தஞ் சொன்ன**
**சற்குரு வினைவி டாமற் சந்தத மநுச ரித்தான்.** (2)

நற்கருத்து உடையோனாகி, ஞானவான் ஆகி நின்றோன்;
மர்க்கட நியாயம் போல, மகா பூத விகாரம் தொட்டு,
நிர்க்குண விதேக முத்தி நிலை பரியந்தம் சொன்ன,
சற்குருவினை விடாமல், சந்ததம் அனுசரித்தான்.

சத்துவமான அந்தக்கரணத்தை உடையவனாய், சீவ பிரம இக்கிய ஞானம் உடையவனாய் நின்ற சீடன், குரங்குக்குட்டி தன் தாய்க்குரங்கு எங்கே தாவினாலும் தாயை விடாது பற்றிக் கொள்ளுதல்(மர்க்கட நியாயம்) போல, பஞ்ச பூதங்களால் உண்டான தூலதேகம் முதற் கொண்டு, கடைசி நிலையான - எந்த குணமும் இல்லாத பிரமத்தில் லயமாகின்ற விதேக கைவல்யம்(முத்தி) வரையிலும் உபதேசித்தருளிய சற்குருவினை விட்டு அகலாமல் எப்பொழுதும் அவர் வழி தொடர்ந்தான் .

**சந்ததம் புருடன் றன்னைச் சாயைபோல் விடாம லன்பாம்**
**மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திர மாய்நின் றாயோ**
**சிந்தையி லைய மெல்லாந் தீர்ந்தவோ தெளிவி னுள்ளே**
**அந்தரங் கலந்த துண்டோ வநுபவ முரைசெய் வாயே.** **( 3)**

சந்ததம் புருடன் தன்னை, சாயை போல் விடாமல்,
அன்பாம் மைந்தனை நோக்கி, சாட்சி மாத்திரமாய் நின்றாயோ!
சிந்தையில் ஐயம் எல்லாம் தீர்ந்தவோ, தெளிவின் உள்ளே
அந்தரம் கலந்தது உண்டோ? அனுபவம் உரை செய்வாயே.

எப்பொழுதும் புருஷனை விட்டு நீங்காத நிழல்போல, கணமும் பிரியாமல் தன்னிடத்தில் அன்பாயுள்ள சீடனைப் பார்த்து "காணப்படுபொருள், காட்சி ஒழிந்து, சாட்சி மாத்திரமாக நின்றனையோ? உனது அந்தக்கரணத்தில் சந்தேகம் எல்லாம் ஒழிந்தனவா? உனது புத்தியினிடத்தில் பேதப் பிராந்தி வந்தது உண்டோ? அனுபவத்தைச் சொல்வாய்" என்றார்.

**எனவுரைத் தருளு மாசா னிருபதம் வணங்கி யெந்தாய்**
**சனனவன் காட்டின் மோகத் தமத்தெழு பேதப் பேய்கள்**
**உனதரு ளுதய வெற்பி லுபதேச வருக்கன் றோன்றி**
**மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தா லுண்டோ.** **(4)**

என உரைத்து அருளும் ஆசான் இருபதம் வணங்கி, எந்தாய்!
சனன வன்காட்டில், மோகத் தமத்து எழு(ம்) பேதப் பேய்கள்;
உனது அருள் உதய வெற்பில் உபதேச அருக்கன் தோன்றி,
மன விழி தெரிய,ஞான வான்கதிர் பரந்தால், உண்டோ ?

என்று கேட்டருளிய குருவின் இரு பாதங்களைப் பணிந்து, "என் பிதாவே! சம்சாரமாகிய கடுமையான காட்டில் அஞ்ஞானமாகிய இருளில் எழுகின்ற பேதப்பேய்கள், தங்களின் கருணை என்னும் மலையில் பிரம உபதேசம் என்கிற சூரியன் உதயமாகி, அகக்கண் விளங்க ஞானக் கிரணங்களை வீசினால் அதன்முன் பிராந்தி (மயக்கம்)நிற்குமோ? நிற்க முடியாமல் ஒழிந்தன."

**மந்திர மூர்த்தி தன்னான் மாற்றிய பேய்போ னாலும்**
**எந்திர மெழுதிக் கட்டி யினிவரா வகைசெய் வார்போல்**
**முந்தியுன் னுபதே சத்தான் மோகம்போ னாலு மையா**
**புந்திநின் றுறைக்க வின்னம் புகலும்விண் ணப்ப முண்டே. (5)**

மந்திர மூர்த்தி தன்னால்,மாற்றிய பேய் போனாலும்;
எந்திரம் எழுதிக் கட்டி, இனி வரா வகை செய்வார் போல்,
முந்தி உன் உபதேசத்தால்,மோகம் போனாலும் ஐயா!
புந்தி நின்று உறைக்க, இன்னம் புகலும் விண்ணப்பம் உண்டே.

"மந்திரவாதியினால் ஓட்டிய பேய் உடலை விட்டு ஓடிப்போனாலும், மந்திர சக்கரம் (குளிசம்) எழுதிக்கட்டி மீண்டும் அப்பேய் வந்து பிடித்துக்கொள்ளாதவாறு செய்பவர் போல, முன்னரே தங்கள் உபதேசத்தால் மோகமானது நிவர்த்தியானாலும், குருவே! எனது புத்தியானது ஆத்ம அனுபவத்தில் சலிக்காமல் நின்று அழுந்த இன்னமும் கேட்கக்கூடியவை உள்ளன."

**ஆகமப் பிரமா ணத்தா லறியென்றும் வாக்குக் கெட்டா**
**தேகமாம் பிரம மென்று மிதயத்தா லுணர்வா யென்றும்**
**சோகமா மனதிற் கெட்டாச் சுயஞ்சோதி யென்றுஞ் சொன்னீர்**
**மோகமா மிரண்டு சங்கை முளைத்தன பறித்தி டிரே. (6)**

ஆகமப் பிரமாணத்தால் அறி என்றும், வாக்குக்கு எட்டாது,
ஏகமாம் பிரமம் என்றும், இதயத்தால் உணர்வாய் என்றும் ,
சோகமாம் மனதிற்கு எட்டா, சுயஞ்சோதி என்றும் சொன்னீர்;
மோகமாம் இரண்டு சங்கை முளைத்தன; பறித்திடிரே !

'நீயே பிரமம், உனது நிஜ வடிவமான பிரமத்தை ஆகமப் பிரமாணத்தால் நீ அறிவாய்' என்றும், அகண்ட பிரமமானது வாக்கினால் சொல்லி உணர்த்த முடியாதது என்றும், அதனை மனதினால் உணர்வாய் என்றும், துக்கமாகிய மனதிற்கு எட்டாத சுயம் பிரகாசம் என்றும்' உபதேசித்தீர். இதனால் மயக்கமாகிய இரண்டு சந்தேகங்கள் உண்டாயின. அவைகளை நிவர்த்தி செய்தருளுவீர். *(பிரமம் 1. வேதத்திற்கு விஷயமாகும், விஷயமாகாது 2. மனதிற்கு விஷயமாகும், விஷயமாகாது என்பதே இரண்டு சந்தேகங்கள். அதாவது வாக்குக்கு எட்டும், எட்டாது, அடுத்தது மனத்திற்கு எட்டும் எட்டாதது)*

**மற்றைமுப் பிரமா ணத்தால் வத்துநிண் ணயங்கூ டாதே**
**உற்றதோர் விடயம் பூத முபயமன் றாத லாலே**
**குற்றமாங் குணவி சேடங் கூடாம லிருக்கை யாலே**
**இற்றது வாக்குக் கெட்டா தென்பது மறிவாய் நீயே. (7)**

மற்றை முப்பிரமாணத்தால், வத்து நிண்ணயம் கூடாதே ;
உற்றதோர் விடயம், பூதம், உபயம் அன்று; ஆதலாலே,
குற்றமாம், குண, விசேடம் கூடாமல் இருக்கையாலே,
இற்றது வாக்குக்கு எட்டாது என்பதும், அறிவாய் நீயே.

*(பஞ்ச பூதங்களின் சிறப்பு குணங்களான சுவை, பரிசம், வாசனை போன்றவைகள், அந்த பஞ்ச பூதங்களின் அம்சமாக உருவான பஞ்ச இந்திரியங்களால் அறியப்படுகின்றன. பிரமம் குணம் கடந்த ஒன்றாகும். பிரமம் பஞ்ச பூதங்களின் குணங்களை உடையது அல்ல. அதனால்)* பிரமம், இந்திரியங்களால் அறியப்படும் சுவை, உருவம், பரிச உணர்ச்சி போன்று இந்திரியங்களால் அறியமுடியாது. பூதமும் அல்ல. பூதங்களின் உபயமும் அல்ல. ஆதலால் பிரத்தியட்சம், அனுமானம், உபமானம் என்னும் மூன்று பிரமாணங்களால் பிரம நிச்சயம் எப்படிச் செய்யமுடியாதோ, அப்படி உண்மை நிலையில் குற்றமாகிய குணங்களின் சம்பந்தமின்றி இருப்பதால், பிரமமானது வாக்கினால் விளக்கி உணர வைக்க முடியாது என்பதையும் நீயே அறிவாய். *(பிரமம் பூதங்களின் அம்சமாக வந்த ஒன்று அல்ல. ஆகவே, நேரடியாக பிரத்தியட்சமாகக் காட்டவோ, அனுமானத்தால் ஊகமாகவோ, உவமானம் காட்டி விளக்கவோ முடியாது. தவிர பிரமத்திற்கு குணங்களின் சம்பந்தமும் கிடையாது. குணங்களுக்கு உட்பட்ட ஒன்றைத்தான் விளக்கிக் காட்ட முடியும் என்பதால் குணம் கடந்த ஒன்றினை சொற்களால் சொல்லமுடியாது)*

**வாக்கியந் தனக்கெட் டாது வத்துவென் றுரைத்த வேதம்**
**வாக்கிய விருத்தி யாலவ் வத்துவைக் காட்டிற் றன்றோ**
**வாக்கியங் களிலே மான மாவதே தென்றா யாகில்**
**வாக்கிய மிரண்டு மெய்யே மறைகள்பொய் யாது கேளாய். (8)**

வாக்கியம் தனக்கு எட்டாது வத்து, என்று உரைத்த வேதம்;
வாக்கிய விருத்தியால்,அவ்வத்துவைக் காட்டிற்று அன்றோ?
வாக்கியங்களிலே மானம் ஆவது ஏது? என்றாயாகில்,
வாக்கியம் இரண்டும் மெய்யே; மறைகள் பொய்யாது கேளாய்.

பிரமமானது எந்தவொரு வாக்கியத்திற்கும் புலப்படாதது என்று சொல்கின்ற வேதமே, தத்துவமசி முதலான மகாவாக்கியத்தின் தத் துவம் பதங்களின் உட்பொருளால் அந்தப் பிரமத்தைக் காட்டுகின்றது அல்லவா! இதனால் பிரமமானது வேத வாக்கியங்களுக்குப் புலப்படும் என்றாகிறது. ஆதலால் வாக்கியத்திற்குப் புலப்படும், புலப்படாது என்ற இரண்டு வாக்கியங்களில் எதை ஆதாரமாக எடுத்துக் கொள்வது என்று சந்தேகம் கொள்வாயாகில், அவ்வாக்கியங்கள் இரண்டும் உண்மையே. வேதம் பொய் சொல்லாது. இன்னும் கேட்பாய்.

**தன்பதி யல்லாப் பேர்க டமையல்ல னல்ல னென்றாள்**
**அன்பனைக் கேட்ட நேர மவள்வெட்கி மௌந மானாள்**
**என்பது போல நீக்கி யிதன்றிதன் றெனச்சே டித்த**
**பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் காட்டும் வேதம். (9)**

தன் பதி அல்லாப் பேர்கள் தமை,அல்லன் அல்லன் என்றாள் ;
அன்பனைக் கேட்ட நேரம், அவள் வெட்கி மௌனமானாள்;
என்பது போல நீக்கி, இதன்று இதன்று எனச் சேடித்த பின்
பரப்பிரமம் தன்னை, பேசாமல் காட்டும் வேதம்.

(மணமான ஒரு பெண்ணைப் பார்த்து, அவளது தோழி, "அங்கே பல புருஷர்கள் கூடி நிற்கின்றனரே. அவர்களில் உன் கணவன் இவனா, இவனா" என்று அக்கூட்டத்தில் உள்ளோரை ஒவ்வொருவராகக் காட்டிக் கேட்டுக்கொண்டே வர, அதற்கு அந்த மங்கை) தனது கணவன் அல்லாதவர்களை அவன் அல்லன், அவன் அல்லன் எனக்கூறி வந்தாள். தனது கணவனைச் சுட்டிக்காட்டிக் கேட்டபொழுது அவள் நாணமுற்று மௌனமாகிவிட்டாள். அது போல, பிரமம் அல்லாதவை சடம் ஆவதால், அவைகளை இது பிரமம் அல்ல, இது பிரமம் அல்ல என ஒவ்வொன்றாகத் தள்ளி, பின்னர் எஞ்சியதைப் பிரமம் என்று பிரமத்தைப் பேசாமல் மௌனமாக வேதம் காட்டுகிறது.

**முந்திய சங்கை தீர மொழிந்ததை யறிந்து கொள்வாய்**
**பிந்திய சங்கை தீரப் பேசுமுத் தரநீ கேளாய்**
**இந்தியங் களுக்கி ராச னிதயமா மதினெண் ணங்கள்**
**புந்தியு மனமு மென்றே புறத்தகத் துலாவி யாடும். (10)**

முந்திய சங்கை தீர, மொழிந்ததை அறிந்து கொள்வாய்;
பிந்திய சங்கை தீர, பேசும் உத்தர(ம்), நீ கேளாய்;
இந்தியங்களுக்கு இராசன் இதயமாம்; அதில் எண்ணங்கள்,
புந்தியும், மனமும் என்றே புறத்து, அகத்து உலாவி ஆடும்.

*[பிரமம், வேதத்தின் வாக்கியத்திற்கு(சொற்களுக்கு)ப் புலப்படாது (அகோசரம்), புலப்படும் (கோசரம்) என நீ கேட்ட]* முதல் சந்தேகம் நீங்கும்படி நாம் கூறியதை அறிந்து கொள்வாய். *(சுயம் சோதியாகிய பிரமம் மனதிற்கு எட்டும், எட்டாதது எவ்வாறு என நீ கேட்ட)* இரண்டாவது சந்தேகம் தீரக் கூறுவதையும் நீ கேட்பாய். கண், காது முதலிய சகல இந்திரியங்களுக்கும் அந்தக்கரணம் அரசனாம். அந்த அந்தக்கரணத்தினுடைய விருத்திகள் புத்தியும் மனமும் ஆகத் தேகத்திற்கு வெளியிலும் உள்ளும் சஞ்சரித்துக் கூத்தாடும். *(அந்தக்கரணத்தின் நீட்சி அதாவது நீண்டு செல்லுதல் விருத்தி என்று சொல்லலாம். அது தேகத்திற்கு வெளியே செல்லும் போது மனம் எனவும், உள்ளே சிந்திக்கும்போது புத்தி எனவும் செயல்படுகிறது)*

**உன்முகம் போற்கண் ணாடிக் குள்ளொரு முகங்கண் டாற்போல்**
**சின்மய வடிவின் சாயை சித்துப்போற் புத்தி தோன்றும்**
**நின்மனோ விருத்தி யந்த நிழல்வழி யாயு லாவும்**
**தன்மநன் மகனே யித்தைத் தானன்றோ ஞான மென்பார். (11)**

உன்முகம் போல்,கண்ணாடிக்குள் ஒரு முகம் கண்டாற் போல்,
சின்மய வடிவின் சாயை, சித்துப் போல் புத்தி தோன்றும்;
நின் மனோ விருத்தி, அந்த நிழல் வழியாய் உலாவும்;
தன்ம நன் மகனே! இத்தைத்தான் அன்றோ ஞானம் என்பார்.

உன்னுடைய முகத்தைக் கண்ணாடியில் பார்க்கும் போது அதேபோன்ற முகம் பிரதிபிம்பமாகத் தெரிகின்றது. அதைப்போல், சித்து வடிவமான ஆன்மாவின் பிரதிபிம்பம் புத்தி வடிவ அந்தக்கரணத்தில் பிரதிபிம்பிக்கும். இதுவே சிதாபாசன் என்கிற சீவன். மனோவிருத்தியானது சிதாபாசன் துணை கொண்டு, பொருள்களைக் கண்டு அறிகிறது. தர்மவடிவான நன்மைந்தா! இந்த விருத்தியைத் தான் ஞானம் (அறிவு) என்பர். *(சித் என்ற புத்தியில் பிரதிபலித்த ஆன்மாவின் பிரதிபிம்பம் சீவன் அதாவது சிதாபாசன் எனப்படுவான். இந்த சிதாபாசனாகிய சீவன் தான் செயல்படுபவன். அந்தக்கரணங்களையும் புலன்களையும் இயக்க காரணமாக இருப்பவன். அதனால் உடலுக்கு வெளிப்புறத்தில் உள்ள ஒருபொருளை அறிய வேண்டுமானால், சிதாபாசன் அவசியம் தேவை)*

**உருக்கிய தராநீர் நாநா வுருவங்க ளானாற் போல**
**விருத்திகள் கடப டாதி விடயமாய்ப் பரிண மிக்கும்**
**அருப்பல விடய மெல்லா மாபாசன் றோற்று விக்கும்**
**இருட்டினில் விளக்குங் கண்ணு மில்லாமற் பொருள்கா ணாதே. (12)**

உருக்கிய தரா நீர்,நாநா உருவங்களானாற் போல,
விருத்திகள், கட படாதி விடயமாய்ப் பரிணமிக்கும்;
அருப்பல விடயம் எல்லாம், ஆபாசன் தோற்றுவிக்கும் ;
இருட்டினில் விளக்கும், கண்ணும் இல்லாமல் பொருள் காணாதே.

உருக்கிய தரா (பொன் முதலிய உலோகம் உருக்கிய குழம்பு போன்ற) நீர் அச்சு உருவில் வார்க்கப்பட்ட போது, தான் சென்று வீழ்ந்த பலவிதமான அச்சு வடிவத்திற்கேற்ப உருவமாவது போல, தேகத்திலிருந்து அந்தக்கரண விருத்திகள் கண், காது முதலிய இந்திரியங்கள் வழியாக வெளிப்பட்டு, குடம் முதலான பொருள்களை அடைகின்றது. அந்த பொருள்களை சிதாபாசன் (சீவனின்) பிரகாசத்தால் அறிய முடிகிறது. இருட்டில் உள்ள பொருள்கைளக் காண தீபமும், கண்களும் தேவை. இவ்விரண்டும் இல்லாமல் பொருள்களைப் பார்க்க முடியாதது போல, விருத்தியும் சிதாபாசனும் இன்றி அனான்ம பொருள்கள் தெரியாது. (அறியமுடியாது)

**எரிகின்ற விளக்காற் கண்ணா லிருட்பொருள் காணல் வேண்டும்**
**தெரிகின்ற பரிதி காணச் சென்றிடிற் கண்ணே போதும்**
**விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்**
**புரிகின்ற விருத்தி யொன்றே போதுமெய்ப் பொருள்காண் போர்க்கே. (13)**

எரிகின்ற விளக்கால், கண்ணால் இருள் பொருள் காணல் வேண்டும்;
தெரிகின்ற பரிதி காண, சென்றிடில் கண்ணே போதும்;
விரிகின்ற சகத்தைக் காண வி ருத்தியும், பலமும் வேண்டும்;
புரிகின்ற விருத்தி ஒன்றே போதும்,மெய்ப்பொருள் காண்போர்க்கே.

இருளில் உள்ள பொருளை, எரிகின்ற விளக்கு மற்றும் கண்களின் துணை கொண்டு பார்க்க முடியும். பகலில் வெளியே தெரிகின்ற சூரியனைப் பார்ப்பதற்குக் கண் ஒன்றே போதும். விரிந்து பரந்துள்ள சகத்தையும் அதிலுள்ள பொருள்களையும் காண்பதற்கு விருத்தியும், சிதா பாசனும் வேண்டும். உள்ளே உள்ள சுயம்பிரகாசமான மெய்ப்பொருளைக் காண்பதற்கு விருத்தி ஒன்றேபோதும்.

**விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மனமென் பார்கள்**
**கருத்தெழு விருத்தி வேண்டுங் கணக்கினான் மனத்திற் கெட்டும்**
**வருத்திய பலமா மிந்த மனத்திற்கெட் டாது கண்டாய்**
**அருத்தமிப் படியென் றைய மகன்றுநீ தெளிந்தி டாயே. (14)**

விருத்தியும்,பலமும் கூடும் விகாரமே,மனம் என்பார்கள்;கருத்து
எழு(ம்)விருத்தி வேண்டும் கணக்கினால்,மனத்திற்கு எட்டும்;
வருத்திய பலமாம், இந்த மனத்திற்கு எட்டாது, கண்டாய்;
அருத்தம் இப்படியென்று, ஐயம் அகன்று , நீ தெளிந்திடாயே.

அந்தக்கரண விருத்தியும் சிதாபாசன் என்னும் பலமும் கூடிநிற்கும் பரிணாமமே மனம் என்று சொல்வர். அந்தக்கரணத்திலிருந்து எழுகின்ற பிரமத்தின் நினைப்பு என்கிற விருத்தி ஒன்றுக்கே பிரமமானது மனதுக்கு எட்டும். சிதாபாசன் என்னும் பலத்தோடு கூடின மனதுக்கு பிரமமானது எட்டாது. பிரமமானது மனதிற்கு எட்டும், எட்டாதென்று வேதம் சொன்னதற்கு பொருள் இவ்வாறு ஆகும் என்று அறிந்து சந்தேகம் தெளிவாய். *( பிரகாசமான சூரியனைப் பார்க்க விளக்கு தேவைப்படாதது போல, ஆன்மா/பிரமம் சுயம் பிரகாசமாய் இருப்பதால் அறிவதற்கு சிதாபாசன் துணை தேவையில்லை.)*

**வஞ்சகமில் பரமார்த்த குருவே சொன்ன வழிகளறிந் தேனினியோர் வசனங் கேளீர்**
**சஞ்சலமற் றகண்டபூ ரணமாய்ச் சித்தந் ததாகார மாவதன்றோ சமாதி யோகம்**
**உஞ்சலையொத் தலைவது தன் சுபாவமாகி யொருகணத்திற் பலவுலகா யுதிக்கு மிந்த**
**நெஞ்சகம்வத் துவிலசையா நிவாத தீப நிலையடைவ தெப்படியோ நீர் சொல் வீரே. (15)**

வஞ்சகமில் பரமார்த்த குருவே! சொன்ன வழிகள் அறிந்தேன் ; இனி ஓர் வசனங் கேளீர் ;
சஞ்சலமற்று, அகண்ட பூரணமாய்ச் சித்தம் தத் ஆகாரம் ஆவதன்றோ! சமாதி யோகம் ;
உஞ்சலை ஒத்து அலைவது தன் சுபாவமாகி, ஒரு கணத்தில், பல உலகாய் உதிக்கும் இந்த
நெஞ்சகம், வத்துவில் அசையா, நிவாத தீப நிலை அடைவது எப்படியோ? நீர் சொல்வீரே.

உபாயம் அல்லாதவற்றை உபாயம் என்று உபதேசிக்கும் வஞ்சகக் குணம் இல்லாத மெய்யான ஆசாரியரே! வாக்குக்கும் மனதுக்கும் பிரமம் எட்டும், எட்டாது என்பதற்குத் தெரிவித்த காரணங்களை நன்கு உணர்ந்தேன். இப்பொழுது யான் கூறுவதையும் கேட்டு அருளுவீர். சித்தமானது சஞ்சலம் இன்றி அகண்ட பரிபூரணமாய் பிரம நினைப்பு ஒன்றுடன் மட்டும் இருப்பதுவே சமாதி என்று சொல்லப்படும் சித்தம் செயல்படாத நிலை அல்லவா!. ஊஞ்சலைப் போல் அலைவதே தனது இயற்கையாய் ஒரு கணத்தில் பலவித உலகங்களாக உதிக்கின்ற இந்த சித்தமானது பிரமத்தில் காற்று வீசாத இடத்தில் அசையாமல் எரிகின்ற தீபத்தின் நிலை போல் நிலைத்து நிற்பது எவ்வாறு என்பதை அருளிச் செய்வீர்.

**கருதுமனோ குணமூன்றா மூன்றி லொன்று கதித்தெழுந்தால் மற்றிரண்டுங் கரந்து நிற்கும்**
**தருமமிகுஞ் சத்துவமே லான போது சன்மார்க்க மானதெய்வ சம்பத் துண்டாம்**
**மருவுரசோ குணமாகி லுலக தேக வாதனையாஞ் சாத்திரவா தனையு மாகும்**
**அருமகனே தமோகுணமே லான போதி லசுரசம்பத் துண்டாகு மறிந்து கொள்ளே. (16)**

கருது மனோ குண(ம்) மூன்றாம்; மூன்றில் ஒன்று கதித்து எழுந்தால், மற்றஇரண்டும் கரந்து நிற்கும்;
தரும(ம்)மிகும் சத்துவம் மேலான போது, சன்மார்க்கமான தெய்வ சம்பத்து உண்டாம்;
மருவு ரசோ குணமாகில், உலக தேக வாதனையாம், சாத்திர வாதனையுமாகும் ;
அருமகனே!தமோ குண(ம்)மேலான போதில், அசுர சம்பத்து உண்டாகும்; அறிந்து கொள்ளே. (16)

விஷயங்களை நினைக்கின்ற மனதின் குணங்கள் மூன்று வகை. அந்த மூவகை குணங்களில் ஒரு குணமானது அதிகரித்து எழுந்தால் மற்ற இரண்டு குணங்களும் அடங்கி நிற்கும். தருமம் மிகுவதற்குக் காரணமான சத்துவம் மேலோங்கிய போது சன்மார்க்கம் ஆன தெய்வசம்பத்து உண்டாகும். பற்றுகின்ற இராசத குணம் மேலோங்கினால் உலகவாசனை, தேகவாசனை, சாத்திர வாசனை என்னும் மூன்று வாசனைகளும் உண்டாகும். அருமையான மகனே! தமோ குணம் மேலோங்கினால் துன்மார்க்கமான அசுர சம்பத்து உண்டாகும் என்று தெரிந்துகொள்.

**மனதுசத் துவசொரூப மற்றிரண்டும்**
**வந்துகலந் தனவவற்றை மாற்றி னாற்போம்**
**தனதுசன்மார்க் கத்தைவிடா திருந்த போது**
**தமோகுணமும் ரசோகுணமுஞ் சமிக்கும் பின்னைக்**
**கனபரிணா மஞ்சலனம் போம்போ னக்காற்**
**களங்கமற்று நின்றவா காசம் போலும்**
**நினதுளமப் படியாமப் பிரமத் தொன்றாய்**
**நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே. (17)**

மனது சத்துவ சொரூபம்; மற்ற இரண்டும்
வந்து கலந்தன; அவற்றை மாற்றினால் போம்;
தனது சன்மார்க்கத்தை விடாது இருந்த போது,
தமோ குணமும்,ரசோ குணமும் சமிக்கும்; பின்னைக்
கனபரிணாமம் சலனம்போம்; போனக்கால்,
களங்கமற்று நின்ற ஆகாசம் போலும்,
நினது உ(ள்)ளம் அப்படியாம், அப்பிரமத்து ஒன்றாய்,
நிருவிகற்ப சமாதியிலே, நிற்கும் தானே.

மனதின் உற்பத்திக்குச் சத்துவமே முதல் (உபாதான)காரணம் ஆவதால் அந்த சத்துவமே மனதின் வடிவம் ஆகும். மற்ற இரண்டு குணங்களும் வந்து சேர்ந்தவை. அவைகளை நீக்கினால் நீங்கும். மனதின் இயற்கை வடிவான சன்மார்க்கமான தெய்வசம்பத்தை விடாது அனுட்டித்து வந்தால் விஷய காரணமான தமோகுணமும், சலன காரணமான இராசத குணமும் போய்விடும். பின்பு கனமாகிய விஷயத்தை நோக்கிய எண்ணமும், ஒன்றை விட்டு மற்றொன்றில் தாவுகின்ற சலனமும் நீங்கிப் போகும். போவதால், உன் மனமானது களங்கம் இன்றி மேகம் இல்லாத தெளிந்த ஆகாயம் போல அப்படி அந்தப் பிரமத்தில் ஏகரசமாய் சலனமின்றி சமாதியில் தானே நிற்கும்.

**களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர்**
**களங்கமற்ற கண்ணாடி காட்டும் போது**
**விளங்கியதன் மயமாகி யபேத மாகி**
**விகற்பமின்றி நிருவிகற்ப மானாற் போல**
**அளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தா**
**யாநந்த மாம்பிரமத் தைக்கிய மான**
**உளந்தெளிந்த படியிருந்தா லுலக மெங்கே**
**யுலைவெங்கே யென்றுசங்கை யொழித்தி டாயே.** **(18)**

களங்கமற்ற கண்ணாடி ,தன் முன் வேறு ஓர்
களங்கமற்ற கண்ணாடி காட்டும் போது,
விளங்கி ,அதன் மயமாகி, அபேதமாகி,
விகற்பமின்றி, நிருவிகற்பமானாற் போல்,
அளந்து அறியப்படா விபுவாய், சத்தாய், சித்தாய்,
ஆனந்தமாம் பிரமத்து, ஐக்கியமான
உ(ள்)ளம் தெளிந்தபடி இருந்தால்,உலகம் எங்கே ?
உலைவு எங்கே? என்று சங்கை ஒழித்திடாயே.

அழுக்கில்லாத சுத்தமான கண்ணாடிக்கு எதிரே மற்றொரு அழுக்கில்லாத கண்ணாடியைக் காட்டும் போது, அவைகளில் எந்த பிரதிபிம்பமும் தெரியாமல், அக்கண்ணாடி மயமாய் (பேதமின்றி) அபேதமாய் இரண்டாகத் தெரியாதது போல், இத்துணை அளவு என்று அளவிட்டு அறியப்படாத வியாபகமாய் சத்தாய், சித்தாய், ஆனந்தமாய் உள்ள பிரமத்தில் ஐக்கியம் ஆகி தெளிந்தபடி நின்றால், உலகம் எங்கே தெரியும்? (உலக பாதிப்புகள் தெரியாது). சலனம் எங்கே தோன்றும்? (தோன்றாது) என்று சந்தேகம் ஒழிந்திடுவாய்.

**ஏகமாய் மனமிறந்தாற் சீவன் முத்த**
**ரிருக்குமட்டும் பிராரத்த மெதனா லுண்பார்**
**போகமா னதுபுசித்துத் தொலைப்ப தன்றோ**
**புசிப்பதென்றான் மனந்தானும் போன தன்றே**
**சோகமா மனமிறந்தாற் போக மில்லை**
**தோன்றுமெனின் முத்தரென்று சொலக் கூடாதே**
**மோகமா மிதுதெளியக் குருவே நன்றா**
**மொழிந்தருள்வாய் தெளிந்ததன்றோ முத்தி தானே.** **(19)**

ஏகமாய் மனம் இறந்தால், சீவன் முத்தர்
இருக்கு(ம்) மட்டும், பிராரத்தம் எதனால் உண்பார் ?
போகமானது புசித்துத் தொலைப்பது அன்றோ ?
புசிப்பது என்றால் மனந்தானும் போனது அன்றே!
சோகமா(ம்) மனம் இறந்தால் போகம் இல்லை;
தோன்றுமெனின்,முத்தர் என்று சொ(ல்)லக் கூடாதே;
மோகமாம், இது தெளியக் குருவே! நன்றா(ய்) மொழிந்து
அருள்வாய்; தெளிந்தது அன்றோ முத்தி தானே.

பிரமத்தில் ஒன்றி மனம் நாசம் ஆனவர்கள் சீவன் முத்தர்கள். அவர்கள் தேகம் இருக்கின்ற வரையில் பிராரர்த்த போகத்தை எதைக் கொண்டு அனுபவிப்பர்? பிராரர்த்த போகமானது அனுபவித்துக் கழிக்க வேண்டும் அல்லவா! அனுபவிக்க வேண்டுமாயின், மனம் தான் நாசமாகிவிட்டதே! துன்ப மயமான மனம் இறந்து விட்டால் (ஆழ்துயில் போல்) பிராரர்த்த போக அனுபவம் இருக்காது. மனம் தோன்றுமாயின் சீவன் முத்தர் என்று சொல்ல முடியுமா? மயக்கமாகிய இந்த சந்தேகம் ஒழிய குருவே, நன்றாக விளக்குவீர். சந்தேகம் தெளிந்த நிலை தானே சீவன் முத்தி ஆகும்.

**மனநாசஞ் சொருபமென்று மரூப மென்றும்**
**வகுத்துரைப்பா ரிருவகையா வருமி வற்றில்**
**வினவாத சீவன்முத்த ரிடத்தி லொன்றும்**
**விதேகமுத்த ரிடத்திலொன்று மேவுங் கண்டாய்**
**தனதான சத்துவமாய் மனஞ்சே டித்துத்**
**தமசுரச சுகணசித்தல் சொருப நாசம்**
**அனகாசத் துவந்தானு மிலிங்க தேக**
**மடங்கும்போ தடங்குதலே யரூப நாசம்** **(20)**

மனநாசம் சொருபம் என்றும்; அரூபம் என்றும்,
வகுத்து உரைப்பார்;இருவகையாா(ய்) வரும் இவற்றில்,
வினவாத சீவன்முத்தரிடத்தில் ஒன்றும்,
விதேக முத்தரிடத்தில் ஒன்றும் மேவும், கண்டாய்;
தனதான சத்துவமாய்,மனம் சேடித்து,
தமசு, ரசசுகள் நசித்தல் சொருப நாசம்;
அனகா சத்துவம் தானும்,இலிங்க தேகம்
அடங்கும் போது,அடங்குதலே அரூப நாசம்.

மனதின் நாசத்தைச் சொருப நாசம், அருப நாசம் என்று இருவகையாகப் பிரித்துச் சொல்வர். இவைகளில், எதைக்குறித்தும் ஆர்வத்துடன் கேளாத சீவன் முத்தரிடத்தில் ஒரு மன நாசமும், விதேக முத்தரிடத்தில் மற்றொரு மனநாசமும் இருக்கும். தன் இயற்கை வடிவமான சத்துவ குணத்தில் மனம் நின்று, தமோகுணம், இராசத குணம் இரண்டும் நீங்கிய நிலை சொருபநாசம் எனப்படும். அந்த சத்துவமும் சூக்கும தேகம் பிரமத்தில் லயமாகி அடங்கும் போது உண்டாவது மனதின் அருப நாசம்.

சுத்தமாஞ் சத்துவமே யுண்மை யாகுந்
துகளிருள்போ னான்மனமென் சொல்லும் போம்போம்
வர்த்தமா னத்தில்வந்த வுணவை யுண்பார்
வருவதும்போ வதுநினைந்து மகிழார் வாடார்
கர்த்தரா மகந்தையைவிட் டகர்த்த ராகிக்
கரணவிருத்திகள வத்தை காண்பா ராகி
முத்தரா யிருக்கலுமாம் புசிப்புங் கூடு
முட்டிலையென் றறிந்துசங்கை மோசிப் பாயே. (21)

சுத்தமாம் சத்துவமே உண்மையாகும்;
துகள், இருள் போனால், மனம் என் சொல்லும் ? போம்போம்;
வர்த்தமானத்தில் வந்த உணவை உண்பார்;
வருவதும்,போவது(ம்) நினைந்து மகிழார், வாடார்;
கர்த்தராம் அகந்தையை விட்டு, அகர்த்தராகி,
கரண விருத்திகள் அவத்தை காண்பாராகி,
முத்தராய் இருக்கலுமாம்; புசிப்பும் கூடும்;
முட்டு இ(ல்)லை என்று அறிந்து,சங்கை மோசிப்பாயே.

சுத்தமான சத்துவகுணமே மனதிற்கு முதல்(உபாதான) காரணம் ஆதலால் சத்துவமே உண்மை சொரூபம். இராசத குணமும், தமோகுணமும் தத்துவ ஞான அப்பியாசத்தினால் ஒழிந்து போனால் மனதின் உருவமாகிய விவகாரமும் ஒழிந்துவிடும். நிகழ்காலத்தில் பிராரர்த்த கர்மத்தால் வந்து நேரிடுகின்ற உணவுகளை உண்பர். இனி வருவதையும் முன் போனதையும் அஞ்ஞானி போல் நினைந்து மகிழ்ந்திடவும், வாடவும்மாட்டார்கள். கர்த்தா (நான் செய்பவன்) என்னும் அகந்தையை விட்டு, அகர்த்தாவாய், அந்தக்கரண விருத்திகளையும், விருத்திகள் தோன்றுவதற்கு ஆதார காலமாகிய விழிப்பு முதலான அவத்தைகளையும் காணும் சாட்சி வடிவமாய் முத்தராய் இருக்கவும் அவர்களால் முடியும். அதே நேரத்தில் பிராரர்த்த போகத்தையும் அனுபவிக்கவும் முடியும். இவ்வாறு இருப்பதற்கு அவர்களுக்கு எந்தவொரு தடையும் இருக்காது என்பதை நிச்சயித்து சந்தேகத்தை ஒழிப்பாய்.

**விவகார வேளையெலாஞ் சமாதி யென்றால்**
**விகற்பமன்றோ மனமலைந்து விடாதோ விட்டால்**
**அவதான நழுவுமன்றோ வென்றா யாகி**
**லதற்கொருதிட் டாந்தம்கே ளாசை கொண்டு**
**நவமாகப் பரபுருடன் றன்னைக் கூடி**
**நயந்தசுக மநுபவித்த நாரிநெஞ்சந்**
**தவமான மனைத்தொழில்கள் செய்யும் போதுந்**
**தழுவியநு பவித்தசுகந் தனைவி டாதே.** **(22)**

விவகார வேளையெலாம் சமாதி என்றால்,
விகற்பமன்றோ? மனம் அலைந்து விடாதோ ! விட்டால், அவதானம் நழுவும் அன்றோ ? என்றாயாகில்,
அதற்கு ஒரு திட்டாந்தம் கேள்! ஆசை கொண்டு,
நவமாக, பரபுருடன் தன்னைக் கூடி,
நயந்த சுகம் அனுபவித்த நாரி நெஞ்சம்,
தவமான மனைத் தொழில்கள் செய்யும் போதும்,
தழுவி அநுபவித்த சுகந்தனை விடாதே.

விவகாரம் செய்யும் பொழுதெல்லாம் சமாதி நினைவில் இருக்க முடியுமா என்றால் சலனமாகி மனம் அலைந்துவிடாதோ? அலைந்து விட்டால் சீவ பிரம லயம் நழுவி விடாதா என்று சந்தேகித்தால், அதற்கு ஒரு உதாரணம் சொல்கிறேன் கேள். ஆசைகொண்டு புதியதாக கணவன் அல்லாத வேறொரு புருஷனைக் கூடி விரும்பிய சுகத்தை அனுபவித்த மங்கை சொந்த வீட்டில் சமையல், பாத்திரம் துலக்குதல் முதலான வீட்டு வேலைகளைச் செய்கின்ற போதும் வேறுபுருஷனைத் தழுவி அனுபவித்த சுகத்தை மறவாமல் நினைவில் கொண்டிருப்பாள். மனதில் அந்த நினைவுகள் இருப்பினும் செய்கின்ற காரியங்களில் தவறுகள் ஏதும் நிகழாமல் கவனமாக இருப்பது போல, சீவன் முத்தரது மனமும் விவகார வேளையிலும் சீவ பிரம ஐக்கிய பாவனை மறவாதிருக்கும். சீவன் முத்தருக்கு விவகாரத்தினால் எந்தவொரு தடங்கலும் உண்டாகாது.

**தேகத்த னலனாகி யகர்த்த னாகிச்**
**சீவனின்றிப் பிரமமாய்த் தெளிந்த முத்தன்**
**போகத்தை யுண்பனென்றாற் கருத்தா வாமே**
**பூரணமா மகர்த்தனுக்குப் போக முண்டோ**
**சோகத்தை யறுத்தருளுங் குருவே யிந்தத்**
**துகளறுக்க வேண்டுமென்று சொன்னா யாகில்**
**மாகர்த்தன் மாபோகி மாத்தி யாகி**
**வகைமூன்றா யவரிருக்கு மகிமை கேளாய்.** **(23)**

தேகத்தன் அலனாகி, அகர்த்தனாகி,
சீவனின்றி, பிரமமாய்த் தெளிந்த முத்தன்,
போகத்தை உண்பன் என்றால், கருத்தாவாமே;
பூரணமாம் அகர்த்தனுக்கு, போகம் உண்டோ ?
சோகத்தை அறுத்து அருளும் குருவே ! இந்தத் துகள்
அறுக்க வேண்டும் என்று சொன்னாயாகில்,
மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி
வகை மூன்றாய்,அவர் இருக்கு(ம்) மகிமை கேளாய்.

தேகத்தின் நினைவு-பற்று இல்லாதவனாய், அனுபவிக்கக் காரணமான சீவத்துவம் இன்றி, அகர்த்தனாய், பரிபூரணப்பிரமமாய் தன்னைத் தெளிவாய் அறிந்த சீவன்முத்தன் போகத்தைப் புசிப்பான் என்றுசொன்னால், செய்பவன் என்ற தன்மை வந்தவன் ஆவானே! பரிபூரணப் பிரமமே தானாய் இருக்கும் அகர்த்தனாகிய சீவன் முத்தனுக்குப் பிராரர்த்த போகம் உண்டோ? துன்பத்தை அழித்தருளும் குருவே! இந்த சந்தேகத்தைப் போக்க வேண்டும் என்று கேட்டால், மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி என மூன்றுவகையாய் அந்த சீவன் முத்தர் இருக்கும் மகிமையைக் கேளாய்.

**செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங்**
**காந்தச் சிலைமலைமுன் னிரும்புகள்சேட் டிக்கு மாபோல்**
**செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்கு மென்முன்**
**செடமான வுலகமெலாஞ் சேட்டை செய்யும்**
**மெய்கலந்த விந்திரிய விகார ரூப**
**விவகார விருத்திக்கும் விருத்தி தானா**
**மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சி யேநான்**
**வெயில்போலென் றுறைத்தவனே விபுமா கர்த்தன்.** **(24)**

செய்கையும்,செய்விக்கையுமற்று இருக்கும்
காந்தச் சிலை மலை முன், இரும்புகள் சேட்டிக்குமா போல், செய்கையும்
செய்விக்கையுமற்று இருக்கும் என் முன்,
செடமான உலகம் எ(ல்)லாம் சேட்டை செய்யும்;
மெய்கலந்த இந்திரிய, விகார ரூப,
விவகார விருத்திக்கும் விருத்தி தானா(ய்),
மெய் கலந்த சமாதிக்கும் சாட்சியே நான்;
வெயில் போல் என்று உறைத்தவனே, விபு மாகர்த்தன்.

ஒன்றைச் செய்தலும், வேறொன்றைச் செய்யவைக்கும் தன்மையும் இல்லாமல் உள்ள காந்தக் கல்லால் ஆகிய மலையின் முன்னே இரும்புகள் சலிக்கின்ற (செயல்படும்) தன்மை போல், ஒன்றைச் செய்தலும், வேறொன்றைச் செய்யவைக்கும் தன்மையும் இல்லாமல் பூரணமாய் இருக்கும் எனது முன்னே சடமாய் உள்ள பிரபஞ்சம் எல்லாம் தத்தம் விவகாரங்களைச் செய்கின்றன. சூரிய ஒளியினால் தான் உலக விவகாரங்கள் நடைபெறுகின்றன. ஆனால், உலக விவாகரத்திற்கும் விவகாரம் நடைபெறாதிருந்தாலும் சாட்சி மாத்திரமாய் இருக்கும் சூரியன் போல, தேகத்தில் உள்ள கண், காது முதலான இந்திரியங்களால் பலவிதமான விவகாரங்களை உடைய மனோவிருத்திக்கும், அதே மனோவிருத்தி தன்மயமாக பிரமத்தில் பொருந்திய சமாதிக்கும் யான் சாட்சி மாத்திரமாக இருப்பவன் என்று அழுத்தமான அனுபவம் உடையவனே வியாபகமான மாகர்த்தன்.

**அறுசுவையின் குணங்குற்ற மசுத்தஞ் சுத்த**
**மபத்தியம்பத் தியமெனவூ ணாய்ந்தி டாமல்**
**பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போற்**
**போகங்கள் புசிப்பவன்மா போகி யாகும்**
**சிறிதுபெரி துகடனதந் நியங்க ணன்மை**
**தீமைகள்சே ரினும்படிகச் செயல்போற் சித்தம்**
**வெறிதிருக்கு மவனேமாத் தியாகி யாவன்**
**விரதமிம்மூன் றுடையவரே வீடு ளோரே.** **(25)**

அறுசுவையின் குணம்-குற்றம்,அசுத்தம்-சுத்தம்,
அபத்தியம்-பத்தியம் என ஊண் ஆய்ந்திடாமல், பொறுமையுடன்
கிட்டினதை, காட்டுத் தீப் போல்,
போகங்கள் புசிப்பவன் மாபோகி ஆகும் ;
சிறிது-பெரிதுகள், தனது-அந்நியங்கள், நன்மை-
தீமைகள் சேரினும், படிகச் செயல்போல்,சித்தம்
வெறிது இருக்கும் அவனே, மாத்தியாகி ஆவன்;
விரதம் இம்மூன்று உடையவரே, வீடு(உள்)ளோரே.

அறுசுவைகளை உடைய உணவில் இது சுவையுடையது என்றும் சுவையற்றது என்றும், அசுத்தம் என்றும் சுத்தம் என்றும், அபத்தியம் (தேகத்திற்கு ஒவ்வாதது) என்றும் பத்தியம் (தேகத்திற்கு உகந்தது) என்றும் ஆய்ந்து பார்க்காமல், சகிப்புடன், கிடைத்ததைக் காட்டுத்தீ புசிப்பது போல, உணவு முதலான போகங்களைப் புசிப்பவன் மாபோகி ஆவன். சிறிதும் பெரிதுமான பொருள்கள், தன்னுடையதும் மற்றவருடையதுமான பொருள்கள், புண்ணிய பாவங்கள் தன்னை வந்து அடைந்தாலும், எவ்வாறு படிகம் தன் எதிரே வைத்த பொருள்களின் உருவத்தைக் காட்டினாலும், அந்தப் பொருள்களின் தன்மையை அடையாதது போல சித்தம் பற்றின்றி இருக்கும் அவனே மாத்தியாகி ஆவன். இந்த மூன்று வகை விரதம் உடையவரே சீவன் முத்தர் ஆவர். இவ்வாறு உள்ள அவர்கள் போக அனுபவத்தால் கர்த்தர் (செய்வதில் பற்று உடையவராக) ஆவது எப்படி? நீயே ஆராய்ந்து பார்.

**மெய்யுங் கொண்டு பிராரத் தந்தரு விதிவழி நின்றிடவும்**
**உய்யுங் கர்மிக ளுக்கநு குணமா வுறுதொழில் செய்திடவும்**
**செய்யும் செய்கை முடிந்தவ னென்றுரை செப்புவ தெப்படியோ**
**நையுந் துன்ப மகற்றிய குருவே நலமா வருள்வீரே. (26)**

மெய்யும் கொண்டு, பிராரத்தம் தரு(ம்) விதி வழி நின்றிடவும்;
உய்யும் கர்மிகளுக்கு அநுகுணமா(ய்) உறுதொழில் செய்திடவும்;
செய்யும் செய்கை முடிந்தவன் என்று, உரை செப்புவது எப்படியோ?
நையும் துன்பம் அகற்றிய குருவே ! நலமா(ய்) அருள்வீரே.

*(எல்லாம் தெரிந்த ஞானி, தெரியாத அஞ்ஞானிகளைக் குழப்பாமல் அவர்களுக்கு உதவிகரமாக கருமங்கள் செய்ய வேண்டும் என்று சாத்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது.)* தேகத்தையும் வைத்துக்கொண்டு, பிராரர்த்த வழியில் சென்று, பிழைக்கவேண்டும் என்று கருமம் செய்து வரும் மாந்தர்களுக்கு அனுகூலமாக ஞானி கர்மங்களைச் செய்து வந்தால், ஞானியைச் செய்ய வேண்டிய செயல்களைச் செய்து முடித்தவன்(கிருத கிருத்தியன்) என்று கூறுவது எப்படியோ? யான் அறியேன். வருந்துவதற்குக் காரணமாய் இருந்த துக்கத்தை அகற்றிய குருவே! இந்த சந்தேகம் தீர உரைத்தருளுவீர்.

**ஆடவர் செய்தொழின் மூவகை யாகு மவித்தை வசத்துறுநாள்**
**ஏடணை மமதை யகந்தையு ளார்க்கே யிகபர விவகாரம்**
**வீடணு குவமெனு மிச்சையு ளார்க்கே வித்தை படிப்பதெலாம்**
**பாடன் மிகுந்தொழி லாற்பல னுண்டோ பரிபூ ரணமானால். (27)**

ஆடவர் செய்தொழில் மூவகையாகும்;அவித்தை வசத்து (உ)று நாள்;
ஏடணை, மமதை, அகந்தை உ(ள்)ளார்க்கே இக, பர விவகாரம்;
வீடு அணுகுவம் எனும் இச்சையுளார்க்கே, வித்தை படிப்பது எ(ல்)லாம்;
பாடல் மிகும் தொழிலால் பலனுண்டோ ? பரிபூரணமானால்.

தத்துவ ஞானம் அடைவதற்கு முன்னே அவித்தை (அஞ்ஞான) வசத்தில் இருக்கும் போது புருஷர்கள் செய்யத்தக்க முவகை காரியங்கள்–1.உழவு முதலானவை, 2.யக்ஞம் முதலானவை, 3.சிரவணம் முதலானவை. அவற்றுள் போகத்தில் இச்சையும், எனது என்னும் அபிமானமும், அகந்தையும் உடையோர்க்கே இகலோக பரலோக விவகாரங்கள். மோட்சம் அடைந்தே ஆகவேண்டும் என்னும் இச்சை உடையோர்க்கே ஞான சாத்திர சிரவண (கேட்டல்), மனன(சிந்தித்தல்), நிதித்தியாசனம்(தெளிதல்) ஆகிய அனைத்தும் செய்யத் தக்கன ஆகும். பரிபூரண பிரமமே தான் என்றான பின்பு, சிரவண முதலியவற்றாலும், இகலோக பரலோக செயல்களாலும் அடையத்தக்க பயன்உண்டோ? இல்லை.

**குரவர் சிகாமணி யேகே ளீர்நீர் கூறின வழியொக்கும்**
**பரமுட னிகமு மிழந்தவ ரன்றோ பழகுவர் மெய்ஞ்ஞானம்**
**விரவு முயற்சியின் மீண்டவ ரதையினி வேண்டுவ ரோவேண்டார்**
**சிரவண மனனா திகள்வேண் டாவோ சித்த முறைத்திடவே. (28)**

குரவர் சிகாமணியே கேளீர் ! நீர் கூறின வழியொக்கும்;
பரமுடன் இகமும் இழந்தவர் அன்றோ ? பழகுவர் மெய்ஞ்ஞானம்;
விரவு முயற்சியில் மீண்டவர், அதை இனி வேண்டுவரோ?வேண்டார்;
சிரவண, மனனாதிகள் வேண்டாவோ? சித்தம் உறைத்திடவே.

தேசிக சிரோமணியே! கேளீர். தாங்கள் சொன்ன வழி ஒப்புக் கொள்ள வேண்டியதே. பரலோகத்து இச்சையும், இகலோகத்து இச்சையும் விட்டவர் அல்லவா தத்துவ ஞான அப்பியாசம் செய்வார். மேற்சொன்ன மூவகை செயல்கள் செய்விதிலிருந்து விடுபட்ட சீவன் முத்தர் அந்த விவகாரத்தை விரும்பமாட்டார்கள் என்பதே உண்மை. அப்படியிருக்க, சித்தம் ஆன்மாவிலிருந்து வெளிவராமல் நிலைத்து நிற்க சிரவண, மனன முதலான அப்பியாசம் அவர்களுக்குத் தேவையில்லையா?

**கிளர்மக னேகேள் தத்துவ மறியார் கேட்டல் செயக்கடனே**
**தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களுளார்**
**தெளிதலி னிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர்**
**வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர் வேண்டுவ தொன்றுண்டோ. (29)**

கிளர் மகனே கேள்! தத்துவம் அறியார் கேட்டல் செயக் கடனே;
தளர்வு அறு சிந்தித்தலின் முயல்வார் சிலர்;சந்தேகங்கள் உ(ள்)ளார்;
தெளிதலில் நிற்பார், விபரீதப் பேய் தீரா(து) வாதனையோர்;வெளிஉருவாய்,
அறிவாய் நிறைவாயினர்,வேண்டுவது ஒன்றுண்டோ ?

ஞானமயமாய் விளங்குகின்ற மைந்தா! கேள். அத்வைதமான பிரமமும் ஆன்மாவும் ஒன்று என்று அறியாதவர் சிரவணம் செய்ய வேண்டுவது முறையே. சகல துன்பமும் அறுப்பதற்குக் காரணமான மனனம் முயற்சி செய்வார். ஜகம் உண்மையானது, ஆன்மா என்பது இந்த உடலே என்ற சந்தேகங்கள் உடைய சிலர் விபரீதம் உடையவர் நிதித்தியாசனத்தில் (தெளிதல்) முயற்சி செய்பவராய் இருப்பர். அஞ்ஞானத்தின் மறைப்பு நீங்கி சச்சிதானந்த பரிபூரண வடிவமாய் விளங்கும் சீவன் முத்தர்கள் சிரவண மனன நிதித்தியாசன அப்பியாசம் செய்ய வேண்டுமோ? தேவையில்லை.

**ஐயா கேளீர் தத்துவ ஞானியு மஞ்ஞா னிகள்போலச்**
**செய்யா நின்றேன் கண்டே னுண்டேன் சென்றே னெனலாமோ**
**பொய்யாம் விபரீ தங்க ளவர்க்குப் போயின வென்றீரே**
**மெய்யாம் பிரம விசார மிதன்றே வெளியா வுரையீரே. (30)**

ஐயா கேளீர்! தத்துவ ஞானியும், அஞ்ஞானிகள் போல,
செய்யா நின்றேன், கண்டேன், உண்டேன், சென்றேன் எனலாமோ?
பொய்யாம் விபரீதங்கள், அவர்க்குப் போயின என்றீரே!
மெய்யாம் பிரம விசாரம் இது அன்றே! வெளியா(ய்) உரையீரே.

குருவே கேட்பீராக. சீவன் முத்தர்கள் விரும்பி செய்யத் தக்கவை எதுவும் இல்லை என்ற போதில், அஞ்ஞானிகளைப் போலவே குளித்தல் முதலியவைகளைச் செய்கின்றேன், இவனைக் கண்டேன், இன்ன உணவு முதலியவற்றை உண்டேன், இன்னின்ன இடங்களுக்குச் சென்றேன் என்று சொல்லலாமா? மித்தை(பொய்) யாகிய விபரீத பாவனைகள் அந்த பிரமஞானிகளுக்குப் போய்விட்டன என்றீரே. அவனுக்கு உரிய சத்தியமாகிய பிரம விசாரம் இது அல்லவே! வெளிப்படையாக இதனை அருளுவீரே. *(அதாவது செய்கின்றேன், கண்டேன், உண்டேன் என்கிற போது, 'செய்பவன் நான்' என்ற எண்ணத்தில் சொல்வதாக ஆகாதோ?)*

**ஓய்ந்த கனாவிற் கண்ட பழங்கதை யோதுவன் வாதனையால்**
**ஆய்ந்தறி வுற்றவ னப்படி செப்புவ னாபா சனுமாகான்**
**மாய்ந்ததன் னுடல்வே மளவும் விண்ணவன் மநுட னெனப்படுவான்**
**வீய்ந்தசி தாபா சன்போ மளவும் விவகாரந் தொடரும். (31)**

ஓய்ந்த கனாவில் கண்ட பழங்கதை, ஓதுவன் வாதனையால்,
ஆ(ரா)ய்ந்து,அறிவுற்றவன், அப்படி செப்புவன்;ஆபாசனுமாகான்;
மாய்ந்த தன் உடல் வே(கும்) அளவும்,விண்ணவன் மநுடன் எனப்படுவான்;
வீய்ந்த சிதாபாசன் போ(கு)ம் அளவும், விவகாரம் தொடரும்

ஒருவன் தான் கனவில் கண்ட வியாபாரங்களை விழித்து எழுந்த பின்பு எவ்வாறு ஞாபகத்தினால் சொல்வானோ, அப்படி ஆன்மா அனான்மாக்களைச் செவ்வையாக விசாரித்து, ஆத்மா தனது யதார்த்த வடிவம் என்றும், அனாத்மா அனைத்தும் கற்பனை வடிவம் என்றும் அவற்றை உள்ளவாறு அறிந்தவன், ஏற்கெனவே சொல்லிப் பழகிய படியே செய்கின்றேன், கண்டேன், உண்டேன், சென்றேன் என்று சொல்வான். இவ்வாறு சொல்லினும் சீவ பாவனை உடையவன் ஆகமாட்டான். உலகில் இறந்தவனின் தேகம் சாம்பல் ஆகும் அளவும், தேவன், மனிதன் என்று பிறரால் சொல்லப்படுவதைப் போல், தத்துவஞானத்தினால் அகம்பாவம் போய்விட்ட சிதாபாசன் மறைந்து விதேக முத்தி அடையும் வரை மேற்சொன்ன விவகாரம் தொடரும்.

**ஆனா லையா குருவே காண்ப தசத்திய மென்றாலும்**
**நானா விவகா ரந்துய ரலவோ ஞான சுகந்தருமோ**
**போனா லன்றோ நன்றா நிட்டை பொருந்திடல் வேண்டாவோ**
**தானா நிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவ னெப்படியோ. (32)**

ஆனால் ஐயா, குருவே! காண்பது அசத்தியம் என்றாலும்,
நானா விவகாரம் துயர் அ(ல்)லவோ? ஞான சுகம் தருமோ?
போனால் அன்றோ நன்றா(ம்); நிட்டை பொருந்திடல் வேண்டாவோ?
தானா(ம்) நிட்டை புரிந்தால், செய்கை தவிர்ந்தவன் எப்படியோ ?

ஞானி விவகாரம் விதேக முத்தி வரையில் தொடருமானால் காண்பது அசத்தியம் என்றாலும் பலவிதமான விவகாரங்கள் துன்பத்தைத் தரும் அல்லவா! பரிபூரண பிரமானந்தத்தைத் தருமா? அவ்வாறான விவகாரங்கள் போனால் அல்லவோ அந்த ஆனந்தம் வரும். நிருவிகற்ப சமாதி கூடல் வேண்டாவோ? தன் மயமாகும் நிட்டை புரிந்தால் அவன் செய்யவேண்டிய செய்கையை செய்து முடித்தவன் (கிருத கிருத்தியன்) ஆவது எப்படியோ?

**தெரிதரு மகனே யாரம் பத்தொடு தீரும் விவகாரம்**
**உரிய தியானமும் விவகா ரங்களு முள்ளத் தொழிலன்றோ**
**துரிய பரம்பொரு ளானவர் வேறொரு தொழில்செய் வதுமுண்டோ**
**அரிய சமாதிகள் பழகுவ னேலவ னாரூ டனுமன்றே. (33)**

தெரிதரு மகனே! ஆரம்பத்தொடு தீரும் விவகாரம்;
உரிய தியானமும், விவகாரங்களும், உள்ளத் தொழில் அன்றோ?
துரிய பரம் பொருளானவர், வேறொரு தொழில் செய்வதும் உண்டோ?
அரிய சமாதிகள் பழகுவனேல், அவன் ஆரூடனும் அன்றே!

உண்மையை கேட்டுத் தெரிந்துகொள்ளும் மகனே! ஞானியின் விவகாரம் அவனது பிராரர்த்த கருமம் முடியும் போது அதனுடன் ஒழிந்துவிடும். பிரமானந்தம் அடைதற்குரிய தியானமும், செய்கின்றேன், உண்டேன் முதலான விவகாரங்களும் அந்தக்கரணத்தின் தொழில் அல்லவா! துரிய நிலை என்னும் சமாதியில் விளங்கும் பரம்பொருளாக இருக்கும் சீவன் முத்தர் தாமாகவே இருப்பது அன்றி வேறு ஏதாவது ஒரு தொழிலைச் செய்வதுண்டோ?(இல்லை அல்லவா!) அடைதற்கு அரிய சமாதிகளைக் கர்த்தா பாவனையோடு பழகுவானேல் அவன் செய்கை செய்து முடித்தவனான ஆருடன் அல்ல. அவன் அப்பியாசியே. *(பயணத்தில் உள்ளவனே. பயணம் முடித்தவன் ஆகமாட்டான்)*

**உத்தம குருவே யாரூ டருமா யொருதொழி லற்றவருள்**
**சித்தம டங்கு தியானா திகள்சிலர் செய்குவ தென்னென்றால்**
**இத்தல மருவும் பிராரத் தப்பிரி வெப்படி யப்படியே**
**முத்தரும் வெகுவித மாகுவ ரென்பது முன்னே சொன்னேனே. (34)**

உத்தம குருவே! ஆரூடருமாய், ஒருதொழில் அற்றவருள்,
சித்தம் அடங்கு(ம்) தியானாதிகள், சிலர் செய்குவது என்? என்றால்,
இத்தல(ம்) மருவும் பிராரத்தப் பிரிவு எப்படி ?அப்படியே,
முத்தரும் வெகு விதம் ஆகுவர் என்பது, முன்னே சொன்னேனே.

உத்தம குருவே! சொருபத்தில் நிற்பவரும் யாதொரு தொழிலும் செய்ய வேண்டியவை இன்றி செய்து முடித்தவர்களில், சிலர் சித்தம் அடங்கும் தியானம் முதலிய உபாயங்களைப் பயிற்சி செய்வது ஏன் எனில், இவ்வுலகில் அவரவர்க்கு அமைந்த பிராரர்த்த பேதம் எப்படியோ அப்படியே. சீவன் முத்தரும் அநேகப் பிரகாரமான விவகாரங்களை உடையவர் என்று முன்னே (தத்துவ விளக்கப்படலத்தில் பிரமவித்து விவகாரங்கள் குறித்து) கூறியிருக்கின்றேன்.

**நல்லவ னேகே ளுலகுப காரம் ஞானிகள் விவகாரம்**
**அல்லது வேறொரு பெறுபே றும்மிலை யதனாற் பிணியுமிலை**
**வல்லசி ருட்டிமு தற்பல தொழிலால் வருபுண் ணியபாவம்**
**எல்லவ ருக்கும நுக்கிர கஞ்செயு மீசன டைந்திலனே. (35)**

நல்லவனே கேள்! உலக உபகாரம், ஞானிகள் விவகாரம்;அல்லது வேறொரு பெறுபேறும்இ(ல்)லை;அதனால் பிணியும் இ(ல்)லை;
வல்ல சிருட்டி முதல் பல தொழிலால்,வரு(ம்) புண்ணிய பாவம்,
எல்லவருக்கும் அநுக்கிரகம் செ(ய்)யும் ஈசன் அடைந்திலனே.

நல்லவனே கேள். ஞானிகள் செய்யும் விவகாரம் உலகுக்கு உபகாரமாம். இது அன்றி அவ் விவகாரத்தால் வேறொரு பெரும்பேறும்(லாபமும்)இல்லை. துன்பமும் இல்லை. படைத்தல் முதலான செயல்களை ஈசன் செய்தாலும், அதனால் விளைகின்ற தர்ம அதர்மங்களை ஈசன் அடையாததுபோல, ஞானிகளும் தமது விவகாரங்களால் லாப-நஷ்ட இரட்டைகளை அடைவதில்லை.



**ஈசனு மாயரு வாயுரு வாகி யெழுந்தரு ளுங்குருவே**
**ஈசனு ஞானியு மொப்பென் றீரே யெப்படி யொப்பென்றால்**
**ஈசனு ஞானியு மமதைய கந்தை யிகந்ததி னாலொப்பாம்**
**ஈசனு மாம்பல சீவரு மாமுல கெல்லா மிவனாமே.** **(36)**

ஈசனுமாய், அருவாய்,உருவாகி எழுந்தருளும் குருவே !
ஈசனும், ஞானியும் ஒப்பு என்றீரே! எப்படி ஒப்பு என்றால்,
ஈசனு(ம்) ஞானியும் மமதை ,அகந்தை இகந்ததினால் ஒப்பாம்;
ஈசனுமாம்,பல சீவருமாம்;உலகு எல்லாம் இவனாமே.

ஈசனுமாய் அறிவு வடிவமாயும் எழுந்தருளும் குருவே! ஈசனும் ஞானியும் தம்முள் ஒப்பானவர் என்று கூறினீரே! எப்படி ஒப்பாவர் என்றால், ஈசனும் ஞானியும் மாயை அவித்தைகளிலும் அவைகளின் காரியங்களிலும் மமதை, அகந்தை ஆகியவற்றின் அபிமானம் இல்லாததால் சமானம் ஆவர். இந்த ஞானியானவன், 'பிரமத்தை அறிந்தவன் பிரமமே' என்ற வேத வாக்கியப்படி பிரமமாய் இருத்தலால், ஈசனும் ஆவன், பலவித சீவர்களும் ஆவன், உலகம் அனைத்தும் தான் ஆவன்.

**எல்லாச் சீவரு மிவனா மென்றீ ரிவன்றான் முத்தியடைந்**
**தெல்லாச் சீவரு முத்திபெ றாமலி ருப்பா னேனையா**
**எல்லாச் சீவரும் வெவ்வே றானா லிவனெல் லாமலனே.**
**எல்லாப் பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழியீரே.** **(37)**

எல்லாச் சீவரும் இவனாம் என்றீர்; இவன்தான் முத்தி அடைந்து
எல்லாச் சீவரும் முத்தி பெறாமல் இருப்பான் ஏன்? ஐயா!
எல்லாச் சீவரும் வெவ்வேறானால், இவன் எல்லாம் அ(ல்)லனே;
எல்லாப்பொருளும் உரைத்து அருள் குருவே! இதை நீர் மொழியீரே.

ஐயனே! இந்த ஞானியானவன் எல்லாச் சீவருமாய் இருக்கின்றான் என்றீர். அவ்வாறாயின், இந்த ஞானி மோட்சம் அடைய அந்த எல்லாச் சீவரும் மோட்சம் அடைய வேண்டும் அல்லவா? எல்லாச் சீவர்களும் இவனை விட வெவ்வேறாக இருந்தால் இந்த ஞானி எல்லா சீவர்களுமாக முடியாது அல்லவா! எல்லாவற்றையும் உரைத்தருளும் குருவே இதையும் நீர் அருளுவீராக.

**அகமெனு மான்மா பூரண மேக மநேக விதஞ்சீவர்**
**அகமெனு மந்தக் கரணோ பாதிக ளளவிலை யாதலினால்**
**சகமுழு துங்குளிர் சந்திர னேகஞ் சலசந் திரர்பலராம்**
**சகமதி லேரி குளஞ்சிறு குழிசால் சட்டி குடம்பலவால்.** **(38)**

அகம் எனும் ஆன்மா பூரணம், ஏகம்; அனேகவிதம் சீவர்;
அகம் எனும் அந்தக்கரண உபாதிகள்,அளவி(ல்)லை; ஆதலினால்,
சகம் முழுதும் குளிர் சந்திரன் ஏகம்; சல சந்திரர் பலராம்;
சகம் அதில் ஏரி, குளம், சிறு குழி,சால், சட்டி, குடம் பலவால்.

அகம் அகம் (நான் நான்) என்று யதார்த்தத்தில் (உண்மையில்) சொல்லப்படுவதற்கு உரிய ஆன்மா பரிபூரணமும் ஏகமும் ஆகும். இருந்த போதிலும், யதார்த்தம் இல்லாத கற்பித உலகில், நான் என்று சொல்வதில் அநேக விதமான அந்தக்கரண உபாதிகள் அளவில்லாதவை. அந்த உபாதிகளினால் அநேக வித சீவர்களாய் விளங்குகின்றது. அதாவது ஆத்மா ஒன்றாய் இருந்தும் அந்தக்கரண வேறுபாட்டினால் அநேக வித ஜீவர்களாக விளங்குகின்றனர். உலக முழுதும் குளிர்ச்சியைத் தரும் சந்திரன் ஒருவனே என்ற போதிலும், உலகில் நீர் தேங்கும் இடங்களான ஏரி, குளம், சிறு பள்ளம், சால், சட்டி, குடம் என்று உபாதிகள் பலவாக இருத்தலால், அந்த தண்ணீரில் பிரதிபிம்பித்த சந்திர பிரதிபிம்பம் பல.

**சட்டி குடங்களி லொன்று நசித்திடி னதினுட் சலசந்திரன்**
**ஒட்டு முதற்சந் திரனொடு கூடு மொழிந்தவை கூடாவே**
**கட்டு முபாதி நசித்திடு சீவன் காரண வான்மாவில்**
**கிட்டு மயிக்க முபாதி கெடாதவர் கேவல மாகாரே.** **(39)**

சட்டி குடங்களில் ஒன்று நசித்திடின், அதினுள் சல சந்திரன்,
ஒட்டு முதல் சந்திரனொடு கூடும்; ஒழிந்தவை கூடாவே;
கட்டும் உபாதி நசித்திடு(ம்) சீவன், காரண ஆன்மாவில்
கிட்டும் அயிக்கியம்; உபாதி கெடாதவர், கேவலம் ஆகாரே.

சட்டி, குடம் முதலிய உபாதிகளில் ஒன்று நாசமானால், அதிலுள்ள பிரதிபிம்ப சந்திரன் வானில் உள்ள சந்திரனோடு சேர்ந்துவிடும். உபாதி கெடாத ஏனைய பிரதிபிம்பங்கள் எப்படிச் சேராதோ, அப்படி பந்தம் கட்டுண்ட அந்தக்கரணத்தில் உள்ள அஞ்ஞான உபாதி ஞானத்தால் நாசமாகின்ற சீவன் தனக்குக் காரணமான ஆன்மாவில் ஐக்கியமாகி விடும். அஞ்ஞான உபாதி ஞானத்தால் கெடாத ஏனைய சீவர்கள் ஐக்கியம் ஆகார்.

**இவனயன் மால்சிவ னாகிய வீசரொ டெப்படி யொப்பாவன்**
**சிவன்முதன் மூவரு மகில சிருட்டி திதிநா சங்கள் செய்வார்**
**அவர்பிறர் மதிகளு முக்கா லங்களு மறிவார் விபுவாவார்**
**தவமிகு குருவே யிவனுக் கவையிலொர் சற்றுங் காணேனே. (40)**

இவன் அயன், மால்,சிவன் ஆகிய ஈசரொடு எப்படி ஒப்பு ஆவன்?
சிவன் முதல் மூவரும் அகில சிருட்டி, திதி,நாசங்கள் செய்வார்;
அவர் பிறர் மதிகளும், முக்காலங்களும் அறிவார்; விபு ஆவார்;
தவ(ம்)மிகு குருவே ! இவனுக்கு அவையில் ஓர் சற்றும் காணேனே.

இந்த ஞானி என்பவன் அயன், அரி, ருத்திரன் ஆகிய ஈசரொடு எப்படி இணையாவான்? சிவன் முதல் மூவரும் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்வர். அவர்கள் மற்றவர்களுடைய புத்தியையும், முக்காலங்களையும் அறிவர். சர்வத்திலும் வியாபித்துள்ளவர்கள். தவம் மிகுந்த ஆசாரியரே! இந்த ஞானிக்கு அந்த மகிமைகளில் ஒரு சிறிதும் கண்டிலேன்.

**தடத்து நீர்நிலாத் திரியொளி யுபயமுந் தழுவுமூர் தனைக்காக்கும்**
**குடத்து நீர்விளக் கினிலொளி யிரண்டுமோர் குடும்பமாத் திரங்காக்கும்**
**அடுத்த மைந்தனே ஞானியு மீசனு மறிவினாற் பிரிவில்லை**
**கெடுத்த மாயையின் குணங்களான் மேலென்றுங் கீழென்றும் பிரிவாமே (41)**

தடத்து நீர்,நிலாத் திரி ஒளி உபயமும், தழுவும் ஊர் தனைக் காக்கும்;
குடத்து நீர், விளக்கினில் ஒளி இரண்டும்,ஓர் குடும்ப(ம்) மாத்திரம் காக்கும்;
அடுத்த மைந்தனே! ஞானியும்,ஈசனும் அறிவினால் பிரிவு இல்லை;
கெடுத்த மாயையின் குணங்களால் மேலென்றும், கீழென்றும் பிரிவாமே.

ஊருணி ஜலமும், பகல் வத்தியின் ஒளியும் ஆகிய இரண்டும் தம்மைச் சார்ந்துள்ள ஊர் முழுதும் காக்கும். குடத்து நீரும், அகல் விளக்கின் ஒளியும் ஒரு குடும்ப மாத்திரம் காக்கும். இருப்பினும் காப்பது என்பதில் பேதம் இல்லாதது போல் சத்சங்கத்தை நாடிய மைந்தா! ஞானியும் ஈசனும் 'தான் பிரமம்' என்னும் ஞானத்தால் பேதம் அடைவதில்லை. பிரகிருதியின் சத்துவ குண (மாயை), இராசத குண (அவித்தை) என்ற உபாதிகளால் மேல் கீழ் என்னும் பேதம் உடையவராய் இருக்கின்றனர்.

**நரரின் மன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான**
**சுரர்கண் மாயைவல் லவரணி மாதிக டொக்கமா தவமிக்கோர்**
**தரணி மாநுடர்க் கவைகளில் லாமையாற் றாழ்வுள ரானாலும்**
**பிரம பாவனை யாலிவ ரவரெனும் பேதமொன் றிலைபாராய். (42)**

நரரில் மன்னனை,சித்தரைப் போலவே, நாரணன் முதலான சுரர்கள்
மாயை வல்லவர்; அணிமாதிகள் தொக்க மா தவ(ம்) மிக்கோர்;
தரணி மாநுடர்க்கு,அவைகள் இல்லாமையால்,தாழ்வுளர்; ஆனாலும்,
பிரம பாவனையால் இவர், அவர் எனும் பேதம்,ஒன்றி(ல்)லை பாராய்.

மனிதர்களுக்குள்ளே தண்டிப்பதும் காப்பதும் உடைய அரசனையும், சபித்தல், அனுக்கிரகம் உடைய சித்தரையும் போல, விஷ்ணு முதலான தேவர்கள் மாயையில் வல்லவராயும், அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்ற எட்டு சித்திகளும் கைவந்த மாதவம் மிகுந்தவராயும் உள்ளனர். பூமியில் ஞானிகளுக்கு அந்த மாயா வல்லமையும், எண்சித்திகளும் இல்லாமையால் திருமால் முதலானவரினும் தாழ்ந்தவர்ஆயினும், 'நாம் பிரமம்' என்னும் பாவனையால், ஞானிகள் தாழ்ந்தவர், ஈசுரர் உயர்ந்தவர் என்னும் பேதம் சிறிதுமில்லை. ஊகித்துப் பார்ப்பாய்.

**முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக் கணிமாதி**
**சித்தி பூமியிற் கண்டிருக் கவுமந்தச் செல்வமீ சனதென்றீர்**
**புத்தி யொத்திட வுரைத்தரு ளென்றிடிற் புகழுமீ சனைநோக்கிப்**
**பத்தி செய்திடுந் தவத்தினா லியோகத்தாற் பலித்ததென் றறிவாயே. (43)**

முத்தி நல்கிய சற்குருவே ! பல முனிகளுக்கு அணிமாதி சித்தி,
பூமியில் கண்டிருக்கவும், அந்தச் செல்வம் ஈசனது என்றீர்;
புத்தி ஒத்திட உரைத்து, அருள் என்றிடில், புகழும் ஈசனை நோக்கி,
பத்தி செய்திடும் தவத்தினால், யோகத்தால் பலித்தது என்று அறிவாயே.

முத்தியைத் தந்த குருவே! பல முனிவர்களுக்கு அணிமா முதலிய சித்திகள் பூமியில் 'இருப்பதாகப் பார்த்திருக்கிறோம், அந்த சித்திகளாகிய செல்வம் ஈசனுடையது என்றீர். புத்தியில் சந்தேகம் இன்றி ஏற்புடையதாகும்படி உரைத்திடக் கேட்பாயாகில், புகழும் ஈசனை நோக்கி, செய்திடும் பக்தியாலும், பாவ நிவர்த்திக்காக செய்திடும் (கிருச்சிர சாந்திராயண முதலான) தவங்களாலும், அட்டாங்க யோகத்தாலும் (அணிமா முதலான செல்வம் முனிவர்களுக்குச்) சித்தித்தது என்று அறிவாய்.

**சிவசொ ரூபமாந் தேசிக மூர்த்தியே சித்திமுத் தியிரண்டும்**
**தவமு ளோரடை குவரெனி லவர்கள்போற் சகலரு மடைவாரே**
**அவர்கள் பூருவஞ் சித்தியு ஞானமு மடைந்ததுங் கண்டோமே**
**இவர்கண் ஞானிக ளென்றிடிற் சித்திக ளிவர்க்கிலா வகையேதோ. (44)**

சிவ சொரூபமாம் தேசிக மூர்த்தியே ! சித்தி, முத்தி இரண்டும்,
தவமுளோர் அடைகுவர் எனில்,அவர்கள் போல் சகலரும் அடைவாரே!
அவர்கள் பூருவம் சித்தியும், ஞானமும் அடைந்ததும் கண்டோமே;
இவர்கள் ஞானிகள் என்றிடில்,சித்திகள் இவர்க்கு இ(ல்)லா வகை ஏதோ ?

சிவ வடிவமான தேசிக மூர்த்தியே! அணிமா முதலான சித்தியும் முத்தியும் ஆகிய இரண்டினையும் தவமுடையோர் அடைவர் என்றால், அவர்கள் போல் இக்காலத்துள்ள தவமுடையோர் யாவரும் அடைய வேண்டும் அல்லவா! அத்தவமுடையோர் முன்னே சித்தி முத்தி என்னும் இரண்டினையும் அடைந்தார் என்பதை சாத்திர வாயிலாக அறிந்திருக் கின்றோம். இக்காலத்துள்ள இவர்களை ஞானியர் என்று கூறினால் இவர்களிடத்து அணிமா முதலான சித்திகள் இல்லாததற்கு காரணம் யாது?

**காமி யத்தவங் காமிய மொன்றையுங் கருதிடாத் தவமென்றும்**
**பூமி யிற்றவ மிருவகை சித்தியும் போதமுந் தருமைந்தா**
**ஆமி வற்றிலொன் றியற்றினா ரொன்றையே யடைகுவ ரிதுதீர்வை**
**யாமு ரைத்தவவ் விரண்டையு மியற்றினா ரன்றுள பெரியோரே. (45)**

காமியத் தவம்,காமியம் ஒன்றையும் கருதிடாத் தவம் என்றும்
பூமியில் தவம் இருவகை;சித்தியும்,போதமும் தரு(ம்) மைந்தா!
ஆம்!இவற்றில் ஒன்று இயற்றினார், ஒன்றையே அடைகுவர்; இது தீர்வை;
யாம் உரைத்த, அவ்விரண்டையும் இயற்றினார்,அன்றுள பெரியோரே.

காமியத்தவம் (பலனைக் கருதி செய்யும் தவம்) என்றும் காமியம் ஒன்றையும் கருதிடா (நிஷ்காமியத்) தவம் என்றும் பூமியில் தவம் இருவகைப்படும். அவற்றுள் காமியத்தவம் அணிமா முதலான சித்திகளையும், நிஷ் காமியத்தவம் தத்துவ ஞானத்தையும் கொடுக்கும். மைந்தா! இவற்றில் ஒரு தவத்தைச் செய்பவர் ஒரு பயனையே அடைவர். இது நியமம். யாம் கூறிய அவ்விரண்டு தவங்களையும் செய்தனர் அக்காலத்து பெரியோர்கள்.

**அனக மைந்தனே முத்திஞா னத்தையே யடைந்தன ரல்லாமல்**
**செனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரோ**
**இனிய சித்தியே விரும்பினார் சிலர்சில ரிரண்டையு முயன்றாரம்**
**முனிவர் சித்திகள் வினோதமாத் திரந்தரு முத்தியைத் தாராவே** (46)

அனக மைந்தனே! முத்தி ஞானத்தையே அடைந்தனர் அல்லாமல்,
செனகன்,மாபலி,பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரோ?
இனிய சித்தியே விரும்பினார் சிலர்;சிலர் இரண்டையும் முயன்றார்;
அம்முனிவர் சித்திகள் வினோத(ம்) மாத்திரம் தரு(ம்); முத்தியைத் தாராவே.

பாவமற்ற மைந்தனே! நேரே மோட்ச சாதனமான தத்துவ ஞானத்தைத் தானே அடைந்தனர் அன்றி, ஜெனகன், மாபலி, பகீரதன் முதலானோர் சித்திகளைப் பழகினாரோ? (பழகவில்லை) சிலர் சித்தியைத் தான் விரும்பினர். சிலர் சித்தி, ஞானம் இரண்டினையும் பழகினர். அந்த முனிவர்கள் அடைந்துள்ள சித்திகள் (வானிலே பறத்தல், மண்ணிலே நுழைதல் முதலான) விநோதத்தை (விளையாட்டினை ) மட்டும் தரும். மோட்சத்தைத் தராது.

**யோக ஞானமே முத்தியைத் தருமெனி லொழிந்தசித் திகள்வேண்டி**
**மோக மாயுடல் வருந்தினார் சிலசில முத்தர்க ளேனென்றால்**
**போக மாய்வரும் பிராரத்த கர்மங்கள் புசித்தன்றோ நசித்தேகும்**
**ஆகை யாலந்தச் சித்திகள் பிராரத்த மாகுமென் றறிவாயே.** (47)

யோக ஞானமே முத்தியைத் தரும் எனில், ஒழிந்த சித்திகள் வேண்டி,
மோகமாய் உடல் வருந்தினார், சில சில முத்தர்கள்; ஏனென்றால்,
போகமாய் வரும் பிராரத்த கர்மங்கள்,புசித்தன்றோ நசித்து ஏகும்;
ஆகையால்,அந்த சித்திகள் பிராரத்தமாகும் என்று அறிவாயே.

யோக ஞானமே முத்தியைத் தரும் எனில், முத்தியைத் தர இயலாத சித்திகளை விரும்பி மோகமாய் சில சில முத்தர்கள் உடல் வருந்தினர் ஏன் என்றால், அனுபோகமாய் வருகின்ற பிராரர்த்தங்கள் அனுபவித்தால் அல்லவா நசித்துப் போகும். ஆதலின் அந்த சித்திகள் அடைந்தவர்களின் பிராரர்த்தம் என்று நீ அறிவாயாக.

**இலக்க மாயிரஞ் சுருதியா லூகத்தா லென்மன மசையாமல்**
**பெலக்க வேண்டுமென் றருள்குரு வேயகப் பிராந்திபோய்த் தெளிவானேன்**
**துலக்க மானகண் ணாடியை யடிக்கடி துலக்கினாற் பழுதன்றே**
**அலக்கண் மாற்றிய தேவரீ ரெனக்குரை யமிர்தங்க டெவிட்டாவே. (48)**

இலக்கம் ஆயிரம் சுருதியால், ஊகத்தால், என் மனம் அசையாமல்
பெலக்க வேண்டும்; என்று அருள் குருவே! அகப் பிராந்தி போய்த் தெளிவு ஆனேன்;
துலக்கமான கண்ணாடியை,அடிக்கடி துலக்கினால் பழுதன்றே;
*அலக்கண் மாற்றிய தேவரீர்! எனக்கு உரை அமிர்தங்கள்,தெவிட்டாவே.*

அநேக வேதப் பிரமாணங்களாலும், பல உத்திகளாலும் என் மனம் அசையாமல் திடமாக சொருபத்தில் அழுந்த வேண்டும் என்று *அருளிச் செய்கின்ற* குருவே! எனது அந்தக்கரணத்தில் முன்னிருந்த பிராந்தி (மயக்கம்) அகன்று தெளிவு உடையவன் ஆனேன். பிரகாசமான கண்ணாடியை அடிக்கடி துடைப்பதால் குற்றம் இல்லையே! எனது துன்பங்களை நீக்கிய தேவரீர் எனக்கு உரைத்தருளும் உபதேசமாகிய அமிர்தம் தெவிட்டவே இல்லை.

**கைத வங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ கருணையா லெனையாளும்**
**ஐய னேகுரு வேயெவ ராகிலு மநுபவித் தாலன்றிச்**
**செய்த கர்மங்கள் விடாவென்ற வசனமுஞ் சென்மசஞ் சிதம்வேவத்**
**துய்ய ஞானத்தீச் சுடுமென்ற வசனமுந் துணிவதெப் படிநானே. (49)**

கைதவங்களைச் சாத்திரம் சொல்லுமோ?கருணையால்,எனை ஆளும்
ஐயனே !குருவே! எவராகிலும் அனுபவித்தால் அன்றி,
செய்த கர்மங்கள் விடாது என்ற வசனமும்,சென்ம சஞ்சிதம் வேவ,
துய்ய ஞானத் தீச் சுடும் என்ற வசனமும், துணிவது எப்படி? நானே.

அசத்தியமான வார்த்தைகளைச் சாத்திரங்கள் சொல்லுமோ? கருணாயல் எனையாளும் ஐயனே! குருவே! யாராக இருந்தபோதிலும் செய்த கர்ம பலன்கள் அனுபவித்தால் ஒழிய நாசமாகாது என்ற வசனமும், எண்ணிறந்த பிறவிகளுக்குக் காரணமான சஞ்சித வினை வெந்து சாம்பல் ஆகும்படி சுத்தமான ஞானத்தீ சுடும் என்ற வசனமும் ஆகிய இவ்விரண்டில் இது தான் உண்மை, இது உண்மை அல்ல என்று ஒன்றை எவ்வாறு யான் நிச்சயிப்பது?

**சீவ பேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை**
**ஆவ வாமவ ரவரதி காரங்க ளிளறிந்துபக் குவநோக்கிப்**
**பூவ லர்ந்துபின் பலங்கள்காட் டுவனபோற் பூருவஞ் சித்தாந்தம்**
**காவல் வேதங்க ளிரண்டையும் வசனிக்குங் காண்டமூ வகையாலே. (50)**

சீவ பேதங்கள் அளவி(ல்)லை; மைந்தனே! செய்கையும் அளவில்லை;
ஆவவாம் அவரவர் அதிகாரங்கள் அறிந்து, பக்குவ(ம்) நோக்கி,
பூ அலர்ந்து,பின் பலங்கள் காட்டுவன போல் பூருவம்,சித்தாந்தம்,
காவல் வேதங்கள் இரண்டையும் வசனிக்கும்; காண்ட(ம்) மூவகையாலே.

மைந்தனே! சீவத்துவ உபாதிகளான அவித்தை, அந்தக்கரணங்கள் அளவிலாததால் சீவ பேதங்களும் அளவில்லை. அந்தக்கரணத்திலுள்ள வாசனைகளும் அளவிலாததால் அவரவர் செய்கையும் அளவில்லை. அந்தந்த சீவர்களின் அதிகாரங்களை அறிந்து, பக்குவம் நோக்கி, முதலில் பூக்களைப் பூக்கச்செய்து பின் பலங்கள் தருகின்ற மரங்களைப் போலக் கருணையால் யாவரையும் காக்கும் வேதங்கள் கர்மம், உபாசனை, ஞானம் என மூவகைக் காண்டங்களாலே பூர்வ பட்சம், சித்தாந்தம் என்னும் இரண்டினையும் எடுத்துரைக்கின்றன.

**ஆன பாவிக ளடைவன நரகங்க ளவசிய மானாலும்**
**தான மந்திர விரதவோ மங்களாற் றவிருமென் பதுபொய்யோ**
**ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை யெத்தனை யானாலும்**
**ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி நம்பினால் வீடுண்டே. (51)**

ஆன பாவிகள் அடைவன நரகங்கள் அவசியம்; ஆனாலும்
தான,மந்திர, விரத, ஓமங்களால் தவிரும்;என்பது பொய்யோ?
ஈனமாம், பல சன்ம சஞ்சித வினை எத்தனையானாலும்,
ஞானமாம் கனல் சுடும்,என்ற மறை மொழி நம்பினால்,வீடு (உ)ண்டே

பாவிகள் நரகம் அடைவது அவசியம் என்ற போதிலும் தானம், மந்திரம், விரதம், யக்ஞம் என்னும் பிராயச்சித்தங்களால் அவை வராது தவிர்க்கப்படும் என்று சாத்திரங்கள் கூறுவது பொய்யா? அது போல எண்ணிறந்த பிறவிகளின் சஞ்சித கர்ம வினை எவ்வளவு இருந்தாலும் சீவ பிரம ஐக்கிய ஞானமாகிய அக்கினி அவைகளைச் சுடும் என்ற வேத வாக்கியத்தை நம்பினால் முத்தி உண்டாவது திண்ணம்.

**என்ம னந்திருக் கோயிலாத் தினங்குடி யிருந்தருள் குருமூர்த்தி**
**சென்ம சஞ்சித வினைகள்வே ரறுத்திடுந் தேவரீர் மெய்ஞ்ஞானம்**
**தன்ம யந்தரு மகிமையை விபுதராஞ் சமர்த்தரு மறியாமல்**
**கன்ம மாங்குழி யினில்விழுந் தழிகின்ற காரண முரையீரே. (52)**

என் மனம் திருக்கோயிலா(ய்), தினம் குடியிருந்து,அருள் குருமூர்த்தி
சென்ம சஞ்சித வினைகள் வேர்,அறுத்திடும் தேவரீர் மெய்ஞ்ஞானம்,
தன்மயம் தரு(ம்) மகிமையை, விபுதராம் சமர்த்தரும் அறியாமல்,
கன்மமாம் குழியினில் விழுந்து, அழிகின்ற காரணம் உரையீரே.

எனது மனதையே திருக்கோயிலாகக் கொண்டு நாளும் குடியிருந்து அருளும் குருமூர்த்தி! தேவரீர் அருளும் மெய்ஞ்ஞானம் பிறவிகளுக்குக் காரணமான சஞ்சித வினைகளின் வேராகிய அவித்தையை அறுத்து, பிரமத்தில் அபேதமாய் இருக்கும் மோட்ச சாம்ராச்சியத்தை தரும் மகிமையை, விரிந்த அறிவுடைய பண்டிதரும் உணராது கர்மமாகிய படுகுழியில் விழுந்து அழிகின்ற காரணத்தை உரைப்பீர்.

**அழிவி லாததற் பதந்தனை மைந்தனே யகமுகத் தவர்சேர்வர்**
**வழிந டப்பவர் பராமுக மாயினான் மலர்ந்தகண் ணிருந்தாலும்**
**குழியில் வீழ்வர்கா ணப்படி வெளிமுகங் கொண்டுகா மிகளானோர்**
**பழித ரும்பிற விக்கட லழுந்துவர் பரகதி யடையாரே. (53)**

அழிவிலாத தத்பதம் தனை, மைந்தனே! அகமுகத்தவர் சேர்வர்;
வழி நடப்பவர் பராமுகம் ஆயினால், மலர்ந்த கண் இருந்தாலும்,
குழியில் வீழ்வர் காண்; அப்படி வெளிமுகம் கொண்டு,காமிகள் ஆனோர்,
பழி தரும் பிறவிக் கடல் அழுந்துவர்; பரகதி அடையாரே.

மைந்தனே! நித்தியமான நிகரிலாத ஆனந்தருபமான பிரமத்தை அகநாட்டம் உடையவர் அடைவர். நடந்து செல்வோர் கவனம் பாதையில் இல்லையெனில் கண்கள் திறந்திருப்பினும் குழியில் வீழ்வார். அப்படி வெளிநாட்டம் கொண்டு, சுவர்க்கம் முதலிய போகங்களில் விருப்பம் உடையவர் மிக்க அறிவுடையராய் இருப்பினும், பழிக்கத்தக்க பிறவிக் கடலில் அழுந்துவர். மோட்சம் அடையார்.

**சிறந்த நன்மையுந் தீமையு மீசனார் செய்விக்குஞ் செயலன்றோ**
**பிறந்த சீவர்க ளென்செய்வ ரவர்கண்மேற் பிழைசொலும் வழியேதோ**
**துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதிநூற் பொருண்மார்க்கம்**
**மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனே யதுகேளாய். (54)**

சிறந்த நன்மையும்- தீமையும், ஈசனார் செய்விக்கும் செயலன்றோ?
பிறந்த சீவர்கள் என்செய்வர்? அவர்கள்மேல் பிழைசொலும் வழி ஏதோ?
துறந்த தேசிக மூர்த்தியே!என்றிடில்,சுருதி,நூல் பொருள்,மார்க்கம்
மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்தி காண்; மைந்தனே!அது கேளாய்.

சிறந்த நல்வினையும் இழிந்த தீவினையும் சூத்திரதாரியைப் போல் சுதந்தரமான ஈசனார் செய்விக்கும் செயல் அல்லவா! சூத்திரப்பாவை போன்று சுதந்தரம் இன்றி அவன் படைப்பினால் பிறந்த சீவர்கள் என்ன செய்வர்? அந்த சீவர்கள் பேரில் குற்றம் சொல்ல என்ன வழி இருக்கிறது? அனைத்தையும் துறந்த தேசிகமுர்த்தியே! என்று கேட்டால், வேத சாத்திரம் கூறும் அர்த்தக் கிரமத்தை ஆய்ந்து அறிய மறந்த முடர்கள் சொல்கின்ற மயக்க வார்த்தை, மைந்தா! அந்த அர்த்தக் கிரமத்தை நீ கேட்பாய்.

**திகழ்ந்த வீசனார் சிருட்டியுஞ் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே**
**சகந்த னிற்பொது வீசனார் சிருட்டிகள் சராசரப் பொருளெல்லாம்**
**அகந்தை யாமபி மானங்கள் கோபங்க ளாசைக ளிவையெல்லாம்**
**இகழ்ந்த சீவனார் சிருட்டிக ளாகுங்கா ணீசனார் செயலன்றே. (55)**

திகழ்ந்த ஈசனார் சிருட்டியும்,சீவனார் சிருட்டியும்,வெவ்வேறே;
சகம் தனில் பொது ஈசனார் சிருட்டிகள்,சராசரப் பொருளெல்லாம்;
அகந்தையாம்,அபிமானங்கள்,கோபங்கள்,ஆசைகள் இவை எல்லாம்,
இகழ்ந்த சீவனார் சிருட்டிகளாகும் காண்; ஈசனார் செயலன்றே.

விளங்குகின்ற ஈசனார் சிருட்டியும், சீவனார் சிருட்டியும் வெவ்வேறே. சகத்தில் அனைவர்க்கும் பொதுவானவை ஈசனார் சிருட்டிகள். அவை நடப்பன, நிற்பன ஆகிய பொருள் அனைத்தும் ஆகும். அகந்தை, அபிமானம், கோபம், ஆசை இவைகள் எல்லாம் உயர்ந்தவரால் இகழ்ந்த சீவனார் சிருட்டிகள் ஆகும். இவைகள் பொதுவாய் இல்லாமல் ஒவ்வொருவருக்கே சிறப்பாய் உள்ளதால் ஈசனார் சிருட்டி அல்ல.

**மூவ ராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசா தனமாகும்**
**சீவ னார்செயுஞ் சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும்**
**தாவ ராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சனனங்க ணசியாவாங்**
**கோப மாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிற விகள்போமே. (56)**

மூவராம் பரன் சிருட்டிகள்,உயிர்க்கு எல்(ல்)லாம்(ம்) முத்தி சாதனமாகும்;
சீவனார் செயும் சிருட்டிகள், தங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும்;
தாவராதிகள் நசித்திடில், ஒருவர்க்கும் சனனங்கள் நசியாவாம்;
கோபமாதிகள் நசித்திடில், பந்தமாம் கொடும் பிறவிகள் போமே.

மும்மூர்த்திகளின் சிருட்டிகள் உயிர்களுக்கு எல்லாம் மோட்சம் அடைவதற்குச் சாதனங்கள் ஆகும். சீவனின் சிருட்டிகள் பிறவித் தொடரை ஏற்படுத்தும் பந்தங்கள் ஆகும். ஈசன் சிருட்டியான தாவரம் முதலியவைகள் அழிந்தால் ஒருவருக்கும் பிறப்பு அழியாது. சீவ சிருட்டியான கோபம் முதலானவை நசித்தால் பந்தமாகிய கொடும்பிறவிகள் நாசமாகும்.

**ஈசர் காரியம் பிரளயத் தொழியவு மெவர்பவ மொழிந்தார்கள்**
**தேச காலதே காதிக ளிருக்கவுஞ் சீவகா ரியமோகம்**
**நாச மாக்கிய விவேகத்தி னுயிரொடு ஞானமுத் தர்களானார்**
**பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப் பசுபதி செயலன்றே. (57)**

ஈசர் காரியம், பிரளயத்து ஒழியவும், எவர் பவம் ஒழிந்தார்கள்?
தேச,கால,தேகாதிகள் இருக்கவும், சீவ காரிய மோகம்,
நாசம் ஆக்கிய விவேகத்தின், உயிரொடு ஞான முத்தர்களானார்;
பாச மோகங்கள், பசுக்களின் செயலன்றி,பசுபதி செயலன்றே.

ஈசனார் சிருட்டிகள் பிரளய காலத்தில் நாசமானபோதும் எவராவது பிறவியிலிருந்து விடுபட்டனரா? ஒருவரும் விடுபடவில்லை. ஈசனார் சிருட்டியான தேசம், காலம், தேகம் முதலானவை இருக்கின்ற பொழுதே, குரு மற்றும் சாத்திரங்கள் மூலமாக ஈசனார் சிருட்டித்த சாதனங்களின் துணையால் சீவ சிருட்டியாகிய மோகங்களை நாசம் செய்த விவேகத்தினால் சீவன் முத்தர்கள் ஆனார். ஆதலால் பாசமாகிய மோகங்கள் சீவர்கள் சிருட்டியே அன்றி ஈசனார் சிருட்டியல்ல.

**அச்சு வத்தமென் றொருமர மதிலிரண் டரும்பற வைகள்வாழும்**
**நச்சு மங்கொரு பறவையம் மரக்கனி நன்றுநன் றெனத்தின்னும்**
**மெச்சு மங்கொரு பறவைதின் னாதென வியங்கியப் பொருளாக**
**வைச்சு மாமறை சீவனை யீசனை வகுத்தவா றறிவாயே. (58)**

அச்சுவத்தம் என்று ஒரு மரம்; அதில் இரண்டு அரும் பறவைகள் வாழும்;
நச்சும் அங்கொரு பறவை,அம்மரக் கனி நன்று நன்று எனத் தின்னும்;
மெச்சும் அங்கொரு பறவை தின்னாது, என வியங்கிய பொருளாக
வைச்சு, மாமறை சீவனை,ஈசனை வகுத்தவாறு அறிவாயே.

அரசு என்று சொல்லப்பட்ட மரம் ஒன்று. அதில் இரண்டு அரிய பறவைகள் வசித்தன. போகங்களை விரும்புகின்ற ஒரு பறவை அம்மரத்திலுள்ள கனிகளை இது நல்லது இது நல்லது என்று புசிக்கின்றது. எல்லோராலும் மெச்சப்பட்ட அம்மரத்தில் இருந்த மற்றொரு பறவை அக்கனிகளைப் புசிக்காமல் இருந்தது என்று குறிப்புப் பொருளாக(வியங்கியார்த்தமாக) வைத்து மகத்துவம் உடைய முண்டக உபநிடதமானது சீவனையும் ஈசனையும் பகுத்துக் கூறிய வழியை நீ விசாரித்து அறிவாய். *(பழங்களைப் புசித்த பறவை போல் கருமங்களில் பலன் எதிர்பார்த்து செய்பவன் சீவன். பலனை எதிர்நோக்காமல் படைக்கின்றவன் ஈசன்)*

**இந்தச் சீவனால் வருமறு பகையெலா மிவன்செய லென்னாமல்**
**அந்தத் தேவனால் வருமென்ற மூடர்க ளதோகதி யடைவார்கள்**
**இந்தச் சீவனால் வருமறு பகையெலா மிவன்செய லல்லாமல்**
**அந்தத் தேவனா லன்றெனும் விவேகிக ளமலவீ டடைவாரே. (59)**

இந்தச் சீவனால் வரும் அறுபகை எ(ல்)லாம்,இவன் செயல் என்னாமல்,
அந்தத் தேவனால் வரும்;என்ற மூடர்கள் அதோகதி அடைவார்கள்;
இந்தச் சீவனால் வரும் அறு பகை எ(ல்)லாம் இவன்செயல் அல்லாமல்,
அந்தத் தேவனால் அன்று எனும் விவேகிகள் அமல வீடு அடைவாரே.

பிரத்தியட்சமான இந்த சீவனால் உண்டாகின்ற காமம் முதலான ஆறு பகைகள் சீவனது சிருட்டி என்று கருதாமல் அந்த ஈசனது சிருட்டியால் உண்டாகின்றன என்று சொல்லும் மூடர்கள் நரகத்தை அடைவார்கள். இந்தச் சீவனால் உண்டாகும் ஆறு பகைகள் சீவனது சிருட்டியே அன்றி அந்த ஈசனது சிருட்டியால் உண்டானது அல்ல என்கிற விவேகிகள் நிர்மலமான மோட்சத்தை அடைவார்கள்.

**நலமெய் யையனே யெல்லவர்க் குந்தெய்வ நாயகன் பொதுவானால்**
**சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல் செய்வதே னென்றாயேல்**
**குலவு மக்களைத் தந்தைபோற் சிட்டரைக் குளிர்ந்துதுட் டரைக்காய்வன்**
**கலைக ணல்வழி வரச்செயுந் தண்டமுங் கருணையென் றறிவாயே. (60)**

நலம்(ம்) மெய் ஐயனே! எல்லவர்க்கும் தெய்வ நாயகன் பொதுவானால்,
சிலரை வாழ்வித்தல், சிலரொடு கோபித்தல் செய்வது ஏன்?என்றாயேல்,
குலவு மக்களை,தந்தை போல் சிட்டரைக் குளிர்ந்து,துட்டரைக் காய்வன்;
கலைகள் நல்வழி வரச்செயும் தண்டமும்,கருணை என்று அறிவாயே.

நலம் நிறைந்த திருமேனி ஐயனே! எல்லாருக்கும் தெய்வநாயகனாகிய ஈசன் பொது என்ற பொழுது, சிலரை வாழவைத்தலும், சிலரோடு கோபித்தலும் செய்வது எதனால் என்று கேட்டால், குலவி மகிழும் தம் மைந்தரைத் தந்தை போல, சாத்திர விதிப்படி நடக்கும் நல்லவரைக் காப்பாற்றி, துஷ்டர்களுக்குத் தரித்திரம், நோய் முதலிய துன்பங்களால் தண்டனை செய்கின்றான். சாத்திரங்களின் விதிப்படி அந்த மார்க்கத்தில் கொண்டுவருதற்காக செய்கின்ற தண்டனையைக் கருணை என்று அறிவாய்.

**மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரங்கனல் புனன்மூன்றும்**
**தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளும்**
**அனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வ னகன்றவர்க் கருள்செய்யான்**
**இனைய குற்றங்க ளெவர்குற்ற மாகுமென் றெண்ணிநீ அறிவாயே.**

**(61)**

மனை விலங்கு அறு மைந்தனே! கற்பக மரம்,கனல்,புனல் மூன்றும்,
தனை அடைந்தவர் வறுமையும்,சீதமும், தாகமும் தவிர்த்து ஆளும்;
அனைய ஈசனும் அடைந்தவர்க்கு,அருள் செய்வன்; அகன்றவர்க்கு அருள் செய்யான்;
இனைய குற்றங்கள் எவர் குற்றமாகும்?என்று எண்ணி நீ அறிவாயே.

குடும்ப விலங்கு நீங்கப்பெற்ற மைந்தா! கற்பக மரம், கனல்(நெருப்பு), புனல்(தண்ணீர்) மூன்றும் பாரபட்சம் இல்லாதிருந்து தன்னை அடைந்தவரின் (முறையே) வறுமையும், குளிரும், தாகமும் தீர்த்து காக்கும். அவை போல ஒருவரிடத்து விருப்பும், ஒருவரிடத்து வெறுப்பும் இல்லாத ஈசன் அடைந்தவர்க்கு அருள்செய்வான். விலகிப்போனவர்க்கு அனுக்கிரகம் செய்யமாட்டான். இத்தகைய குற்றம் யாருடைய குற்றம் என்று நீ விசாரித்து அறிவாய்.

**ஒன்று கேண்மக னேபுமான் முயற்சியா லுறைத்துமா நுடர்க்கீசன்**
**நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே**
**சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்தமா யையைத்தள்ளி**
**நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்போ நிச்சய மிதுதானே. (62)**

ஒன்று கேள் மகனே!புமான் முயற்சியால் உறைத்து,மானுடர்க்கு ஈசன்
நன்று செய்யவே,காட்டிய நூல்வழி நடந்து,நல்லவர் பின்னே சென்று,
துட்டவாதனை விட்டு,விவேகராய்,செனித்த மாயையைத் தள்ளி,
நின்று ஞானத்தை அடைந்தவர் பவங்கள் போ(ம்); நிச்சயம் இதுதானே.

மகனே! கேள். புருஷப் பிரயத்தனத்தால் அழுந்தி, மானுடர்களுக்கு ஈசன் பிரமானந்தம் கொடுத்தற் பொருட்டு அருளிச் செய்த சாத்திரத்தின் வழி நடந்து நல்லவர் பின்னால் சென்று, கெட்ட வாசனைகளை விட்டு, விவேகத்தை உடையவர்களாய், விவேகம் இல்லாததால் உண்டான மாயையைத் தள்ளி, தன் நிஜவடிவமாய் சீவ பிரம ஐக்கிய ஞானத்தை அடையப் பெற்றவர்களின் பிறவிகள் நீங்கும். இது நிச்சயம்.

**இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி லிடைவிடா விசாரத்தால்**
**வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின் மனாதியாஞ் சரீரத்தில்**
**இந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டுமொன் றாக்கூடும்**
**பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர்விசா ரமதாகும். (63)**

இந்த ஞானந் தான் வருவது எப்படியெனில்? இடைவிடா விசாரத்தால்
வந்து அடைந்திடும்; விசாரந்தான் ஏதெனில்?மனாதியாம் சரீரத்தில்,
இந்த நான் எவன்?சித்து எது?சடம் எது?இரண்டும் ஒன்றாக் கூடும்
பந்தம் ஏது? வீடு ஏது?என உசாவுதல் பகர் விசாரம் அது ஆகும்.

முன்சொன்ன இந்த சீவ பிரம ஐக்கிய ஞானமானது வருவது எப்படி எனில், இடைவிடாத விசாரத்தால் வந்து அடைந்திடும். விசாரந்தான் ஏது எனில், இந்த மனம் முதலிய தேகத்தில் நான் என்பது எது? சித்தாய் இருப்பது எது? ஜடமாய் இருப்பது எது? சித்து ஜடம் இரண்டும் ஒன்றாகக் கூடுவதற்கு ஏதுவாயுள்ள பந்தம் என்பது எது? மோட்சம் என்பது எது? என்று நிரந்தரமாக ஆராய்தலே சாத்திரங்களால் கூறப்படுகின்ற விசாரம் ஆகும்.

**போன சன்மங்க டமிலநுட் டித்தநற் புண்ணிய பரிபாகம்**
**ஞான மாக்குமே விசாரமே னென்றிடி னாமுரைத் திடக்கேளாய்**
**ஆன புண்ணிய மீசுரார்ப் பணஞ்செயி னசுசிபோஞ் சுசியாகும்**
**மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவுமென் றறிவாயே. (64)**

போன சன்மங்கள் தமில்,அனுட்டித்த நற்புண்ணிய பரிபாகம்,
ஞானமாக்குமே! விசாரம் ஏன்?என்றிடில், நாம் உரைத்திடக் கேளாய்;
ஆன புண்ணியம், ஈசுரார்ப்பணம் செயின்,அசுசி போம்,சுசியாகும்;
மானதம் பி(ன்)னை விசாரித்து, ஞானத்தை மருவும் என்று அறிவாயே.

கடந்து போன சென்மங்களில் அனுட்டித்து வந்த நல்ல புண்ணிய கருமமானது ஞானத்தைக் கொடுக்குமே! ஆன்ம அனான்ம (ஆன்மா அல்லாதவை) விசாரம் எதற்கு என்று கேட்கில், அதற்கு நாம் கூறுவதைக் கேட்பாய். உசிதமான நற்கர்மங்களைப் பலன் எதிர்பாராமல் ஈசனுக்கு அர்ப்பணமாக செய்தால் அந்தக்கரணத்தில் உள்ள அசுத்தம் நீங்கி சுத்தமாகும். சுத்தமான அந்த மனமானது பின்னர் ஆத்ம அனாத்ம விசாரம் செய்து தத்துவ ஞானத்தை அடையும் என்று அறிவாய்.

**பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமு மணிமாதி**
**சித்தி யுந்தவ நிட்டையும் யோகமுந் தியானமுஞ் சாரூப**
**முத்தி யுந்தரும் விசித்திர கருமங்கண் மோகமாத் திரந்தள்ளும்**
**புத்தி தந்திட லருமையோ விசாரமேன் புண்ணிய குருமூர்த்தி. (65)**

பத்தியும், வயிராக்கியமும், பரலோகமும், அணிமாதி சித்தியும்,
தவ நிட்டையும், யோகமும், தியானமும், சாரூப முத்தியும்
தரும் விசித்திர கருமங்கள்; மோக(ம்) மாத்திரம் தள்ளும்,புத்தி தந்திடல்
அருமையோ ?விசாரம் ஏன்? புண்ணிய குருமூர்த்தி.

ஈசனிடத்து பக்தியும், வைராக்கியமும், சுவர்க்கலோகமும், அணிமா முதலான சித்தியும், தவ நிட்டையும், அட்டாங்க யோகமும், தியானமும், சாரூப முத்தியும் ஆகிய இவற்றைத் தரும் விசித்திரமான கருமங்களுக்கு, தன்னைப் பிரமம் என்று உணராத அறியாமையாகிய மோகத்தை மாத்திரம் நிவர்த்தி செய்யும் ஞானத்தைக் கொடுப்பது கஷ்டம் ஆகுமா? விசாரம் எதற்கு? புண்ணிய குருமூர்த்தி!

**வேட மாறிய பேர்களை யறியவே வேண்டினான் மகனேகேள்**
**கூட மாமவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகளாய்ந் தறியாமல்**
**ஓடி யுங்குதித் துந்தலை கீழ்நின்று முயர்ந்தகம் பத்தேறி**
**ஆடி யும்பல கருமங்கள் செய்யினு மவருண்மை தெரியாதே. (66)**

வேடம் மாறிய பேர்களை அறியவே வேண்டினால், மகனே,கேள்!
கூடமாம் அவர் சுபாவங்கள்,சீலங்கள்,குறிகள், ஆய்ந்து அறியாமல்,
ஓடியும், குதித்தும், தலை கீழ் நின்றும், உயர்ந்த கம்பத்து ஏறி ஆடியும்,
பல கருமங்கள் செய்யினும், அவர் உண்மை தெரியாதே.

தம் வேடத்தை விட்டு மாறுவேடம் கொண்டு இருப்பவர்களை அறிய வேண்டின், மகனே! கேள். மறைந்திருக்கும் அவருடைய சுபாவங்கள், ஒழுக்கங்கள், அடையாளங்கள் ஆகியவற்றை ஆய்ந்து அறியாமல், ஓடியும், குதித்தும், தலைகீழ் நின்றும், உயர்ந்த கம்பத்தில் ஏறி ஆடியும், பல கருமங்கள் செய்யினும் வேடம் மாறியவரின் உண்மை வடிவத்தை அறிய முடியாது.

**இன்ன வாறந்தப் பிரமத்தை யறிவிக்கு மிலக்கணத் தால்வேதம்**
**சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதிநூல் படித்தாலும்**
**அன்ன தானங்க டவங்கண்மந் திரங்களா சாரங்கள் யாகங்கள்**
**என்ன செய்யினுந் தன்னைத்தா னறிகின்ற திவைகளால் வாராதே. (67)**

இன்னவாறு, அந்தப் பிரமத்தை அறிவிக்கும் இலக்கணத்தால், வேதம்
சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றி, சுருதி நூல் படித்தாலும்,
அன்ன தானங்கள், தவங்கள்,மந்திரங்கள், ஆசாரங்கள்,யாகங்கள்
என்ன செய்யினும்,தன்னைத் தான் அறிகின்றது இவைகளால் வாராதே.

இவ்வாறு அந்தப் பிரமத்தை சொரூபம், தடஸ்தம், அதத்வியாவிருத்தி என்னும் மூவகை இலக்கணங்களால் அறிவிக்கும் வேதம் சொன்ன சீவ பிரம இக்கிய ஞானமும் (63-ம் பாடலில் சொன்னபடி) விசாரத்தால் வருமே அன்றி, வேத சாத்திரங்களைக் கற்றல், அன்னதான முதலிய தானங்கள், பாவத்தைப் போக்குவது முதலான தவங்கள், மந்திர செபங்கள், வருணாச்சிரம ஆசாரங்கள், அவரவர் வருணத்திற்குரிய யாகங்கள் ஆகிய இவைகளில் என்ன செய்தாலும் தன்னைத்தான் அறிவது இவைகளால் வராது.

**துளங்கு தர்ப்பண மழுக்கறக் கைக்கொண்டு துலக்கினாற் போமன்றி**
**விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கினார் விமல தேசிகமூர்த்தி**
**களங்க மாகுமஞ் ஞானமு மப்படிக் கருமத்தாற் கழுவாமல்**
**உளங்கு றித்தஞா னத்தினா லெப்படி யொழியுமீ தருள் வீரே.** (68)

துளங்கு தர்ப்பணம் அழுக்கு அற,கைக்கொண்டு துலக்கினால் போம்;
அன்றி,விளங்கு புத்தியால் உலகில் யார் துலக்கினார்?விமல தேசிக
மூர்த்தி;களங்கமாகும் அஞ்ஞானமும்,அப்படிக் கருமத்தால் கழுவாமல்,
உளம் குறித்த ஞானத்தினால் எப்படி ஒழியும்? ஈது அருளுவீரே.

ஒளிர்கின்ற கண்ணாடியில் படிந்த அழுக்கினைக் கையினால் துடைக்கின்ற கர்மத்தைக் கொண்டு துடைப்பார்களே அன்றி, விளங்குகின்ற ஞான புத்தியினால் உலகில் எவராவது துடைத்துள்ளனரா?(ஒருவரும் இலர்) அவித்தியா மலம் இறந்த குருவே! அப்படி களங்கமான அஞ்ஞானமும் நற்கருமம் செய்து நீக்கப்படாமல், அந்தக்கரணத்தால் மித்தை(பொய்)யென நிச்சயமாக உணர்கின்ற ஞானத்தால் எவ்வாறு நீங்கும்? இதனை உரைத்தருள்வீர். *(செயல் ஏதும் செய்யாமல் பொய் என்று அறிவதால் அஞ்ஞானம் போய்விடுமா?)*

**தர்ப்ப ணத்தினிற் களிம்புவாஸ் தவமலஞ் சகசமா தலின்மைந்தா**
**கற்ப ளிங்கினிற் கருநிறஞ் சகசமாக் கறுத்த தன்றாரோபம்**
**தர்ப்ப ணத்தினி லழுக்கற வேண்டினாற் சாதனத் தொழில்வேண்டும்**
**கற்ப ளிங்கிலா ரோபமே கறுப்பென்று கண்டிட மனம்போதும்.** (69)

தர்ப்பணத்தினில்,களிம்பு வாஸ்தவ மலம் சகசம்;ஆதலின் மைந்தா,
கற்பளிங்கினில் கருநிறம், சகசமாக் கறுத்தது அன்று, ஆரோபம்;
தர்ப்பணத்தினில் அழுக்கற வேண்டினால், சாதனத் தொழில் வேண்டும்;
கற்பளிங்கில் ஆரோபமே கறுப்பென்று கண்டிட, மனம் போதும்.

கண்ணாடியில் உள்ள களிம்பானது(அழுக்கு) வாஸ்தவமும் (உண்மையானது) சகஜமும் (கூடவே உண்டாகும் இயல்பு) ஆகும். மகனே! பளிங்குகல்லில் காணப்படும் கருமை நிறம் சகஜமாகக் கல்லின் கூடவே உண்டாகிக் கருமையானது அன்று, அது பொய்த்தோற்றமே. (ஆரோபம்). ஆதலினால், கண்ணாடியில் உள்ள அழுக்கை அகற்ற வேண்டுமானால் துணியாகிய பொருள் ஒன்றின் துணைகொண்டு துடைத்திடும் கர்மம் செய்ய வேண்டும். படிக(பளிங்கு)க் கல்லில் கருநிறம் பொய்யே(ஆரோபமே) என்று காண மனமே போதும். *(பளிங்கு கல்லின் உண்மையான சுபாவம் கருமை நிறம் இல்லை. அது எதிரே உள்ள கருமை நிறப் பொருளைப் பிரதிபலித்த காரணத்தினால் வந்தது என்று அறிவதற்கு செயல் தேவையில்லை, புரிந்து கொள்வதே போதுமானது)*

**இங்கு மப்படிச் சச்சிதா நந்தத்தி லிடர்சடம் பொய்மூன்றும்**
**தங்கு மாயையின் கற்பித மன்றியே சகசவாஸ் தவமன்றே**
**பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா துறவாக்கும்**
**துங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே. (70)**

இங்கும் அப்படிச் சச்சிதாநந்தத்தில் இடர்,சடம்,பொய் மூன்றும்;
தங்கு மாயையின் கற்பிதம் அன்றியே, சகச வாஸ்தவ மன்றே;
பங்கமாகும் அஞ்ஞானத்தை,கருமங்கள் பகை செயாது;உறவாக்கும்;
துங்க ஞானமே,கரும அஞ்ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே.

இங்கும் அப்படி சத் சித் ஆனந்த வடிவ ஆத்மாவில் அசத்து, சட, துக்கங்கள் மூன்றும் கயிற்றில் பாம்பின் தோற்றம் போன்று கற்பிதம் அன்றி சகஜமாயும் வாஸ்தவமாயும் இருப்பது கிடையாது. அசத்து, ஜட, துக்க வடிவாயுள்ள அஞ்ஞானத்தைப் புண்ணிய கருமங்கள் பகைத்து நாசம் செய்யாமல் உறவாக்கிக் கொள்ளும். உயர்வான சீவ பிரம இக்கிய ஞானமாகிய தத்துவஞானமே கரும வடிவாகிய அஞ்ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாகும்.

**மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடநூ றழுதாலும்**
**நினைத்து ணர்ந்தபின் கிட்டுமப் படியிந்த நின்மல வான்மாவும்**
**அனர்த்த மானதன் மறதியைக் கெடுத்துத்தன் னறிவினாற் காணாமல்**
**கனத்த கர்மங்க ளூறுகஞ் செய்யினுங் காணுமோ காணாதே. (71)**

மனைக்குள் வைத்த பண்டங்களை மறந்தவன்,வருட(ம்) நூறு அழுதாலும்,
நினைத்து உணர்ந்த பின்,கிட்டும்;அப்படி இந்த நின்மல ஆன்மாவும்,
அனர்த்தமான தன் மறதியைக் கெடுத்து,தன் அறிவினால் காணாமல் ,
கனத்த கர்மங்கள் நூறு (யு)கம் செய்யினும் காணுமோ ?காணாதே.

வீட்டிற்குள் வைத்த பண்டங்களை வைத்த இடம் தெரியாமல் மறந்தவன் நூறு ஆண்டுகள் அழுதாலும் கண்டெடுக்க முடியாமல் வைத்த இடத்தை யோசித்து நினைவுக்குக் கொண்டு வந்த பின் அப்பொருளை அடைவன். அப்படி இந்த நிர்மலமான ஆன்மாவும் துன்பத்திற்குக் காரணமான தனது மறதியாகிய அறியாமையை விசாரத்தால் கெடுத்து, தன் ஞானத்தால் தனது யதார்த்த நிலையை அறியாமல், பாரமாகிய கருமங்கள் நூறு யுகங்கள் செய்தாலும் அவைகளால் காண முடியுமோ? (முடியாது).

நன்மை யாங்குரு வேசுகந் தருவது ஞானமே யெனும்வேதம்
தன்ம பாவமிச் சிரங்களாற் றேவர்க டருவிலங் குகண்மாந்தர்
சென்ம மாகுவ சாதியா சாரமே செய்தவஞ் சுகமென்று
கன்ம காண்டத்தில் விதித்ததென் விதித்துள காரண முரையீரே. (72)

நன்மையாம் குருவே! சுகம் தருவது ஞானமே எனும் வேதம்;
தன்ம, பாவ,மிச்சிரங்களால் தேவர்கள் ,தரு,விலங்குகள்,மாந்தர்
சென்மமாகுவ; சாதி,ஆசாரமே செய் தவம் சுகம் என்று,கன்ம
காண்டத்தில் விதித்தது என்? விதித்து(ள்)ள காரணம் உரையீரே.

குருவே! நிகரிலாத ஆனந்தமான சுகத்தைத் தருவது ஞானமே என்று சொல்லும் வேதமானது, புண்ணிய கருமம், பாவ கருமம், மிசிரம் என்னும் இரண்டும் கலந்த கருமங்களால் முறையே தேவ சென்மமும், விலங்கு முதல் தாவர வரையிலான சென்மங்களும், மானுட சென்மமும் உண்டாகும் என்றும், அவனவன் சாதியின் ஒழுக்கமே அவனவனுக்குச் செய்யத் தக்க தவமாம் என்றும், இதனால் சுகம் உண்டாம் என்றும் கரும காண்டத்தில் சொல்லியிருப்பதன் காரணத்தை உரைத்தருளுவீர் .

தினமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே தீம்பண்ட மெதிர்காட்டிக்
கன மருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற கருணைநற் றாய்போல
மனைய றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று மலர்ந்தவா சகஞ்சொல்லும்
நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகளந்த நிண்ணயந் தெரியாரே. (73)

தினமு(ம்) மண் நுகர் பிள்ளை நோய்க்கு இரங்கியே, தீம் பண்டம் எதிர் காட்டி,
கன மருந்துகள் ஒளித்து வைத்து அழைக்கின்ற, கருணை நற்றாய் போல,
மனை அறங்கள் செய்,மகங்கள் செய், நன்று என்று மலர்ந்த வாசகம் சொல்லும்;
நினைவு வேறு காண்;சுவர்க்க காமிகள் அந்த நிண்ணயம் தெரியாரே.

தினமும் மண்ணைத் தின்னும் தன் பிள்ளையின் நோய்க்கு இரங்கி, அப்பிள்ளைக்கு இனிப்பான பண்டங்களை எதிரே காட்டி கனமான மருந்துகளை இனிப்பின் உள்ளே மறைத்து வைத்து தின்ன அழைக்கின்ற கருணையுடைய தாயைப் போல, இல் வாழ்வுக்குரிய அறங்களைச் செய், யக்ஞங்களைச் செய் இவற்றால் சுகம் உண்டாகும் என்று சுருதி வாக்கியங்கள் கூறும். இவ்வாறு கூறும் வேதத்தின் உட்கருத்து வேறாகும். சுவர்க்க போகங்களில் இச்சை உடையோர் அந்த நிச்சயத்தை அறியமாட்டார்கள் .

**போக மாருயிர் கண்டதை யுண்பதும் புணர்வது மியல்பேகாண்**
**ஆக மங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வத்தனை தெரியாதோ**
**காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ,**
**வேக வாயுவே யசையென வொருவரும் விதித்திடல் வேண்டாவே (74)**

போகம் ஆருயிர் கண்டதை உண்பதும் ,புணர்வதும் இயல்பே காண்;
ஆகமங்களும் சுபாவத்தை விதிக்குமோ?அத்தனை தெரியாதோ;
காகமே கறுத்திடு; நெருப்பே சுடு; கசந்திடு வேம்பே, நீ
வேக வாயுவே அசை என; ஒருவரும் விதித்திடல் வேண்டாவே.

இம்புலன்களாலும் போகங்களை அனுபவிக்கின்ற உயிர்கள் கண்டதை உண்பதும், பெண்களைப் புணர்வதும் சுபாவமே அல்லாமல் வேறில்லை. உயிர்கட்கு உண்ணுதல், சுகம் அனுபவித்தல் இயல்பானது. வேதங்களும் இதற்கு முக்கியத்துவம் அளித்து சொல்லுமோ? வேதங்களுக்கு அவ்வளவு தெரியாதா? காகமே கருத்திடு, நெருப்பே சுடு, வேம்பே கசந்திடு, வேகமுடைய காற்றே அசைந்திடு என்று இயல்பான ஒன்றிற்கு ஒருவரும் விதிகள் நிர்ணயம் செய்ய வேண்டுமா என்ன? தேவை இல்லை அல்லவா!

**கள்ளு மூனுநீ விரும்பினான் மகங்கள்செய் காமத்தின் மனதானால்**
**கொள்ளும் பெண்டொடு கலவிசெய் யெனிலிவன் குறையெலாந் தொடானென்றே**
**தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சகலமுந் தவிர்வதே கருத்தாகும்**
**விள்ளு மிவ்விதி யென்னெனிற் பூருவ நியமமாம் விதியன்றே (75)**

கள்ளும் ஊனும்(ம்) நீ விரும்பினால், மகங்கள் செய்; காமத்தின் மனதானால்,
கொள்ளும் பெண்டொடு கலவி செய் எனில், இவன் குறையெலாம் தொடான்
என்றே தள்ளும், வேதத்தின் சம்மதம்; சகலமும் தவிர்வதே கருத்தாகும்;
விள்ளும் இவ்விதி என்ன? எனில், பூருவ நியமமாம் விதியன்றே.

மதுவும் இறைச்சியும் உண்பதற்கு ஆசை எழுந்தால் யாகங்கள் செய் அதில் ஆகுதி கொடுத்த பின்பு எஞ்சியதை உண்ணலாம் என்றும், பெண்ணின் புணர்ச்சியில் மனம் நாட்டம் ஏற்படும் பொழுது கொண்ட மனைவியோடு கலவி செய் என்றும் நிபந்தனைகளை விதித்தால், கிடைக்கின்ற போகங்களையும், பெண்களையும் முறையின்றி அனுபவிக்காமல் தவிர்த்து, ஒழுக்க நெறியில் வாழ்வார்கள் என்பதே வேதத்தின் உட்கருத்தாம். இவ்வாறு வாழ்ந்த பின்பு, (வானப்பிரஸ்தம் என்ற ஆசிரம நிலையில்) சகலத்தையும் விட்டொழிவதே அதற்கு அபிப்ராயம் ஆகும். அறங்கள் செய், யக்ஞம் செய் நல்லது என்று முன்சொல்லிய அவ்விதியானது என்ன விதியென்று சந்தேகம் கொண்டால் கண்டபடி வாழாமல் முறைப்படுத்துவதற்காகக் கர்ம காண்டத்தில் சொல்லப்பட்ட நியம விதியாகும்.

**மதுவி றைச்சிக ளுண்ணென்ற சுருதிபின் மணந்துபா ரெனல்பாராய்,**
**மிதுன விச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்பென்ற விதிபாராய்,**
**இதையும் விட்டொழி யதிநயிட் டிகவந்நிக் கிகழ்ச்சியற் றதும்பாராய்,**
**அதைய றிந்துகன் மங்களா சைகளொழிந் தாநந்த மடைவாயே. (76)**

மது,இறைச்சிகள் உண் என்ற சுருதி, பின் மணந்து பார் எனல் பாராய்;
மிதுன இச்சையும், புத்திர உற்பத்தியால் விரும்பு, என்ற விதி பாராய்;
இதையும் விட்டு ஒழி அதி நயிட்டிக வன்னிக்கு,இகழ்ச்சியற்றதும் பாராய்;
அதை அறிந்து, கன்மங்கள்,ஆசைகள் ஒழிந்து,ஆனந்தம் அடைவாயே.

மது, இறைச்சிகள் யக்ஞம் செய்து பின் உண்ணுவாய் என்ற வேதம் பின்பு முகர்ந்து பார் என்று சொல்லியுள்ள வசனத்தையும் கவனிப்பாய். மனைவியோடு புணரும் விருப்பமும் சந்ததிகளை உருவாக்குவதற்கு மாத்திரம் விரும்பு என்றவிதியையும் பார்ப்பாய். இவைகளையும் விட்டுவிடுவாய் என்று சொல்லியதையும், விட்டுவிட்ட சந்நியாசிகளும் மரணம் வரையில் பிரம்மச்சாரிகளாக இருப்பவர்களும் உலகில் பழிக்கப்படாமல் இருப்பதையும் காண்பாய். அவ்வாறு கூறிய வேதத்தின் உட்கருத்தினை அறிந்து, சகல கருமங்களையும், ஆசைகளையும் ஒழித்து தத்துவ ஞானத்தால் ஆத்மானந்தம் அடைவாய்.

**உலக மானவஞ் ஞானமுங் கருமமு முறவென்ற வழிகூடும்**
**பலவு மானவஞ் ஞானமு ஞானமும் பகையென்ப துளதானால்**
**நிலவி லேமறுப் போலவஞ் ஞானமு நிமலஞா னத்தோடே**
**குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குருமூர்த்தி. (77)**

உலகமான அஞ்ஞானமும், கருமமும் உறவு என்ற வழி கூடும்;
பலவுமான அஞ்ஞானமு(ம்),ஞானமும் பகை என்பது உளதானால்,
நிலவிலே மறுப் போல, அஞ்ஞானமு(ம்) நிமல ஞானத்தோடே,
குலவி நின்று, இந்தச் சிருட்டிகள் செய்யவும் கூடுமோ?குருமூர்த்தி!

பிரபஞ்ச வடிவமான அஞ்ஞானமும், கருமங்களும் ஒன்றுக்கு மற்றொன்று பகையாக இல்லாமல், இரண்டும் உறவாகும் என்பது சரியானதே. பலவிதமான அஞ்ஞானமும் ஞானமும் பகை என்பது உண்மையாயின், சந்திரனிடத்தில் களங்கம் இருப்பதுபோல அஞ்ஞானமானது அழுக்கு இல்லாத சுத்த ஞானத்துடன் ஒன்றாய் இருந்து சிருட்டிகளைச் செய்யவும் முடியுமோ? குருவே!

**சொரூப ஞானமும் விருத்திஞா னமுமென்று சோதிஞானமு மிரண்டாம்**
**சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த் தோன்றும்வே றிலைமைந்தா**
**சொரூப ஞானமஞ் ஞானசத் துருவன்று சுழுத்தியிற் கண்டாயே,**
**சொரூப ஞானத்தின் மருவுமஞ் ஞானத்தைச் சுடும்விருத் தியின் ஞானம்.(78)**

சொரூப ஞானமும் ,விருத்தி ஞானமும் என்று, சோதி ஞானமும் இரண்டாம்;
சொரூப ஞானமே,விருத்தியின் ஞானமாய்த் தோன்றும்; வேறு இ(ல்)லை; மைந்தா!
சொரூப ஞானம் அஞ்ஞான சத்துரு அன்று;சுழுத்தியில் கண்டாயே;
சொரூப ஞானத்தில் மருவும் அஞ்ஞானத்தைச் சுடும் விருத்தியின் ஞானம்.

மைந்தா! பிரகாச வடிவ ஞானமும் சொருப ஞானம் எனவும், விருத்தி ஞானம் எனவும் இருவகையாகும். சொருப ஞானமே விருத்தி ஞானமாக வெளிப்படுகின்றது. ஆதலால் இரண்டிற்கும் பேதமில்லை. இருப்பினும் சொருப ஞானம் அஞ்ஞானத்திற்கு விரோதி அன்று. சுழுத்தி அவத்தையில் பிரகாச சொருப ஆன்மாவில் அஞ்ஞானம் உடன் இருப்பதை அனுபவித்து அறிந்தாய் அல்லவா! சொருப ஞானத்துடன் இருக்கும் கற்பித அஞ்ஞானத்தை 'நான் பிரமம்' என்று அந்தக்கரணத்தில் எழுகின்ற விருத்தி ஞானமானது சுடும்.

**துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாததற் சொரூபஞா னந்தானே**
**விருத்தி ஞானமாய்ச் சுட்டதெப் படியெனில் வெய்யிலா லுலகெங்கும்**
**பரித்த சூரியன் சூரிய காந்தத்திற் பற்றியக் கினியாகி**
**எரித்த வாறுபோற் சமாதியில் விருத்தியா லெரிக்குமென் றறிவாயே. (79)**

துருத்தி மாயையைச் சுழுத்தியில் சுடாத, தற்சொரூப ஞானந்தானே,
விருத்தி ஞானமாய்ச் சுட்டது எப்படியெனில் ? வெயிலால் உலகெங்கும்
பரித்த சூரியன்,சூரிய காந்தத்தில் பற்றி அக்கினியாகி,எரித்தவாறு போல்,
சமாதியில்,விருத்தியால் எரிக்கும் என்று அறிவாயே.

துருத்தியைப் போன்ற அவித்தை(மாயை)யைச் சுழுத்தியில் சுடாமல் அதற்குச் சாதகமாகவே இருந்த சொருப ஞானம், விருத்தி ஞானமாய் வந்து சுட்டது எப்படி எனில், ஒளி கிரணத்தால் எப்பொருளையும் எரிக்காமல் உலகம் எங்கும் காக்கின்ற சூரியன், அதே ஒளிகிரணத்துடன் சூரிய காந்தக் கல்லின் வழியே அக்கினியாகி எரிப்பது போல, சமாதியில் நான் பிரமம் என்ற விருத்தி வடிவ ஞானமாய் நின்று அஞ்ஞானத்தை எரிக்கும் என்று அறிவாய். *(காரண வடிவ சூரிய கிரணத்தால் கெடாத பொருள், காரிய வடிவ சூரிய காந்தக் கல்லின் தீயால் கெடுவது போல, காரண வடிவ சொருப ஞானத்தால் கெடாத அஞ்ஞானமும் காரிய வடிவ விருத்தி ஞானத்தால் கெடுகின்றது)*

**அருளு மையனே திரிவித கரணத்தா லாகிய தொழிலெல்லாம்**
**கரும மல்லவோ விருத்திஞா னமுமந்தக் கரணகா ரியமன்றோ**
**உரிய கா்மமஞ் ஞானத்தைக் கெடுக்குமென் றோதினா லாகாதோ**
**பெரிய ஞானமென் றதற்கொரு பெயரிட்ட பெருமையை யுரையீரே. (80)**

அருளும் ஐயனே! திரிவித கரணத்தாலாகிய தொழில் எல்லாம்,
கருமம் அல்லவோ? விருத்தி ஞானமும்,அந்தக்கரண காரியமன்றோ;
உரிய கா்மம்,அஞ்ஞானத்தைக் கெடுக்கும் என்று ஓதினால் ஆகாதோ;
பெரிய ஞானம் என்று, அதற்கு ஒரு பெயரிட்ட பெருமையை உரையீரே.

அருளும் ஐயனே! மனம் வாக்கு தேகம் என்னும் மூவகை கரணங்களால் செய்யப்படும் செயல்கள் அனைத்தும் கருமம் அல்லவா! 'நான் பிரமம்' என்ற விருத்தி ஞானமும் அந்தக்கரணத்தின் காரியம் தானே! ஆகவே நான் பிரமம் என்ற அந்தக்கரண விருத்தி வடிவான மனதின் காரியமானது, கரணங்களால் செய்யப்படும் கருமங்களில் உள்ள அஞ்ஞானத்தைக் கெடுக்கும் என்று சொன்னால் போதாதோ? மகத்துவமான விருத்தி ஞானம் என்று அதற்கு ஒரு பெயரிட்டு சொல்லப்படுவதன் காரணத்தை உரைத்தருளும்.

**விருத்தி ஞானமந் தக்கர ணத்தொடு விருத்தியா கிலுமைந்தா**
**ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்ற துலகெங்குங் கண்டோமே**
**கருத்த னாகிய புருடதந் திரங்களாங் கருமங்க ளவைபோல**
**வருத்த ஞானமோ புருடதந் திரமன்று வஸ்துதந் திரமாமே. (81)**

விருத்தி ஞானம்,அந்தக்கரணத்தொடு விருத்தியாகிலு(ம்) மைந்தா;
ஒருத்தி மக்களே தங்களில் பகைக்கின்றது,உலகு எங்கும் கண்டோமே;
கருத்தனாகிய புருட தந்திரங்களாம் கருமங்கள் அவை போல,
வருத்த ஞானமோ புருட தந்திரமன்று; வஸ்து தந்திரமாமே.

மைந்தா! ஒரு தாயின் மைந்தர்களே தங்களுக்குள் பகை கொள்வதை உலகத்தில் எவ்விடத்திலும் காண்கின்றோம். அதுபோல், கரணங்களால் செய்யப்படும் கருமங்களும், மனதின் காரியமாகிய விருத்திஞானமும் இரண்டும் கா்மங்களே என்றபோதிலும் ஒன்றுக்கு ஒன்று பகைமை ஆகும். 'நான் பிரமம்' என்கிற விருத்தி ஞானம் அந்தக்கரணத்தில் தோன்றினாலும், கா்மங்கள் செய்பவனைச் சார்ந்தது(புருஷ தந்திரம்). விசார முயற்சியால் உண்டாகின்ற விவேக ஞானமோ புருஷ தந்திரம் அன்று, வஸ்துக்குத் தொடர்புடையதாய் அதனைக் காட்டும்.

**வகுத்த கர்மங்கள் செய்யவுந் தவிரவு மற்றொன்றாக் கவுங்கூடும்**
**மிகுத்த ஞானமப் படியன்று தியானமும் விவேகஞா னமும்வேறே**
**செகத்தி லொன்றையொன் றாவிவன் பாவிக்குந் தியானங்கற் பிதயோகம்**
**முகத்த மாக்கண்ட ஞானமே வாஸ்தவ மோகமாய் மயங்காதே.** **(82)**

வகுத்த கருமங்கள் செய்யவும்,தவிரவும்,மற்றொன்றாக்கவும் கூடும்;
மிகுத்த ஞானம் அப்படியன்று;தியானமும்,விவேக ஞானமும் வேறே;
செகத்தில் ஒன்றை ஒன்றா(ய்), இவன் பாவிக்கும் தியானம் கற்பிதயோகம்;
முகத்தமாக் கண்ட ஞானமே வாஸ்தவம்; மோகமாய் மயங்காதே.

சாத்திரங்களில் சொல்லப்படும் கருமங்களை விருப்பம் இருந்தால் செய்யலாம். விருப்பம் இல்லையெனின் செய்யாமல் இருக்கலாம். அல்லது வேறொரு முறையாகச் செய்யவும் முடியும். அதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன. மேலான ஞானமானது செய்யவும் தவிர்க்கவும் வேறு ஒன்றாக ஆக்கவும் முடியாது. மனதின் செயலான தியானமும் விசாரத்தினால் உண்டாகும் விவேக ஞானமும் ஆகிய இவ்விரண்டும் அந்தக்கரண காரியங்களே என்ற போதிலும் வேறுபட்டவைகளே. உலகத்தில் சாத்திரத்தின் மூலம் அறிந்த ஒன்றை வேறொன்றாக அதாவது இறைவடிவம் போன்று தியானத்தில் பாவனை செய்யப்படுவதால் தியானம் கற்பிதம் ஆகும். பிரத்தியட்சமாகக் கண்ட ஞானமே உண்மையானது. இவற்றில் அறியாமையால் உண்டாகும் மயக்கத்தை விடுவாய்.

**கண்ட றிந்தது ஞானங்கேட் டதுதனைக் கருதுபா வனையோகம்**
**கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோங் கண்டது மறவாதே**
**கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய் கருவியஞ் ஞானத்தைக்**
**கண்ட வக்கணங் கொல்வது ஞானமே கருமமன் றறிவாயே.** **(83)**

கண்டுஅறிந்தது ஞானம், கேட்டதுதனைக் கருது பாவனை யோகம்;
கண்டபேர் சொ(ல்)லக் கேட்டது மறந்து போம்; கண்டது மறவாதே;
கண்ட வஸ்து மெய்; தியான வஸ்துக்கள் பொய்; கருவி,அஞ்ஞானத்தைக்
கண்ட அக்கணம் கொல்வது ஞானமே, கருமம் அன்று, அறிவாயே.

ஒன்றை அனுபவித்து அறிந்தது ஞானத்தின் உருவம். கேட்ட வஸ்துவைக் கேட்ட வண்ணம் பாவிக்கின்ற மனதின் கருமமாகிய பாவனை தியானத்தின் உருவம். அனுபவித்த பெரியோர் உபதேசிக்கக் கேட்டுத் தியானிப்பது மறந்துவிடும். கண்டு அனுபவித்தது மறவாமல் நிற்கும். அனுபவித்த வஸ்து மெய்யானவை. தியானிக்கின்ற வஸ்துக்கள் பொய்யானவை. கோபித்து அஞ்ஞானத்தைத் தோன்றின அக்கணத்திலேயே நாசமாக்குவது விருத்தி ஞானமே. கருமத்தால் அஞ்ஞானத்தை அழிக்க இயலாது அறிவாய்.

**சருவ முத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்திய மன்றென்றால்**
**சருவ முத்தியுஞ் சத்திய மன்றென்று சங்கியா தேநீகேள்**
**உருவங் கேட்டவன் றியானிக்கும் பொழுதிலவ் வுருவம்வாஸ் தவமன்றே**
**உருவ மாகுமப் பொழுதுகண் ணாற்கண்ட வுருவம் வாஸ் தவமாமே. (84)**

சருவமுத்தியைத் தருகின்ற தியானமும்,சத்தியம் அன்று என்றால்,
சருவ முத்தியும் சத்தியமன்று என்று சங்கியாதே; நீ கேள்; உருவம்
கேட்டவன் தியானிக்கும் பொழுதில் அவ்வுருவம் வாஸ்தவமன்றே; உருவமாகும்
அப்பொழுது கண்ணால் கண்ட உருவம் வாஸ்தவமாமே.

துக்கத்திலிருந்து விடுதலையும் பரமானந்தம் அடைவதும் ஆகிய மோட்சத்தைத் தருகின்ற நிர்க்குணப் பிரமத் தியானமும் சத்தியமானது அல்ல என்று கூறினால், அந்த தியானத்தினால் பெறப்படும் முத்தியும் அசத்தியம் என்று சந்தேகம் கொள்ளாதே, நீ கேட்பாய். சகுண வடிவ இறைவனின் உருவங்களை சாத்திரங்களில் கேள்விப்பட்டவன் தியானிக்கும் வேளையில் அந்த உருவம் பாவனாமயம் ஆகலின் சத்தியம் அல்ல. அப்பாவனையானது திடமாய் அம்மூர்த்தி தானாகும் போது, கண்ணால் கண்ட அந்த உருவ(வடிவ)மானது வாஸ்தவம் (சத்தியம்) ஆகும். *(அதுபோல பிரமத்தைச் சாத்திரங்களும் பெரியோர்களும் உபதேசிக்கக் கேட்டவன் தியானிக்கும் போது பாவனை மாத்திரத்தில் பிரமமாய் இருத்தலின், அந்தப் பாவனா வடிவ பிரமம் சத்தியம் அன்று. தியான முதிர்ச்சியால் அடைகின்ற பிரம சொருபநிலை சத்தியமாம்).*

**சடம தாகிய தியானமெய் யாகிய சர்வமுத் தியைநல்கும்**
**திடம தானதெப் படியெனி லவரவர் தியானமே பிறப்பாகும்**
**உடல மாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்களா குவர்மைந்தா**
**தொடர்ப வங்கெடச் சொரூபமே தியானிக்கிற் சொரூபமா குவர்மெய்யே. (85)**

சடம் அதாகிய தியான(ம்), மெய்யாகிய சர்வ முத்தியை நல்கும்;
திடம் அதுதான் எப்படியெனில், அவரவர் தியானமே பிறப்பாகும்;
உடலம் ஆசையால் தியானிக்கில், தியானித்த உடல்கள் ஆகுவர்;மைந்தா! தொடர்
பவம் கெட, சொரூபமே தியானிக்கில் சொரூபமாகுவர் மெய்யே.

பொய்யாகிய நிர்க்குணத் தியானமானது பொய் என்கிற போதில், அந்தப் பொய்யானது உண்மையாகிய சர்வ முத்தியைத் தரும் திடம் உடையதாய் இருப்பது எப்படி எனில், மரணகாலத்தில் உண்டாகின்ற அவரவர் பாவனையின் படியே அவரவர்க்கு சென்மம் வரும் என்று சொல்லப்படும். மைந்தா! சகுணப் பிரமத்தை அடையும் விருப்பத்துடன் கூடி சகுணப் பிரமத்தைத் தியானித்தால், தியானித்த சகுணப் பிரம வடிவங்கள் ஆவர். அநாதி காலம் தொட்டு வருகின்ற சென்மம் மீண்டும் தொடராமல் நாசமாகும்படி நிர்க்குணப் பிரமத்தை அடையும் இச்சையோடு கூடி நிர்க்குணப் பிரம சொருபத்தைத் தியானித்தால் அந்த நிர்க்குணப் பிரமசொருபமே ஆவர். இது உண்மையே.

**பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவரென்றால்**
**நரச ரீரமாங் குரவனே விசாரமேன் ஞானமே னென்னாதே**
**பரம பாவனை பரோட்சமாம் பின்பந்தப் பரோட்சமே யபரோட்சம்**
**திரவி சாரமா ஞானமா முத்தியாந் தீர்வையீ தறிவாயே. (86)**

பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும், பிரமமாகுவர் என்றால்,
நர சரீரமாம் குரவனே! விசாரம் ஏன்?ஞானம் ஏன்?என்னாதே;
பரம பாவனை பரோட்சமாம்,பின்பு அந்தப் பரோட்சமே அபரோட்சம்;
திர விசாரமா(ம்) ஞானமா(ம்), முத்தியாம், தீர்வை ஈது அறிவாயே.

பிரம ரூபத்தைத் தியானித்தவர்களும் பிரம ரூபம் ஆவர் என்றால், அருளே திரண்டு மானுட வடிவமாக எழுந்தருளியே குருவே! விசாரம் எதற்கு? விசாரத்தால் உண்டாகும் ஞானம் எதற்கு? என்று சொல்லாதே. பிரம பாவனை தியானமானது முன்னே தியானிக்கும் போது பரோட்ச அதாவது கேள்விப்பட்ட காணாத ஞானமாகும். அந்தத் தியானம் முதிர்ச்சி அடைந்த பின்னர் அந்தப் பரோட்ச ஞானமே உபாசனையின் சாமர்த்தியத்தால் அபரோட்ச(பிரத்தியட்ச) ஞானமாம். திடமான விசாரமும் மூல அவித்தையை போக்கத்தக்க ஞானம் ஆகும். மோட்சமும் ஆகும். இது வேதம், சாத்திரங்களின் கருத்தாகும் என்று அறிவாயாக.

**வீட தாம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமுங்கூடிச்**
**சேட மாகினா லகண்டமா மநுபவ சித்தியெப் படியென்றால்**
**சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றாம்பொடி தானுமண் ணொடுமாயும்**
**ஊடி ஞானமு மறிவிலா மையைக்கெடுத் தொக்கவே கெடுந்தானே. (87)**

வீடதாம் பரிபூரண சொரூபத்தில்,விருத்தி ஞானமும் கூடிச் சேடம்
ஆகினால், அகண்டமாம் அனுபவ சித்தி எப்படியென்றால்?சாடி நீர் மண்ணைப்
பிரித்த தேற்றாம்பொடி தானு(ம்) மண்ணொடு மாயும்;
ஊடி ஞானமும் அறிவிலாமையைக் கெடுத்து,ஒக்கவே கெடும்தானே.

முத்தியாகிய பரிபூரண பிரம சொருபத்தில் காரியத்தோடு கூட அஞ்ஞானத்தை நீக்கிய அந்தக்கரணத்தின் விருத்தி வடிவான தத்துவ ஞானமும் கூடி எஞ்சி யிருந்தால், அகண்டமாகிய அனுபவ சித்தி எப்படி தோன்றும் என ஆட்சேபணை செய்தால், குட நீரில் உள்ள அழுக்கினை அகற்ற அதில் இடப்பட்ட தேற்றாம் பொடி, நீரைச் சுத்தமாக்கி விட்டு, தானும் அந்த அழுக்கோடு எப்படிக் கெடுமோ அப்படி தத்துவ ஞானமும் பகைத்து அஞ்ஞானத்தை நாசம்செய்து எஞ்சி இல்லாமல் அந்த அஞ்ஞானத்தோடு கூடவே தானும் நாசமாகும்.

**இந்த நிச்சய முத்த ரு ளனுபவ மிருப்பதெப் படியென்றால்**
**சிந்தை யற்றபூ மண்டல விராசனுஞ் சிசுவும்போற் சுகமாவர்**
**பந்த முத்திகண் மறந்துபோ முண்டென்று பலர்சொலி னகையாவர்**
**அந்த ரத்தையுண் டுமிழ்ந்ததோர் கொசுகெனு மவர்களை நகையாரோ. (88)**

இந்த நிச்சயம்.முத்தர் உள் அனுபவம் இருப்பது எப்படி என்றால்?
சிந்தையற்ற பூமண்டல இராசனும். சிசுவும் போல் சுகமாவர்; பந்த
முத்திகள் மறந்து போம்; உண்டென்று பலர் சொ(ல்)லின் நகையாவர்;
அந்தரத்தை உண்டு. (உ)மிழ்ந்தது ஓர் கொசுகு. எனும் அவர்களை நகையாரோ.

இந்த நிச்சயமான அகண்ட அனுபவமானது சீவன் முத்தரிடத்து காணப்படுவது எப்படி என்றால், (பகைவராலும், கள்வராலும், தன் நாட்டு மக்களாலும், துஷ்ட விலங்குகளாலும், தன் நாட்டிற்கு ஒரு தீங்கும் இல்லாமை காரணமாக எந்தவொரு) சிந்தனையும் இல்லாத சக்கரவர்த்தி போலவும், (யான் எனது என்னும் அபிமானம் இல்லாததால் எந்தவொரு சிந்தையும் இல்லாத) குழந்தையும் போலவும் சுகமாகவே இருப்பர். பந்தம் மற்றும் முத்தி இரண்டினைப் பற்றிய கருத்துக்களோ எண்ணங்களோ இன்றி எப்பொழுதும் பிரம சொருபமாகவே இருப்பர். பந்த முத்தி உண்டு என்று மற்றவர் சொல்லிடில், அற்பமான ஒரு கொசு ஆகாசத்தை உண்டு உமிழ்ந்தது என்று கூறும் பிராந்தி உடையவர்களைப் பார்த்து மற்றவர்கள் சிரிப்பதைப்போல, இது உமது பிராந்தி என்று நகைப்பர்.

**மலடி மைந்தனுந் தாணுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி**
**இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை யிரசதம் விலைபேசிக்**
**கலக மாய்முயற் கொம்பினாற் குத்தியே களைத்திரு வருமாண்டார்**
**அலகை யாயினா ரெனும்விவ காரத்தை யறிந்தவன் மயங்கானே. (89)**

மலடி மைந்தனும், தாணுவில் புருடனும், வான்மலர் முடிசூடி,
இலகு கந்தர்ப்ப நகரிலே, சுத்திகை இரசதம் விலை பேசி, கலகமாய்,
முயல் கொம்பினால் குத்தியே, களைத்து இருவரு(ம்) மாண்டார்;
அலகை ஆயினார்; எனும் விவகாரத்தை அறிந்தவன் மயங்கானே.

மலடி மகனும் கட்டையில் புருஷனும் ஆகாயத்தில் பூத்த பூக்களைத் தலையில் சூடிக் கொண்டு விளங்குகின்ற கந்தர்வ நகரத்தில் கிளிஞ்சலில் தோற்றமான வெள்ளியை விலைபேசி அதனால் கலகம் விளைந்து முயல் கொம்பினால் ஒருவரை ஒருவர் குத்திக் களைப்பு மேலிட்டு இருவரும் மாண்டனர் என்று கூறும் விவகாரத்தைத் தெளிந்தவன் மயங்கமாட்டான்.

**மாயை யென்பது பொய்யெனி லதுபெற்ற வகையெலாம் பொய்யாமே**
**தாயை யன்றிமக் களுக்கொரு பிறவியுஞ் சாதியும் வேறுண்டோ**
**சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாராமல்**
**தூய சத்துச்சித் தாநந்த பூரண சொரூபமா யிருப்பாயே. (90)**

மாயை என்பது பொய்யெனில் ,அது பெற்ற வகை எ(ல்)லாம்,பொய்யாமே;
தாயையன்றி, மக்களுக்கு ஒரு பிறவியும்,சாதியும்,வேறுண்டோ?
சேய சொர்க்கமு(ம்), நரகமு(ம்), நன்மையும், தீமையும் பாராமல்,
தூய சத்து, சித்து, ஆனந்த, பூரண சொரூபமாய் இருப்பாயே.

சகத்திற்கு முதல் காரணமான மாயை என்று சொல்லப்படுவது எது? அது சுருதி யுத்தி அனுபவங்களால் மித்தை (பொய்) என்று சொல்லப்படுமாயின், அம்மாயை கற்பித்த கூறுபாடு அனைத்தும் பொய்யாகும். தாயை அன்றி புத்திரர்களுக்கு ஒரு சென்மமும் சாதியும் வேறே உண்டாகுமோ? சேய்மையான சுவர்க்க நரகமும் நன்மையும் தீமையும் ஆகிய பிரபஞ்சம் முழுவதையும் சத்தியமாகக் காணாமல் மித்தை என்று கருதி சுத்த சச்சிதானந்த சொருபமாய் நிற்பாய்.

**பங்க யாசனன் முதற்பல தேவரும் பாருள பெரியோரும்**
**கங்கை யாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநாலும்**
**அங்க மாறுமந் திரங்களுந் தவங்களு மசத்திய மெனச்சொன்னால்**
**எங்க ணாயக னேயத னாற்குற்ற மில்லையோ மொழியீரே. (91)**

பங்கயாசனன் முதல் பல தேவரும்,பாருள பெரியோரும், கங்கை
ஆதியாம் தீர்த்தமும், தேசமும், காலமும், மறை நாலும்,அங்கம்
ஆறு(ம்),மந்திரங்களும், தவங்களும் அசத்தியம் எனச் சொன்னால்,
எங்கள் நாயகனே! அதனால் குற்றம் இல்லையோ?மொழியீரே.

அயன் முதலிய பல தேவர்களும், பூமியில்உள்ள பெரியோர்களும், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களும், புண்ணிய தேசங்களும், காலங்களும், வேதங்கள் நான்கும், வேத அங்கங்கள் ஆறும், மந்திரங்களும், தவங்களும் அசத்தியம் (பொய்) என்று சொன்னால், எங்கள் நாயகனே! அதனால் தோஷம் இல்லையா? உரைத்தருளுவீர்.

**சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வது பிழையானால்**
**அற்ப மாயையிற் றோன்றிய சகங்களை யசத்தெனல் பிழையாமே**
**சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்லலா மெனின்மைந்தா**
**அற்ப மாயையிற் றோன்றிய சகமெலா மசத்திய மெனலாமே. (92)**

சொற்பனந்தனில் கண்டதை,பொய் என்று சொல்வது பிழையானால்,
அற்ப மாயையில் தோன்றிய சகங்களை,அசத்து எனல் பிழையாமே;
சொற்பனந்தனில் கண்டதை, பொய் என்று சொல்லலாம் எனின்,மைந்தா!
அற்ப மாயையில் தோன்றிய சகம் எ(ல்)லாம் அசத்தியம் எனலாமே.

கனவில் கண்டவற்றை விழித்து எழுந்தவன் நனவில் மித்தை என்று சொல்வது தோஷம் ஆயின், அற்ப மாயையில் உண்டான பிரபஞ்சங்களை ஞானம் உடையவன் மித்தை என்று சொல்வதும் தோஷம் ஆகும். கனவில் கண்டவற்றை விழித்தவன் நனவில் பொய் என்று சொல்லலாம் எனில், மகனே! அற்ப மாயையில் தோன்றிய பிரபஞ்சம் அனைத்தும் தன்னில் விழித்த ஞானிக்கு முயற்சி இன்றியே மித்தையாகத் தோன்றுவதால் மித்தை என்று சொல்லலாம்.

**பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியரென்று புராணங்கூப் பிடுமானால்**
**மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்தசாத் திரமுண்டோ**
**பொய்ய தேதெனி னாமரூ பங்களாம் பூதமா கியமாயை**
**மெய்ய தேதெனிற் சச்சிதா நந்தமாய் வியாபிக்கு மான்மாவே. (93)**

பொய்யை மெய் என்ற மூடர் புண்ணியர் என்று,புராணம் கூப்பிடுமானால்,
மெய்யை மெய் என்ற ஞானிக்கு,குற்றங்கள் விதித்த சாத்திரம் உண்டோ?
பொய் அது ஏது? எனில், நாம ரூபங்களாம் பூதமாகிய மாயை;
மெய் அது ஏது? எனில், சச்சிதாநந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே.

மித்தை வடிவத் துவதைப் பிரபஞ்சத்தைச் சத்தியம் என்று கூறுகின்ற (சாங்கிய கணாத மதத்தினரைத்) தர்மவான்கள் என்று புராணம் கூறுமாயின், சத்திய வடிவ அத்வைதப் பிரமத்தைச் சத்தியம் என்று கூறும் ஞானிகளுக்கு அபராதம் விதித்த சாத்திரம் உண்டோ? இல்லை. மித்தை(பொய்)ஆவது ஏது எனில், பெயர்-வடிவங் (நாம ருபங்)களான பூத பௌதிக வடிவாகிய மாயை. சத்தியமாவது ஏது எனில், சச்சிதானந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே.

**மாயை யென்பதே துடையரா ரெப்படி வந்தது வருவானேன்**
**மாயை யென்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே**
**மாயை யென்பதும் பிரமமு மொன்றெனின் வஸ்துவும் பொய்யாமே**
**மாயை யென்றமே கங்களுக் கொருசண்ட மாருத குருமூர்த்தி. (94)**

மாயை என்பது ஏது?உடையர் யார் ? எப்படி வந்தது? வருவான் ஏன்?
மாயை என்பது பிரமத்தின் வேறு எனின், வஸ்துவும் இரண்டாமே;
மாயை என்பதும் பிரமமும் ஒன்று எனின், வஸ்துவும் பொய்யாமே;
மாயை என்ற மேகங்களுக்கு, ஒரு சண்டமாருத குருமூர்த்தி.

மாயை என்பது எப்படிப்பட்ட சொருபம் உடையது? அதனை உடையவர்கள் யாவர்? எப்படி அதன் உற்பத்தி வந்தது? என்ன காரணத்தால் வந்தது? மாயை எனப்படுவது பிரமத்தினும் வேறு என்றால் பிரமமும் (வஸ்துவும்) இரண்டாகும். மாயை என்பதும் பிரமமும் ஒன்று என்றால் பிரமமும் (வஸ்துவும்) மாயை போல மித்தை(பொய்)யாகிப் போகும். மாயை என்ற மேகங்களைப் போக்குதற்கு பெருங்காற்றாக உள்ள குருமூர்த்தியே!

**அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்சிய வடிவாகும்**
**இதுத னக்குள துடலியா னுலகுமெய் யெனுமவ ருடையோர்கள்**
**கதையி லாதபொய் வந்ததிப் படியென்று கண்டபே ரிலைமைந்தா**
**விதன மாயையேன் வந்ததென் றாற்புத்தி விசாரமற் றதனாலே. (95)**

அதனை இன்னது என்று,உரைத்திடப் படாமையால்,அவாச்சிய வடிவாகும்;
இது தனக்கு உளது,உடல் யான்,உலகு மெய் எனும் அவர் உடையோர்கள்;
கதை இல்(ல்)லாத பொய் வந்தது இப்படி, என்று கண்ட பேர் இல்(ல்)லை மைந்தா;
விதன மாயை ஏன் வந்தது? என்றால்,புத்தி விசாரம் அற்றதனாலே.

அந்த மாயையை பின்னம்-அபின்னம்-பின்னாபின்னம் முதலான ஒன்பது விதங்களாலும் இத் தன்மையதான சொருபம் உடையது என்று நிச்சயித்து சொல்வதற்கு முடியாததாய் இருப்பதால் அது அநிர்வசனிய வடிவமாம். இது தனக்கு சொந்தமானது, இந்த தேகம் நான், பிரபஞ்சம் சத்தியம் என்னும் அபிமானம் உடைய சீவர்களே அதனை உடையவர்கள். ஆரம்பம் எப்படி உண்டானது என்று அறியாத பொய் (அம்மாயை) எப்படி வந்தது என்று கண்டவர் ஒருவரும் இல்லை மகனே! துக்கம் தரும் மாயை ஏன் வந்தது என்றால், புத்தி விசாரம் இல்லாததால்.

**அருவ மாகுமா யாவிவித் தைகள்விளை யாடுமுன் றெரியாவே**
**உருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதித்தபின் வெளியாகும்**
**பிரம சத்திக ளநந்தமா மதைக்கண்டு பிடித்திடல் கூடாதே**
**பரவு பூதங்கள் கண்டநு மானத்தாற் பலருக்கும் வெளியாமே. (96)**

அருவம் ஆகும் மாயாவி வித்தைகள், விளையாடு முன் தெரியாவே;
உருவமாம், பல கந்தர்ப்ப சேனையாய் உதித்த பின் வெளியாகும்;
பிரம சக்திகள் அநந்தமாம்; அதைக் கண்டுபிடித்திடல் கூடாதே;
பரவு பூதங்கள் கண்ட அநுமானத்தால், பலருக்கும் வெளியாமே

இந்திர ஜாலம் அறிந்தவனுடைய அருவமாகிய மாயாசத்திகள் மணிமந்திரங்களைக் கொண்டு கந்தர்வ நகரங்களைக் காட்டி விளையாடுவதற்கு முன்னே ஒருவருக்கும் தெரியாது. உருவமாகிய பற்பல வான கந்தர்வ சேனைகளாக உண்டான பின் யாவருக்கும் தெரிகிறது. பிரம சத்திகள் எண்ணிலாதவை. அவைகளைப் பிரத்தியட்சமாய் கண்டு அறிதல் எவராலும் முடியாது. விரிந்து பரந்த ஆகாசம் முதலிய பூதங்களைக் கண்ட அனுமானத்தால் எல்லோருக்கும் அந்த சத்திகள் வெளியாகும்.

**காரி யங்களுஞ் சத்தியா தாரமுங் காணுமற் றதுமாயம்**
**பாரி னின்றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்காணும்**
**வீரி யந்திகழ் வித்தையா யினசத்தி வெளிப்படா ததுபோலப்**
**பேரி யற்பிர மத்துக்கு முலகுக்கும் பிறிதுசத் திகளுண்டே. (97)**

காரியங்களும், சத்தி ஆதாரமும் காணும்; மற்றது மாயம்;
பாரில் நின்ற மாயாவியும், சேனையும் பார்ப்பவர் கண் காணும்;
வீரியம் திகழ் வித்தை ஆயின சத்தி வெளிப்படாது; அதுபோலப்
பேர் இயல் பிரமத்துக்கும், உலகுக்கும் பிறிது சத்திகள் உண்டே

பூமியில் நிற்கின்ற இந்திர ஜாலம் அறிந்தவனும், அவன் மாயத்தால் உண்டாக்கிய சேனைகளும் காண்பவர்களின் கண்களுக்குப் புலப்படும். வீரியமான இந்திர ஜால வித்தை வடிவ சத்தியானது புலப்படாது. மாயாசத்தி தோற்றுவித்த பிரபஞ்சம் முதலான காரியங்களும், மாயா சத்திக்கு ஆதாரமும் (பிரமமும்) காணப்படும். காரியத்திற்கும் ஆதாரமான பிரமத்திற்கும் வேறான மாயாசத்தியோ பிரத்தியட்சமாகத் தோன்றுவதில்லை. ஆதலால் ஆதாரம் ஆகிய பிரமத்திற்கும், காரியமாகிய சகத்திற்கும் வேறாக அளவிறந்த சத்திகள் உள்ளன.

**சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனா மாயாவி**
**வித்தை காட்டிய விந்திர சாலம்பொய் வித்துவான் மெய்போலப்**
**புத்தி மைந்தனே சத்திமா னாகிய பூரண வான்மாவின்**
**வத்து நிர்ணயஞ் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே. (98)**

சத்தி,சத்தனைத் தவிர வேறு அன்று, காண்; சத்தனா(ம்) மாயாவி,
வித்தை காட்டிய இந்திரசாலம் பொய்; வித்துவான் மெய் போல,
புத்தி மைந்தனே! சத்திமான் ஆகிய பூரண ஆன்மாவின்,
வத்து நிர்ணயம் சொன்ன திட்டாந்தத்தின், வழி கண்டு தெளிவாயே.

இந்திரஜால சத்தியானது, இந்திரஜாலக்காரனை விட வேறாக கிடையாது. சத்தியை உடைய இந்திரஜாலக்காரன் தோற்றுவித்த இந்திரஜாலம் பொய். இந்திரஜாலக்காரன் மெய். அது போல (மாயா பிரபஞ்சம் பொய்யாகும், பிரமம் மெய்யாக இருப்பதாகும்) அறிவுள்ள மைந்தனே! சர்வசத்தியுடைய பூரண ஆன்மாவின் வாஸ்தவ நிர்ணயத்தைச் சொன்ன உதாரணம் மூலம் கண்டறிந்து தெளிவாய்.

**இல்லை யாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக்கேட்கில்**
**புல்லை யாதியா மசேதனப் பொருளெலாம் பூத்துக்காய்ப் பனபாராய்**
**நல்லை யாமக னேயதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால்**
**தொல்லை யாய்வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறாமே. (99)**

இல்லையாகிய சத்தியை, உண்டு என்பது எப்படி?எனக் கேட்கில்,
புல்லையாதியாம்,அசேதனப் பொருள் எ(ல்)லாம்,பூத்துக் காய்ப்பன
பாராய்; நல்லையா(ம்) மகனே! அதில் சிற்சத்தி நடந்திடாது இருந்தக்கால்,
தொல்லையாய் வரும், சர அசர உயிர்க்கெலாம் சுபாவங்கள் வேறாமே.

பிரமத்தைத் தவிர வேறில்லை என்னும் சத்தியை உண்டு என்று கூறுவது எப்படி எனக் கேட்டால், புல் முதலிய அசேதனப் பொருள்கள் எல்லாம் பூக்கின்ற பருவத்தில் பூத்துக் காய்க்கின்ற பருவத்தில் காய்க்கும் விசித்திரங்களைப் பார். நற்குணங்கள் உடைய மைந்தா! அந்தப் பொருள்களில் பிரமத்தின் சத்தியானது சஞ்சரிக்காமல் இருந்தால் அநாதி காலமாக வரும் சர அசரமாகிய உயிர்கள் அனைத்திற்கும் அதனதன் சுபாவம் வேறாகிவிடும்.

**கருப்பை முட்டையுட் பறவைகள் பலநிறங் கலந்தசித் திரம்பாராய்**
**அருப்ப மாஞ்சத்தி நியமமில் லாவிடி லரசிலா நகர்போலாம்**
**நெருப்பு நீரதாங் கசப்புமே மதுரமா நீசனு மறையோதும்**
**பொருப்பு மேகமாங் கடலெலா மண்களாம் புவனமிப் படிபோமே. (100)**

கருப்பை,முட்டையுள் ,பறவைகள் பல நிறம் கலந்த சித்திரம் பாராய்;
அருப்பமாம் சத்தி நியமம் இல்லாவிடில், அரசு இ(ல்)லா நகர் போலாம்;
நெருப்பு நீரதாம், கசப்புமே மதுரமா(ம்,) நீசனு(ம்) மறை ஓதும்;
பொருப்பு மேகமாம், கடல் எலா(ம்) மண்களாம்; புவனம் இப்படிப் போமே.

கருப்பையில் முட்டைக்குள் நீர்வடிவமாய் இருந்த கரு, பின்னர் பற்பல வர்ணங்களோடு கூடி பறவைகளாய் வந்த ஆச்சரியத்தைப் பார். இவ்வாறு சத்தியின் நியமம் இல்லையாயின் அரசன் இல்லாத நகரம் போல சகல பிரபஞ்ச செயல்பாடுகளும் மாறுபடும். வெப்பமான அக்கினி குளிர்ச்சியான நீர் போல ஆகும். கசப்பு குணமுடைய வேம்பு இனிப்பு உடையதாகும். சண்டாளனும் வேத அத்தியனம் செய்வன். அசையாத இயல்புடைய மலைகள் சலனமுடைய மேகங்கள் போல் ஆகும். கடல்கள் எல்லாம் மண்ணாகும். சகத்தானது இவ்வாறு அதனதன் சுபாவம் மாறிப் போகும்.

**ஆர்க்குங் காணவு மறியவும் படாதென்று மவாச்சிய வடிவென்றும்**
**சேர்க்கு நாமரூ பப்பயிர் வித்தென்றுஞ் செப்பிய சிற்சத்தி**
**பேர்க்கு மாறெங்ஙன் பிரித்திடப் படாதெனிற் பிரமபா வனையொன்றாப்**
**பார்க்கு மாறெங்ஙன் முத்தியா குவதெங்ஙன் பரமசற் குருமூர்த்தி. (101)**

ஆர்க்கும் காணவும், அறியவும் படாதென்றும், அவாச்சிய வடிவு
என்றும்,சேர்க்கு(ம்) நாம, ரூபப் பயிர் வித்து என்றும் செப்பிய சிற்சத்தி,
பேர்க்குமாறு எங்ஙன்? பிரித்திடப்படாதெனில்,பிரம பாவனை ஒன்றாப்
பார்க்குமாறு எங்ஙன்? முத்தியாகுவது எங்ஙன்? பரம சற்குரு மூர்த்தி !

யாவர்க்கும் தேகத்திற்கு வெளியே உலகில் உள்ள குடம் முதலான பொருள்களைக் காண்பது போலவும், தேகத்தின் உட்புறத்தில் உள்ள சுகதுக்கங்களை அறிவது போலவும், அந்த மாயையை இன்னதெனக் கூறி விளங்கவைக்க முடியாததால் அநிர்வசனியம் என்றும், நாமருபங்களாகிய- பெயர் வடிவங்களாகிய-பயிர்களை உண்டாக்கும் விதை என்றும் சொல்லப்படுகிறது. இந்த மாயையை ஒழிக்கும் வழி எப்படி? ஒழிக்கமுடியாது என்று சொன்னால் பிரமத் தியானத்தால் அல்லது பிரம விசாரத்தால் பிரமத்தை ஏகமாகப் பாவிக்கும் விதம் எப்படி? மோட்சம் உண்டாவது எப்படி? பரம சற்குருமூர்த்தி !

**வாயுத் தம்பனஞ் சலத்தம்ப னம்மணி மந்திர மருந்தாலே**
**தேயுத் தம்பனஞ் செய்திடி லதிலதிற் சிறந்தசத் திகளெங்கே**
**நீயச் சச்சிதா நந்தமாய் வேறொன்று நினைந்திடா திருப்பாயேல்**
**மாயச் சத்திபோ மீதன்றி மந்திர மறைகளிற் காணோமே. (102)**

வாயுத் தம்பனம், சலத் தம்பனம் மணி, மந்திர, மருந்தாலே,
தேயுத் தம்பனம் செய்திடில்,அதில் அதில் சிறந்த சத்திகள் எங்கே?
நீ அச்சச்சிதாநந்தமாய்,வேறொன்று(ம்) நினைந்திடாது இருப்பாயேல்
மாயச் சத்தி போம் ; ஈதன்றி மந்திர(ம்), மறைகளில் காணோமே.

மந்திரவாதி, வாயுத் தம்பனம், ஜல தம்பனம், அக்கினி தம்பனம் என்னும் இவற்றை மணிமந்திர ஔடதங்களினால் செய்வானாயின், அந்தந்தப் பொருள்களில் வாயுவின்-சலனம், நீரின் திரவத்தன்மை, அக்கினியின் உஷ்ணம் என்னும் விசேஷ சத்திகள் நாசம் அல்லது மறைக்கப்படுமே தவிர எங்கே காணப்படும்? காணப்படாது. அது போலவே நீயும் மாயைக்கு ஆதாரமாகிய அந்த சத்-சித்-ஆனந்தமான பிரமமாய், வேறு ஒன்றையும் நினையாமல் இருப்பாயின், அசத்து சடம் துக்கமான மாயா சத்தி மீண்டும் எழாமல் நீங்கி விடும். இந்த உபாயம் அன்றி, வேறு மந்திர வார்த்தை ஏதும் மறைகளில் காணப்படவில்லை.

**மேவு மண்ணிலவ் வியத்தமே வியத்தமாம் விவகரித் திடவேண்டில்**
**நாவி னான்மண்ணைக் குடமென்ப ரக்குட நசிப்பது நாவாலே**
**பாவு நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தம்**
**சீவ பேதகற் பிதங்களை மறந்துநீ சின்மய மாவாயே. (103)**

மேவு(ம்) மண்ணில்,அவ்வியத்தமே வியத்தமாம்;விவகரித்திட வேண்டில்,
நாவினால் மண்ணைக் குடம் என்பர்; அக்குடம் நசிப்பது(ம்) நாவாலே;
பாவு(ம்) நாம,ரூபங்களை மறந்து,மண் பார்ப்பதே பரமார்த்தம்;
சீவபேத கற்பிதங்களை மறந்து, நீ சின்மயம் ஆவாயே.

குலாளன் குடத்தைச் செய்வதற்கு முன், மண்ணில் அவ்வியக்தமாக அதாவது வெளிப்படாமல் இருந்த குடத்தின் சத்தியே, குலாளனின் தொழிலுக்குப் பின் வெளிபட்டு-வியத்தமாய்-குடம் என்னும் பெயரைப் பெறுகிறது. குடத்தைக் குறித்து பேச வேண்டி வரின், வாய்ச்சொல்லினால் மண்ணைத்தான் குடம் என்பர். அக்குடம் அழிந்தது என்னும் விவகாரமும் வாய்ச்சொல்லினால் சொல்வதே. இப்படி காரியமான குடம் உபாதான(முதல்)காரணமான மண்ணைத் தவிர வேறு இல்லை. உண்டு என்பதும் அழிந்தது என்பதும் சொற்கள் மாத்திரமே. ஆதலால் சத்தியின் விரிவாக்கமான குடம் என்னும் பெயரும், உருளை வடிவான உருவமும் மித்தை என்று நீக்கி மண் என்று பார்ப்பதே பாரமார்த்தம்-உண்மை-ஆகும். அதுபோல சீவ பேத நாமரூப கற்பனைகளை மறந்து நீ சின்மயமாக இருக்கக் கடவாய்.

**பூரிக் குங்கன சச்சிதா நந்தத்திற் பொய்சடந் துயர்மூன்றும்**
**தூரத் தாயினுந் தோன்றுபாழ் விபரிதந் துடைப்பதெப் படியென்றால்**
**நீரிற் றோன்றுந்தன் னிழறலை கீழதாய் நின்றலை யினுநேராய்ப்**
**பாரிற் றோன்றிய தன்னைநோக் கிடிலந்தப் பாழ்நிழல் பொய்யாமே. (104)**

பூரிக்கும் கன சச்சிதாநந்தத்தில் பொய்,சடம்,துயர் மூன்றும்,தூரத்து
ஆயினும்,தோன்று(ம்) பாழ்,விபரிதம் துடைப்பது எப்படி?என்றால்,நீரில் தோன்றும்
தன் நிழல்,தலை கீழதாய், நின்று அலையினு(ம்),நேராய்ப்
பாரில் தோன்றிய,தன்னை நோக்கிடில், அந்தப் பாழ்நிழல் பொய்யாமே.

ஆபரணங்கள் அனைத்திலும் பொன் நிறைந்து இருப்பது போல மாயா பிரபஞ்சம் அனைத்திலும் பூரணமாய் இருக்கும் சச்சிதானந்த வடிவ பிரமத்தில் அசத்து, சடம், துக்கம் மூன்றும் இம்மூன்று வடிவமாய் உள்ள சர்வ பிரபஞ்சமும் நீரில் புழுதி போலத் தோன்றுகின்ற விபரீதத்தைத் தோன்றாதவாறு நாசமாக்குவது எப்படி எனில், தடாக நீரில் தோன்றும் தன் நிழல் தலைகீழாய் தெரிந்து அலைந்தாலும் நேராய் தடாகக் கரையில் நிற்கும் தன்னைக் காணும்பொழுது அந்தப் பாழ் நிழல் பொய்(மித்தை) யாகும். *(அது போல உனது கற்பிதமாகிய நாம ரூப பேதங்கள் தோன்றுமாயினும் உன்னையே நோக்கினால் உனக்கு அவை மித்தையாம். இது தான் அசத்து சட துக்கங்கள் தோன்றாதவாறு ஒழிக்கும் உபாயமாகும்)*

**ஞானங் காரண மறிபொருள் காரிய நாமரூ பப்பேய்கள்**
**ஆன தெப்படி யழிந்த தெப்படியென வாய்குதல் பலனன்றே**
**மான மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்ததும் பாராமல்**
**போன துந்நினை யாமலுன் போதமாய்ப் பூர்ணமா யிருப்பாயே. (105)**

ஞானம் காரணம்; அறிபொருள் காரிய(ம்); நாம,ரூபப் பேய்கள்
ஆனது எப்படி? அழிந்தது எப்படி ?என ஆய்குதல் பலன் அன்றே;
மான மைந்தனே!தீர்க்க சொப்பன சகம் வந்ததும் பாராமல்,
போனதும் நினையாமல் உன் போதமாய், பூரணமாய் இருப்பாயே.

அறிவாகிய பொருள் காரணம், அறியப்படுவதாகிய பொருள்கள் காரியங்கள், பெயர் வடிவம் எனும் பேய்கள் உண்டானது எப்படி? அழிந்தது எப்படி? என்று ஆராய்ச்சி செய்வதில் பயன் இல்லை. பெருமையுடைய மைந்தா! நீண்ட கனவாகிய பிரபஞ்சம் இன்ன காரணத்தில் இருந்து இவ்வாறு உண்டாயிற்று என்பதை விசாரிக்காமல், எந்த உபாயத்தால் தோன்றாமல் போகும் என்பதையும் விசாரிக்காமல் உனது ஆன்மாவாய்ப் பரிபூரணமாகிய பிரமமாய் இருக்கக் கடவாய். (இதுவே நீ செய்யத்தக்கது).

**அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினா லம்மட்டும்**
**நிசத்தி லுள்விழிப் பார்வையா மிப்படி நிரந்தரப் பழக்கத்தால்**
**வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர வடிவமா யிடின்மைந்தா**
**கசத்த தேகத்தி லிருக்கினு மாநந்தக் கடல்வடி வாவாயே. (106)**

அசத்தில் எம்மட்டு (உ)ண்டு?அம்மட்டும் பராமுகமாகினால்,அம்மட்டும்
நிசத்தில் உள் விழிப் பார்வையாம்; இப்படி நிரந்தரப் பழக்கத்தால்,
வசத்தில் உன் மனம்() நின்று,சின்மாத்திர வடிவமாயிடின்,மைந்தா!
கசத்த தேகத்தில் இருக்கினும், ஆநந்தக் கடல் வடிவு ஆவாயே.

மித்தை(பொய்)யான நாமரூப பிரபஞ்சத்தில் எவ்வளவு எவ்வளவு அபிமானம் இருக்கின்றதோ அவ்வளவு அவ்வளவு விடப்படுமாயின், விடப்படும் அந்த அளவுக்கு சத்தியமான பிரமத்தில் அகமுக-உள்முகப் பார்வை உண்டாகும். இப்படி நிரந்தரமாக பயிற்சி செய்துவந்தால் மனம் உன் வசத்தில் நின்று சேதனமாத்திர சாட்சி சொருபமாய் நிலை பெற்றால் மைந்தா! வெறுக்கத்தக்க துக்க மயமான தேகத்தில் இருந்தாலும், நீ ஆனந்தக் கடல் வடிவம் ஆவாய்.

**தானன்றி வேறொன்று மில்லாத பூரணச் சச்சிதா நந்தகுணமாய்**
**ஊனின்ற வுயிர்தோறு மொன்றாகு மென்றாலஃ தொக்கின்ற படிகண்டிலேன்**
**நானென்ற சீவன்கள் சத்தான வகையொக்கு ஞானங்கள் வெளிகண்டதால்**
**ஆனந்த மிதுபோல வெளியாக வுதியாத வடைவேது குருநாதனே. (107)**

தானன்றி,வேறொன்றும் இல்லாத பூரணச் சச்சிதாநந்த குணமாய்,
ஊன் நின்ற உயிர்தோறும் ஒன்றாகும் என்றால் ,அஃது ஒக்கின்றபடி கண்டிலேன்;
நான் என்ற சீவன்கள், சத்தான வகை ஒக்கு(ம்) ஞானங்கள் வெளி கண்டதால்,
ஆனந்தம் இது போல,வெளியாக உதியாத, அடைவேது? குருநாதனே !

குருநாதனே! பரிபூரண சச்சிதானந்த சுபாவமாய் உண்மையில் தன்னிடத்தில் தன்னைத் தவிர மற்றொரு பொருளும் இல்லாத ஆன்மா, தேகத்தில் 'நான் நான்' என்று கருதி விவகாரத்தில் ஈடுபடும் ஒவ்வொரு உயிர்களிலும் ஏகமாக இருக்கும் என்று கூறப்படுகிறது. அவ்வாறு இருக்கின்ற தன்மையை அறிந்திலேன். 'நான் நான்' என்று சொல்லும் போது சீவர்களின் இருப்புத் தன்மை சத்தாக இருப்பது தெரிகிறது. யான் கண்டேன், உண்டேன் என்று சொல்லும்போதில் சீவர்களிடத்தில் ஞானம் வெளிப்படுவதால் சித்தும்-ஞானமும்-வெளிப்படையாகக் காணப்படுகிறது. ஆனந்தமானது சத்தும் சித்தும் போல வெளிப்படையாகத் தோன்றாதது ஏன்?

**உருவங்க ளிரதங்கள் பரிசங்க ளொருபூவி லொன்றாகு மென்றாலுமே**
**கரணங்க ளோரொன்றி லோரொன்று தெரியுங் கணக்கன்றி வாராதுகாண்**
**அருமந்த சச்சிதா நந்தச் சுபாவங்க ளான்மாவின் வடிவாகிலும்**
**பிரபஞ்ச மயமாம் விருத்திபே தத்தினாற் பேதங்க ளாமைந்தனே. (108)**

உருவங்கள்,இரதங்கள்,பரிசங்கள் ஒரு பூவில் ஒன்றாகும் என்றாலுமே,
கரணங்கள் ஓரொன்றில், ஒரொன்று தெரியும் கணக்கன்றி வாராது; காண்!
அருமந்த சச்சிதாநந்தச் சுபாவங்கள், ஆன்மாவின் வடிவாகிலும்,
பிரபஞ்ச மயமாம் விருத்தி பேதத்தினால் ,பேதங்களாம்) மைந்தனே.

மலர் ஒன்றில், ரூபம், ரசம், பரிசம், வாசனை ஆகியவை ஒன்றாக ஏகமாக இருந்த போதிலும், இந்திரியங்கள் ஒவ்வொன்றினால் ஒவ்வொரு குணம் மட்டுமே அறிய முடியுமே தவிர, ஒரு இந்திரியத்தில் சகல குணங்களும் எப்படித் தோன்றாதோ அப்படி சச்சிதானந்தமாகிய குணங்கள் ஆன்மாவின் வடிவமாயினும் பிரபஞ்ச மயமாகிய விருத்திகளின் பேதத்தால் பேதங்களாகத் தெரிகிறது மைந்தனே!

**தாமத மிராசதஞ் சாத்துவித முக்குணத் தால்வரும் விருத்திமூன்றாம்**
**ஆமவைகண் மூடமுங் கோரமுஞ் சாந்தமு மபிதான மாகுமகனே**
**ஏமுற விருக்கின்ற சச்சிதா நந்தங்க ளென்றென்று மொன்றாகிலும்**
**நாமுரைக் கும்விருத் திப்பிரிவி னாற்சொரூப ஞானாதி பிரிவாகுமே. (109)**

தாமதம்,இராசதம்,சாத்துவிதம்) முக்குணத்தால் வரும் விருத்தி மூன்றாம்;
ஆம்! அவைகள் மூடமும்,கோரமும்,சாந்தமும் அபிதானமாகும்) மகனே !
ஏமுற இருக்கின்ற சச்சிதாநந்தங்கள், என்றென்றும் ஒன்றாகிலும்,
நாம் உரைக்கும் விருத்திப் பிரிவினால், சொரூப ஞானாதி பிரிவாகுமே.

தாமதம், இராசதம், சாத்துவிகம் என்ற மூவித குணங்களால் உண்டாகின்ற விருத்திகளும் மூவகையாம். அம்மூவகை விருத்திகளும் முறையே மூடமும், கோரமும், சாந்தமும் எனப்பெயர் பெறும். மைந்தா! தம்மை அடைந்தோர் இறுமாப்பு அடையக் காரணமாக இருக்கின்ற சத் சித் ஆனந்தம் என்றென்றும் ஆன்மாவில் ஏகமாக இருக்கினும் யான் கூறுகின்ற விருத்தி பேதத்தால் ஆன்மாவில் சச்சிதானந்தங்கள் பேதமாகத் தெரிகிறது.

**சடமான மூடத் தருக்கல்லு மண்களிற் சத்தொன்று மேதோன்றுமால்**
**விடமான காமாதி கோரத்தி லாநந்தம் விளையாது மற்றவைகளாம்**
**திடமான வொழிவாதி சாந்தத்தி லேசச்சி தாநந்த மூன்றும்வெளியாம்**
**மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மனமாகி லாநந்தமே.** **(110)**

சடமான மூடத் தரு,கல்லு, மண்களில், சத்து ஒன்றுமே தோன்றுமால்,
விடமான காமாதி கோரத்தில் ஆநந்தம் விளையாது; மற்றவைகளாம்;
திடமான ஒழிவாதி சாந்தத்திலே,சச்சிதாநந்த(ம்) மூன்றும் வெளியாம்;
மடமான மூடங்கள்,கோரங்கள் விடு;சாந்த மனமாகில் ஆநந்தமே.

மரம், கல், மண் முதலியவற்றில் ஜடத்தன்மை, மூடத்தன்மை மட்டும் காணப்படுவதால், பிரமத்தின் சுபாவங்களில் சத்து ஒன்று மட்டும் வெளிப்படும். விஷம் போல் புருஷனை மயக்கும் காமக்குரோத முதலிய கோர விருத்தியிலும், மோகம் பயம் முதலான புத்தியின் மூட விருத்தியிலும் ஆனந்தம் தோன்றாது. சத்தும் சித்தும் வெளிப்படும். திடமாகிய வைராக்கியம், பொறுமை, உதாரம் முதலிய சாந்த விருத்தியில் சத் சித் ஆனந்தம் மூன்றும் வெளிப்படும். அறியாமையினால் உருவாகின்ற மூட விருத்திகளையும் கோரவிருத்திகளையும் விட்டு, அந்தக்கரணம் அடக்குதல், புறக்கரணம் அடக்குதல் முதலான சாதன சதுட்டயத்தின் மூலமாக உள்முகப் பார்வை உண்டாயின் தடையில்லாத ஆனந்தம் தோன்றும்.

**இகமான குருநாத னேசச்சி தாநந்த மெனுமிலக் கணமறிகிலேன்**
**அகலாத சத்தாவ தேதுசித் தாவதே தாநந்த மேதென்றிடில்**
**மிகுகால மூன்றுங் கெடாதிருப் பதுசத்து வேறுபா டறிதல்சித்தாம்**
**மகிழ்காம நுகர்போது சுகமாகு மநுபூதி வாழ்வென்ப தாநந்தமே.** **(111)**

இகமான குருநாதனே!சச்சிதாநந்தம் எனும் இலக்கணம் அறிகிலேன்;
அகலாத சத்தாவது ஏது?சித்தாவது ஏது? ஆநந்தம் ஏது? என்றிடில்,
மிகு காலம்(ம்) மூன்றும் கெடாது இருப்பது சத்து; வேறுபாடு அறிதல் சித்தாம்;
மகிழ் காமம்(ம்) நுகர்போது, சுகமாகும் அநுபூதி வாழ்வு என்பது ஆநந்தமே.

இகத்தில் அருளுருவாய் எழுந்தருளிய குருநாதனே! சச்சிதானந்தம் என்பவற்றின் இலக்கணம் யான் அறிந்திலேன். நீங்காத சத்தாவது எது? சித்தாவது எது? ஆனந்தம் எது? என்று கேட்பாயாகில், முக்காலங்களிலும் கெடாதிருப்பது-பொய்யென்று நிச்சயிக்க முடியாதது-சத்து ஆகும். இது இதனினும் வேறு என்று பொருள்களுள் ஒன்றனுக்கு ஒன்றுள்ள வேற்றுமையை அறிதல், முக்காலத்திலும் எல்லாவற்றையும் அறிதல் அல்லது கேடின்றிய பிரகாசம் சித்தின் இலக்கணம். விரும்பிய பொருள் கிடைக்கப்பெற்று அதனை அனுபவிக்கும் போது உண்டாவது சுகம். சந்தோஷ வடிவமான சாந்த விருத்தியில் சுகமாய் எழுவதான அனுபூதி இன்பம் ஆனந்த லட்சணம்.

**நாசச் சரீரத் திருக்குஞ் சரீரிதனை நால்வேத மாவாக்கியம்**
**நீசச்சி தாநந்த மென்றிடினு மாசிரியர் நீபிரம மாகு மெனினும்**
**மாசற்ற சச்சிதா நந்தநா னென்னவிவன் மன்னுமநு பவமெங்ஙனே**
**கோசப் புரங்களை யிடித்துத் தகர்க்குமத குஞ்சரக் குருநாதனே. (112)**

நாசச் சரீரத்து இருக்கும் சரீரிதனை,நால் வேத மாவாக்கியம்,
நீ சச்சிதாநந்தம் என்றிடினும்,ஆசிரியர் நீ பிரமமாகும் எனினும்,
மாசற்ற சச்சிதாநந்த(ம்) நானென்ன, இவன் மன்னும் அநுபவம் எங்ஙனே?
கோசப் புரங்களை இடித்துத் தகர்க்கு(ம்)மத குஞ்சரக் குருநாதனே.

நாசத்தை உடைய தேகத்தில் அபிமானியாய் இருக்கும் தேகியை நான்கு வேதங்களிலுள்ள மகாவாக்கியங்களும் நீ சத் சித் ஆனந்தம் என்று கூறினாலும், நீயே சச்சிதானந்தப் பிரமம் என்று ஆசாரியர் உபதேசித்தாலும், தேகியாகிய இப்புருஷன் 'நானே சச்சிதானந்த வடிவ பிரமம் என்று' பிரமத்தின் அனுபவத்தை அடைவது எப்படி? பஞ்சகோசமாகிய நகரங்களை இடித்துத் தகர்க்கும் ஞான மத யானையாகிய குருபரனே!

**சென்மாந்த ரஞ்செய்த வினைகளுட லருமெனிற் செல்கால மிவனுண்டலோ**
**கன்மாநு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற காலத்து மிவனுண்டலோ**
**உன்மாத யாதனா வுடல்கடவு ளுடன்மநுட் வுடன்மாறி மாறியழியும்**
**தன்மாய வுடல்கெடினு மிவனிருப் பதுகொண்டு சத்தென்ப தொக்குமகனே.(113)**

சென்மாந்தரம் செய்த வினைகள் உடல் தரும் எனில், செல்காலம் இவன் உண்டலோ?
கன்ம அநுபவ நரக,சொர்க்கம் எனில்,வருகின்ற காலத்தும் இவன் உண்டலோ?
உன் மாத யாதனா உடல்,கடவுள் உடல்,மநுட உடல் மாறி மாறி அழியும்; தன் மாய உடல் கெடினும் இவன் இருப்பது கொண்டு சத்து என்பதுஒக்கு(ம்) மகனே.

கடந்து போன சென்மங்களில் செய்த கர்மங்கள் தேகத்தைத் தரும் என்று சொன்னால் கடந்த காலத்தும் இத்தேகியானவன் இருந்திருக்கின்றான் என்றாகிறது அல்லவா? நிகழ்காலத்தில் இவன் செய்கின்ற பாவ புண்ணியத்திற்கு ஏற்ப நரகமும் சொர்க்கமும் கிடைக்கும் என்று சொன்னால், எதிர் காலத்திலும் இத்தேகி யாதனா சரீரம் தேவசரீரங்களைத் தாங்கிக் கொண்டு இருப்பான் என்றாகிறது அல்லவா? உன் யாதனா சரீரமும், தேவ சரீரமும், மநுஷ சரீரமும் மாறி மாறி அழியும். தனது மாயா மயமான சரீரங்கள் நாசமான போதிலும் இத்தேகி முக்காலத்தும் இருப்பதால் மகனே! சத்தென்று சொல்வது ஒப்புக்கொள்ளக்கூடியதே.

**இருளாக மூடுஞ் சுழுத்தியி லிராத்திரியி லிரவிசுட ரற்றபொழுது**
**மருளாம லிருளையும் பொருளையுந் தெரிகின்ற வகைகொண்டு சித்தாகுமே**
**பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினிற் பேராத பிரியமதனால்**
**அருகாத பிரியஞ் சுகத்தில்வரு மாதலா லாநந்த மாமைந்தனே. (114)**

இருளாக மூடும் சுழுத்தியில்,இராத்திரியில்,இரவி சுடர் அற்ற பொழுது,
மருளாமல் இருளையும்,பொருளையும் தெரிகின்ற வகைகொண்டு,சித்து ஆகுமே;
பெருவாழ்வு மிக்க தானே,தன்னிடத்தினில் பேராத பிரியம்;அதனால்
அருகாத பிரியம் சுகத்தில் வரும்;ஆதலால் ஆநந்தமா(ம்) மைந்தனே.

மழைக்கால இருள்போல எந்தவொரு விஷயமும் தோன்றாமல் மறைக்கின்ற சுழுத்தியில்-ஆழ் துயிலில் அஞ்ஞானத்தையும் ஆனந்தத்தையும் அறிகின்றோம். இரவில் கண்களால் இருளை அறிகின்றோம். சூரியனின் பிரகாசம் போன்ற பகற்காலத்திலும் வெளிச்சம் இல்லாது போனாலும் தோல் தொடு உணர்வால் குடம் முதலான பொருள்களையும் மயங்காது அறிகின்றோம். இந்த விதத்தால் இவன் சித்தென்பது அனுபவம் ஆம். மற்றவர்கள் மீது வெறுப்பு ஏற்பட்டாலும் தன்னிடத்தில் தன்பேரில் மாறாத பிரியம் வைத்திருப்பதால் குறைவற்ற பிரியமானது சுகத்தில் உண்டாகிறது, துக்கத்தின்பேரில் பிரியம் உண்டாவதில்லை என்பது உலகப் பிரசித்தம் ஆதலால் மைந்தனே! இவன் ஆனந்தம் என்பது அனுபவமாம்.

**அன்னபா னாதிசுக சாதனம தாகையா லார்க்கும்வெகு பிரியமாகும்**
**இன்னவா றான்மாவு மாநந்த சாதன மெனக்கருதல் பொருளல்லவே**
**சொன்னவான் மாவையொரு சுகசாத னங்களொடு சொல்லுவா யாகின்மகனே**
**உன்னதா நந்தம்வே றேதநுப விப்பதா ருபயவான் மாவுமுளவோ. (115)**

அன்னபானாதி சுக சாதனம்; அது ஆகையால், ஆர்க்கும் வெகு பிரியம் ஆகும்;
இன்னவாறு ஆன்மாவும்,ஆநந்த சாதனம் எனக் கருதல் பொருள் அல்லவே!
சொன்ன ஆன்மாவை,ஒரு சுக சாதனங்களொடு சொல்லுவாயாகில், மகனே !
உன்னது ஆநந்தம் வேறு ஏது? அனுபவிப்பது ஆர் ? உபய ஆன்மாவும் உளவோ?

உணவு, பானங்கள் அருந்தும்போது சுகம் ஏற்படுவதால், அந்த சுகத்திற்கு அந்த பொருட்களே காரணம் ஆவதால் எல்லோருக்கும் அவைகளின்மீது அதிகப் பிரியம் உண்டாகிறது. அதுபோல், ஆன்மாவும் ஆனந்தவடிவம் என்பதை, அந்த ஆனந்தத்திற்கு உணவு போல ஆன்மாவும் சுகம் தரும் பொருளாக/கருவியாக இருக்குமோ என்று எண்ணுவது வேதத்திற்கு முரணானது. ஆன்மாவே ஆனந்த வடிவம் என்று வேதம் கூறிய ஏகமான ஆன்மாவை, உணவு, பானம் முதலான சுகம் தரும் பொருள்களோடு சேர்த்து ஆன்மாவும் சுக சாதனம் என்று கூறினால், உன்னுடைய அனுகூலமான ஆனந்தம் வேறே எது? அதனை அனுபவிக்கின்றவன்-போக்தா-வேறே தனியாக ஒருவன் இருக்கின்றானா? இரண்டாவதாக வேறு ஆன்மாவும் உண்டோ? ஆன்மா ஆனந்தவடிவமே அன்றி, சாதனம்-சுகந் தரும் பொருள்/கருவி-இல்லை.

**விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாகும் வெகுபிரிய மான்மாவிலாம்**
**விடயசுகம் வருபிரிய மாறிவரு மான்மாவில் வெகுபிரிய மாறாதுகாண்**
**விடயசுகம் விடலுமாங் கொளலுமா மான்மாவை விடுவதெவர் கொள்வதெவர்பார்**
**விடயசுக போகங்கள் விடுமவனை யவனால் விடப்படா தொருநாளுமே.(116)**

விடயசுகம் அதில் வருதல் பிரிய(ம்) மாத்திரமாகும்;வெகு பிரியம் ஆன்மாவிலாம்;
விடயசுகம் வருபிரிய(ம்) மாறிவரும்;ஆன்மாவில் வெகுபிரிய(ம்) மாறாது, காண்;
விடயசுகம் விடலுமாம், கொளலுமாம்; ஆன்மாவை விடுவது எவர்? கொள்வது எவர்? பார்;
விடய சுக போகங்கள் விடும் அவனை,அவனால் விடப்படாது ஒரு நாளுமே.

விஷயத்தினால் உண்டாகின்ற சுகத்தினால் வருவது பிரீதி மாத்திரமே, ஒப்பிலாத ஆனந்தம் அல்ல. ஆன்மாவின் இடத்தில் இருப்பது ஈடு இணையற்ற ஆனந்தம். விஷயத்தினால் உண்டாகின்ற சுகம் மாற்றத்தை உடையது. ஆன்மாவிடம் உள்ள சுகம் மாறாதது. விஷயசுகத்தை விட்டுவிடவும் முடியும் அல்லது பற்றிக்கொள்ளவும் முடியும். ஆன்மாவை ஒதுக்கித்தள்ளவும், சேர்த்துக் கொள்ளவும் முடியாது. ஆதலால் ஆன்மாவை விட்டுவிடுபவர் யார்? கொள்பவர் யார்? நீ பாராய். விஷய சுக போகங்களை விட்டுவிட முடிந்த ஒருவனால், அந்த ஆன்மாவை ஒருநாளும் விடல் முடியாது.

**வேகின்ற கோபங்க ளாலென்னை நான்கொன்று விடுகிறே னென்றுசிலபேர்**
**சாகின்ற படியினாற் றன்னையே தான்கொன்று சாவனெனல் சங்கையலவே**
**தேகந்த னைக்கொல்லு மவனால் விடப்பட்ட தேகமவ னல்லமகனே**
**ஆகந்த னிற்கோப மலதுதனை யொருநாளு மான்மா வெறுப்பதிலையே.(117)**

வேகின்ற கோபங்களால்,என்னை நான் கொன்று விடுகிறேன் என்று, சில பேர்
சாகின்றபடியினால்,தன்னையே தான் கொன்று,சாவன் எனல் சங்கை அ(ல்)லவே;
தேகந்தனைக் கொல்லும் அவனால், விடப்பட்ட தேகம் அவன் அல்ல; மகனே !
ஆகம் தனில் கோபம்; அலது, தனை ஒரு நாளும்,ஆன்மா வெறுப்பதிலையே.

சுடுகின்ற கோபங்களால் 'என்னை நான் கொன்று விடுகிறேன்' என்று சிலர் சாகின்றபடியால், ஆன்மா தன்னிடத்துள்ள வெறுப்பினால் தன்னையே தான் கொலைசெய்து சாகின்றது என்று கருதத் தோன்றுகிறதே என்று கேட்டால், அது சந்தேகம் அல்ல. ஒருவன் தேகத்தைக் கொன்று விடுகின்றான். அவனால் கைவிடப்பட்ட அந்த தேகம் அவன் அல்ல மகனே! ஆன்மாவுக்கு அன்னியமான தேகத்தின் மீது வெறுப்பு வந்ததே தவிர, தன்னை ஒருபோதும் ஆன்மா வெறுப்பது இல்லை.

**தாகப்ப டும்பொருளி லும்மகன் பிரியமாந் தனயனிலு முடல்பிரியமாம்**
**ஆகத்தி லும்பிரிய மிந்திரிய மாங்கரண மதனிலும் பிரியமுயிராம்**
**ஏகப்பி ராணனிலும் வெகுபிரிய மான்மாவி லிந்தவான் மாமுக்கியம்**
**ஊகத்தி னாற்கௌண மித்தைகர்த் தாமூன்று மோரொன்றி லதிகமகனே.(118)**

தாகப்படும் பொருளிலும் மகன் பிரியமாம்; தனயனிலும் உடல் பிரியமாம்;
ஆகத்திலும் பிரியம் இந்திரியமாம்; கரணம் அதனிலும் பிரியம் உயிராம்;
ஏகப் பிராணனிலும் வெகு பிரியம் ஆன்மாவில், இந்த ஆன்மா முக்கியம்;
ஊகத்தினால்,கௌண(ம்), மித்தை, கர்த்தா மூன்றும் ஓரொன்றில், அதிக(ம்) மகனே!

செல்வத்தில் உள்ள பிரியத்தை விட புத்திரன் பிரியமாம். புத்திரனைக்காட்டிலும் தனது உடல் பிரியமாம். தேகத்தை விட இந்திரியம் பிரியமாம். இந்திரியங்களைக் காட்டிலும் பிராணன் பிரியமாம். மனதோடு ஒன்றாகிய பிராணனை விட ஆன்மாவிடத்துப் பரமப் பிரியமாம். இந்த ஆன்மாவே முக்கியமாம். ஊகத்தினால் கௌண ஆன்மா, மித்தை ஆன்மா, கர்த்தா ஆன்மா இவை மூன்றும் மகனே! ஒவ்வொரு சமயத்தில் முக்கியமாகிறது.

**கெடலான பொழுதிவன் காணிக்கு மகனான கௌணவான் மாமுக்கியம்**
**விடலாத வுடலம் பரிக்குநா ளுடலான மித்தையான் மாமுக்கியம்**
**திடமான நன்மைகதி வேண்டினாற் கர்த்தனாஞ் சீவவான் மாமுக்கியம்**
**சடமாயு முத்தியினின் ஞானவான் மாவான தானே மகாமுக்கியம். (119)**

கெடலானபொழுது,இவன் காணிக்கு மகனான கௌணஆன்மா முக்கியம்;
விடலாத உடலம் பரிக்கு(ம்)நாள்,உடலான மித்தை ஆன்மா முக்கியம்;
திடமான நன்மை கதி வேண்டினால்,கர்த்தனாம் சீவ ஆன்மா முக்கியம்;
சட(ம்) மாயு(ம்) முத்தியினில், ஞான ஆன்மாவான தானே, மகா முக்கியம்.

ஒருவனுக்கு மரணம் வந்தபொழுது, இவனுடைய நிலம் முதலியவற்றை அனுபவிப்பதற்கு உரிய புத்திரனாகிய கௌண ஆன்மா முக்கியம். அன்னமய கோச தேகத்தை பராமரிக்கும் பொழுது தேகமான மித்தை ஆன்மா முக்கியம். திடமான பிரயோசனத்தை உடைய சுவர்க்கத்தை அடைய விரும்பி பாவங்களைப் போக்கும் தவங்களை மேற்கொள்ளும் பொழுது கர்த்தா ஆகிய விஞ்ஞானமய கோசம் என்னும் சீவ ஆன்மா முக்கியம். அஞ்ஞானம் அதன் காரியங்கள் அனைத்தோடும் மாய்ந்து போகின்ற மோட்ச தசையில் சிதான்மா ஆகிய தானே மிகவும் முக்கியம்.

**புலியுமநு கூலமெனி லிட்டமாம் பகைசெயிற் புதல்வனெனி னும்வெறுப்பாம்**
**உலகிலிரு வகையுமல் லாதபுல் லாதியி லுதாசீன மாமாதலான்**
**மலினமறு சின்மயன் பலவகையு மிப்படி மகிழ்ச்சியில் விருப்பமிகழான்**
**அலகிலா நந்தவடி வாகுமுன் சொரூபத்தை யாராய்ந்து பார்மைந்தனே. (120)**

புலியும் அநுகூலம் எனில் இட்டமாம்; பகை செயில் , புதல்வன் எனினும் வெறுப்பாம்; உலகில் இரு வகையும் அல்லாத புல்லாதியில் உதாசீனமாம்; ஆதலால், மலினம் அறு சின்மயன், பல வகையும் இப்படி மகிழ்ச்சியில் விருப்பம் இகழான்; அலகு இல் ஆநந்த வடிவாகும்,உன் சொரூபத்தை ஆராய்ந்து பார்; மைந்தனே!

புலியும் தனக்கு சாதகமாக இருந்தால் பிரியம் வரும். புத்திரனாக இருந்தாலும் சாதகமாக இல்லை என்றால் வெறுப்பு உண்டாகும். உலகில் விருப்பும் வெறுப்பும் அல்லாத உதாசீன புல் முதலியவற்றில் ஒரு சமயத்தில் விருப்பு தோன்றும், மற்றொரு சமயத்தில் வெறுப்பு வரும். ஆனால், சுத்த சின்மயனான ஆன்மா எந்தவகையிலும் தன் ஆனந்தத்தில் ஒரு போதும் விருப்பத்தைவிட்டு நீங்காது. ஆதலால் எல்லையற்ற ஆனந்த வடிவான உனது சொருபத்தை மைந்தனே! ஆராய்ந்து பார்.

**மானஞ்சி றந்தகுரு நாதனே யாநந்த வகைகளெத் தனையென்னிலோ**
**ஞானந்தி கழ்ந்தபிர மாநந்தம் வாசனா நந்தம்விட யாநந்த மென்**
**றாநந்த மூன்றுவித மெட்டுவகை யென்பர்சில ரவ்வைந்து மிதிலடக்கம்**
**யானந்த வகைசொலக் கேண்மைந்த னேயெட்டு மிஃதின்ன தின்னதெனவே. (121)**

மானம் சிறந்த குருநாதனே! ஆனந்த வகைகள் எத்தனை என்னிலோ?
ஞானம் திகழ்ந்த பிரமாநந்தம்,வாசனாநந்தம், விடயாநந்தம் என்று ஆநந்தம் மூன்று விதம்; எட்டு வகை என்பர் சிலர்; அவ்வைந்தும் இதில் அடக்கம்;
ஆநந்த வகை சொலக் கேள்; மைந்தனே! எட்டும் இஃது இன்னது இன்னது, எனவே.

பெருமை மிகுந்த குருநாதனே! ஆனந்தத்தின் வகைகள் எத்தனை என்னில், 1.தனது ஞானத்தாலேயே சுழுத்தியில் விளங்குகின்ற பிரமானந்தம், 2.நித்திரை தெளிந்தும் தெளியாத நிலையில் விஷயத்தின் அனுபவம் இன்றி தோன்றும் வாசனானந்தம், 3.விரும்பிய வஸ்துவை அடைவதால் உள்முகமான மனதில் பிரதிபிம்பிக்கின்ற விஷயானந்தம் என ஆனந்தம் மூன்று வகையாம். சிலர் எட்டுவகை என்பர். மற்ற ஐந்து ஆனந்தங்களும் இதில் அடக்கம். எட்டு வகை ஆனந்தங்களும் என்னவென்று விவரமாகச் சொல்கிறேன் கேள் மைந்தனே!

**போகத்தில் வருசுகம் விடயசுக நித்திரைப் போதுளது பிரமசுகமாம்**
**மோகத்த னந்தலிற் சுகம்வாச னைச்சுக முழுப்பிரிய மான்மசுகமாம்**
**யோகத்தி லுளதுமுக் கியசுக முதாசீன முற்றசுக நிசசுகமதாம்**
**ஏகத்தை நோக்கலத் துவித சுகம் வாக்கிய மெழுந்தசுக ஞானசுகமே. (122)**

போகத்தில்வரு(ம்) சுகம் விடய சுக(ம்);நித்திரைப் போது (உ)ளது பிரம சுகமாம்;
மோகத்து அனந்தலில் சுகம் வாசனைச் சுக(ம்);முழுப் பிரியம் ஆன்ம சுகமாம்;
யோகத்தில் உளது முக்கிய சுகம்; உதாசீனமுற்ற சுக(ம்) நிச சுகமதாம்;
ஏகத்தை நோக்கல் அத்துவித சுகம்; வாக்கியம் எழுந்த சுக(ம்) ஞான சுகமே.

*(அனைத்தும் ஆத்மானந்தமே. அந்தந்த விஷயங்களில் அனுபவிக்கப்படும்போது வெவ்வேறு பெயர்களால் குறிப்பிடப்படுகிறது).* 1.விரும்பிய வஸ்துவை அடைந்து அதனை அனுபவிக்கும் போது ஆசை பூர்த்தியான காரணத்தால் உள்முகமான மனோவிருத்தியில் பிரதிபிம்பித்துள்ள ஆத்மானந்தம் விஷயானந்தம். 2.சுழுத்திகாலத்தில் சுயம்பிரகாச ஆத்மானந்தம் பிரமானந்தம். 3.விழித்தெழுந்த புருஷனுக்கு மயக்கத்தை உடைய சுழுத்தியில் அனுபவித்த வாசனை பின்னர் கொஞ்ச நேரம் தொடர்ந்து இருப்பதால் வாசனானந்தம். 4.பிரியமான வஸ்துக்களுள் யானே அதிகப் பிரியன் என்னும் விவேகத்தால் எழுகின்ற ஆனந்தம் ஆத்மானந்தம். 5.யோக அப்பியாச பலத்தால் மனம் லயமான போது மறைப்பு-ஆவரணம் இன்றி தோன்றும் ஆனந்தம் முக்கியானந்தம். 6.சுகதுக்க வடிவ நிமித்தத்தால் உண்டாகும் விருப்பு வெறுப்புகள் இல்லாத உதாசீன காலத்தில் தோன்றும் ஆனந்தம் நிஜானந்தம். 7.நாமருபங்கள் மித்தை என்று உணர்ந்து அவற்றை விடுத்து விவேகத்தால் அத்வைதமான தன்னை நோக்கும் போது தோன்றும் ஆனந்தம் அத்துவித ஆனந்தம். 8.மகாவாக்கிய விசாரத்தால் உண்டாகின்ற அந்தக்கரண விருத்தியில் பிரதிபிம்பிக்கின்ற ஆனந்தம் வித்தியானந்தம்.

**இவ்வா றுரைசெயுஞ் சுகபே தங்களி னியல்பா மவைசொல மகனேகேள்**
**ஒவ்வா நனவினி லுழல்வா னிடர்கெட வுறங்குஞ் சயனம துறுநேரம்**
**செவ்வா மனமக முகமா மதிலொளிர் சித்தின் சுகநிழல் சேருங்காண்**
**அவ்வா றிவனுள மகிழ்வா மநுபவ மதுதான் விழயசு காநந்தம். (123)**

இவ்வாறு (உ)ரை செயும் சுக பேதங்களின் இயல்பாம்,அவை சொ(ல்)ல மகனே கேள்!
ஒவ்வா நனவினில் உழல்வான்; இடர் கெட, உறங்கும் சயனம் அது (உ)று நேரம்,
செவ்வா மனம் அகமுகமாம்;அதில் ஒளிர் சித்தின் சுகநிழல் சேரும்; காண்!
அவ்வாறு இவன் உள(ம்) மகிழ்வாம் அநுபவம்; அதுதான் விழய சுக ஆநந்தம்.

இங்ஙனம் கூறிய ஆனந்த வேறுபாடுகளின் சுபாவங்களை யாம் கூறக் கேள் மகனே! விழிப்பில் தனக்கு வேண்டிய விஷயங்களைச் சம்பாதித்தல் போன்ற விவகாரங்களில் சுழல்கின்ற சீவன், அதனால் உண்டாகும் அலைச்சல் முதலான துன்பங்கள் நீங்குதற்பொருட்டு மிருதுவான பஞ்சணையில் உறங்கப்போகும் சமயத்தில் செவ்வையாக அவனது புத்தி உள்முகமாகும். அப்போது அவ்விருத்தியில் ஆத்மானந்தம் பிரதிபிம்பிக்கும். அவ்வாறு அவனது மனோவிருத்தி ஆத்மானந்தத்தின் பிரதிபிம்பத்தை அடைவதால் ஆனந்தாகாரமாக விளங்கும் அனுபவமே விஷயானந்தம் ஆகும்.

**ஈனந் தருசுக விடயந் திரிபுடி யிடரா மெனமன மசையாமல்**
**சேனந் தனது குலாயந் தனில்விழு செயல்போ னித்திரை செறிசீவன்**
**தானந் தமில்பர னுடனொன் றுவனொரு தனையல் லதுபிற நினையாமல்**
**ஆநந் தமயனு மாவன் சுகமிகு மதுதா னுயர்பிர மாநந்தம். (124)**

ஈனம் தரு(ம்) சுக(ம்) விடயம்;திரிபுடி இடராம் என,மனம் அசையாமல்
சேனம் தனது குலாயம் தனில் விழு(ம்) செயல் போல், நித்திரை செறி சீவன்
தான்,அந்தம் இல் பரனுடன் ஒன்றுவன்;ஒருதனை அல்லது பிற நினையாமல்,
ஆநந்தமயனும் ஆவன்; சுக(ம்)மிகும்; அதுதான் உயர் பிரமாநந்தம்.

இழிவைத் தருகின்ற விஷயசுகமானது புசிப்பவன், போகம், போகப்பொருள் என்ற திரிபுடியோடு கூடினதால் துக்கம் எனக் கருதி மனம் சலியாமல், பருந்தானது தனது கூட்டில் விழுகின்ற செயல்போல, நித்திரை செய்யும் அந்தச் சீவன் பிரமத்தோடு ஒன்றி அத்வைதமான தன்னை அன்றி வேறொன்றையும் சிந்தியாமல் சுழுத்தியில் உள்ள ஆனந்த வடிவமாக இருப்பான். அதுதான் சுழுத்தியில் உள்ள பிரமானந்தம்.

**தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள்விழி துயில்வோர்கள்**
**தாங்கும் மலரணை நன்றா கச்சிலர் சம்பா திப்பது தானூகம்**
**தீங்குந் நன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியா தமளிசெய் பொழுதேபோல்**
**ஆங்குள் வெளிகளு மறியா வநுபவ மதனா லதுபிர மாநந்தம். (125)**

தூங்கும் சுகம், அது பிரமச் சுகம் எனல் சுருதிப் பொருள் ;விழி துயில்வோர்கள்,
தாங்கும் மலர் அணை நன்றாகச் சிலர் சம்பாதிப்பதுதான், ஊகம்;
தீங்கும் -நன்மையும்,ஆண்-பெண் முறைமையும் தெரியாது,அமளி செய் பொழுதே போல்,
ஆங்கு,உள்- வெளிகளும் அறியா(து) அனுபவம், அதனால் அது பிரமாநந்தம்.

உறங்கும் சுகமானது பிரம சுகம் என்று சொல்லுதல் சுருதிப் பொருள். தூங்குகின்றவர்கள் தூக்கத்திற்கு தடங்கல் ஏற்படாதிருக்க மிருதுவாக நன்றான மலர் பஞ்சணையைத் தயாரித்து வைத்துக்கொள்வதே சுழுத்தியில் பிரமானந்தம் உண்டென்பதற்கு ஊகம் (யுத்தியாகும்). காதலன் காதலியைக் கூடி அனுபவிக்கும் பொழுது நன்மை தீமை என்பதையும் ஆண் பெண் முறைமையும் சற்றும் அறியாது ஆனந்த வடிவாய் இருப்பது போல, சுழுத்தியில் பிராஞ்ஞன் என்னும் சீவன் பிரமத்தை அடைந்து ஐக்கியமான பொழுது வெளி-உள் விவகாரங்களுள் எதனையும் சிறிதும் அறியாமல் ஆனந்த வடிவமாய் இருத்தலே அனுபவமாம். இப்படி சுருதி, உத்தி, அனுபவங்கள் உளதால் அந்த ஆனந்தம் பிரமானந்தம்.

**உதவும் புவியினி லொருவன் னநுபவ மொருவன் மனதினி லுதியாதே**
**மதியுங் கெடுகிற துயில்கொண் டாநந்த மயனன் றோசுக முறுகின்றான்**
**இதுவிஞ் ஞான மயனது சிந்தையி னினைவாய் வந்திட லழகன்றே**
**சுதைவிண் ணோர்புகழ் குருவே நீரிது சொல்லீர் சகலமும் வல்லீரே. (126)**

உதவும் புவியினில் ஒருவன் அநுபவம்,ஒருவன் மனதினில் உதியாதே;
மதியும்கெடுகிற துயில்கொண்டு, ஆநந்தமயன் அன்றோ! சுகம் உறுகின்றான்;
இது விஞ்ஞானமயனது சிந்தையில், நினைவாய் வந்திடல் அழகன்றே!
சுதைவிண்ணோர் புகழ் குருவே!நீர் இது சொல்லீர்! சகலமும் வல்லீரே.

உலகில், ஒருவன் அனுபவம் மற்றொருவன் மனதில் உண்டாகாதே! மனோமய கோசத்தோடு விஞ்ஞானமய கோசமும் சுழுத்தியில் நாசமாகி விட, ஆனந்தமயன் தானே உறக்கத்தை அடைந்து சுகம் அனுபவிக்கின்றான். ஆனந்தமயன் அடையும் சுகம் விழித்தெழுந்த பின்பு சுகமாய் உறங்கினேன் என்று விஞ்ஞான மயனாகும் கர்த்தாவின் மனதில் நினைவாக வருகின்றது என்று சொல்வது பொருத்தமானதாகத் தோன்றவில்லையே!. தேவர்களாலும் போற்றத்தக்க குருவே! நீர் சகலமும் வல்லவர். இந்த சந்தேகம் போக அருளுவீர்.

**நெய்யும் வெண்ணெயு மிருபேர் களுமறி நினைவிற் பிறிவறி வினிலில்லை**
**செய்யுந் நனவினி லிறுகும் மனதொடு சேருஞ் சின்மய விஞ்ஞானன்**
**நையுந் துயர்மன நழுவும் பொழுதுணர் ஞானச் சுகமுணு மாநந்தன்**
**பெய்யுந் துளிகளு நீருங் குளமொடு பாகும் போலிவர் பிறிவன்றே. (127)**

நெய்யும், வெண்ணெயும் இருபேர்களும், அறி நினைவில் பிறிவு;அறிவினில்இல்லை;
செய்யும் நனவினில்,இறுகும் மனதொடு சேரும் சின்மய விஞ்ஞானன்,
நையும் துயர் மன(ம்) நழுவும் பொழுது, (உ)ணர் ஞானச் சுகம்உ(ண்)ணும் ஆநந்தன்;
பெய்யும் துளிகளு(ம்)-நீரும், குளமொடு-பாகும் போல் இவர் பிறிவு அன்றே.

உருக்கின நெய்யும், உருக்காத வெண்ணெயும் வடிவில் வேறாக இருந்தாலும் சுவையில் ஒன்றே என்பது போல, ஆனந்தமயன் விஞ்ஞானமயன் என்னும் இருபேர்களும் அவித்தை, அந்தக்கரண விருத்தி என்ற கோணங்களில் காணும்போது உபாதி பேதத்தால் இரண்டாகத் தெரிகின்றது. பலவித வியவகாரங்களையும் செய்கின்ற நனவில் தூலமான அந்தக்கரண உபாதியோடு கூடுகின்ற சின்மயனான விஞ்ஞானமயன், அந்தக்கரணம் நித்திரையைச் சேரும்போது அவித்தியா விருத்தியால் பிரமானந்தத்தை அனுபவிக்கின்ற ஆனந்தமயன் என்று சொல்லப்படுவன். மேகம் சொரிகின்ற மழைத் துளிகளும், கடல் முதலியவற்றில் உள்ள நீரும் போலவும், வெல்லமும் பாகும் போலவும் இவர் வேறல்லர் என்று அறிவாய்.

**ஒன்றா கியபிர மாநந் தச்சுக மொழிவா னேன்வெளி வருவானேன்**
**என்றான் முன்செய்த கருமம் வெளியினி லிழுக்குஞ் சுழுத்திவிட் டெழுந்தோனும்**
**நன்றா யினசுக மகலான் வெளியிலு நடவான் மறதியும் பெறமாட்டான்**
**அன்றா மெனவிருந் துறங்குஞ் சிலகண மதுவே வாதனை யாநந்தம். (128)**

ஒன்றாகிய பிரமாநந்தச் சுகம் ஒழிவான் ஏன்? வெளி வருவான் ஏன்?என்றால்,
முன் செய்த கருமம் வெளியினில் இழுக்கும்;சுழுத்தி விட்டு எழுந்தோனும்,
நன்றாயின சுகம் அகலான்;வெளியிலும் நடவான்; மறதியும் பெறமாட்டான்;
அன்றாம் என இருந்து (உ)றங்கும் சில கணம், அதுவே வாதனையாநந்தம்.

ஆனந்தமயனான சீவன் ஏகமாகிய பிரமானந்தத்தை தியாகம் செய்வது எதனால்? வெளியே விழிப்புக்கு வருவது ஏன்? என்றால் முன்னாளில் செய்த கர்மம் அவன் அனுபவித்து இருந்த பிரமானந்தத்தையும் விட்டு வெளியே விழிப்புலகிற்கு இழுக்கும். சுழுத்தியை விட்டு விழித்து எழுந்தவனும் கொஞ்ச நேரம் வெளியே எழுந்து போகாதவன், ஆழ்துயிலில் அனுபவித்த சுகத்தை மறக்கவும் மாட்டான். சில கணம் அவ்வாறு சுழுத்தியிலும் இல்லாமல் விழிப்பிலும் இல்லாத(தூஷ்ணீம்)நிலையில் அனுபவித்த சுகத்தை நினைத்தல் வாசனானந்தம்.

**அந்தக் கணமுட லகமென் றிடர்களி லலைந்தே சுகந்தனை மறந்தேபோம்**
**முந்தைச் செயும்வினை சுகதுக் கந்தரு மோனம் முறுநடு வடிவிற்காண்**
**எந்தப் புருடனு மொருசிந் தையுமற விருந்தே னெனலநு பவமாகும்**
**இந்தப் படிதனு தாசீ னச்சுக மிதுவே நிசமெனு மாநந்தம். (129)**

அந்தக் கணம் உடல், அகம் என்று, இடர்களில் அலைந்தே, சுகம் தனை மறந்தே போம்;
முந்தைச் செ(ய்)யும் வினை சுக துக்கம் தரு(ம்); மோனம்உறு நடு வடிவில் காண்;
எந்தப் புருடனும் ஒரு சிந்தையும் அற இருந்தேன்; எனல் அநுபவமாகும்;
இந்தப்படி, தன் உதாசீனச் சுகம், இதுவே நிசம் எனும் ஆநந்தம்.

அந்தக்கணம் கழியத் தொடங்கி 'தேகமே தாம்' என்று அபிமானம் அடைந்து துக்கங்களில் உழன்று, சுழுத்தியில் அனுபவித்த பிரமானந்தம் கொஞ்ச நேரத்தோடு மறந்தே போகும். முன் சென்மங்களில் செய்த புண்ணிய பாவங்கள் சுக துக்கமாகிய இரண்டையும் தரும். சுக துக்கங்களின் நடுவில் உதாசீனம் என்னும் (தூஷ்ணீம்) நிலை உண்டாம். எப்புருஷனும் எந்த ஒரு சிந்தனையும் இன்றி இருந்தேன் என்று சொல்லுவதே அனுபவம் ஆகும். இந்தப்படிக்கு உதாசீனகாலத்தில் தோன்றுகின்ற இந்த ஆனந்தமே நிஜானந்தம்.

**நிசமா னதுமுக் கியமோ குடத்துள நீரன் றேவெளி யீரந்தான்**
**வசமா வகங்கார மறைந்தா னிசமது படிந்தான் முக்கிய வகையாகும்**
**திசையார் திரிசய மறியா தேதுயில் செறியா தேயுட றறிபோல**
**அசையா தேமதி சமமா கியநிலை யதுதான் முக்கிய வாநந்தம். (130)**

நிசமானது முக்கியமோ? குடத்து(உ)ள்)ள நீர் அன்றே; வெளி ஈரந்தான்;
வசமா(ய்) அகங்கார(ம்) மறைந்தால் நிசம்;அது படிந்தால் முக்கிய வகை ஆகும்;
திசையார் திரிசயம் அறியாதே; துயில் செறியாதே; உடல் தறி போல
அசையாதே;மதி சமமாகிய நிலை; அதுதான் முக்கிய ஆநந்தம்.

பெயர், வடிவங்களால் ஆன பொருள்களில் மனம் செல்லாது, 'நான் இருக்கின்றேன்' என்னும் சாமானிய அகங்காரத்தின் வசமாய் பிரமானந்தம் மறைவுற்றால், அந்த உதாசீன காலத்தில் விளங்கும் ஆனந்தம் நிஜானந்த வாசனையாம். அதனால் அந்த நிஜானந்த வாசனை முக்கிய நிஜானந்தம் ஆகாது. முக்கிய ஆனந்தத்தினும் வேறாக வாசனானந்தம் உண்டென்பதற்கு உதாரணம்– நீர் நிரம்பிய குடத்தின் வெளியே புறத்தில் இருக்கின்ற ஈரம் குளிர்ச்சி அக்குடத்தின் தண்ணீர் ஆகாதது போலவாம். சஞ்சலம் அற்று அகண்ட பூரணமாய் சித்தம் ததாகாரம் ஆகின்ற சமாதி யோக அப்பியாசத்தால் அந்த அகங்காரம் நீங்கினால் முக்கிய நிஜானந்தம் உண்டாகும். அகங்காரமானது எல்லா திசைகளிலும் உள்ள அறியப்படும் பொருள்களை மறந்து, நித்திரையை அடையாமல், சரீரம் கம்பத்தைப் போல் அசையாமல் இருக்கப் பிரம்மத்தின் தொடர் நினைவு மட்டுமே இருக்குமாயின் முக்கிய நிஜானந்தம்.

**மனுடன் மனுடகந் தருவன் றேவநன் மாகந் தருவனொண் பிதிரோடே**
**பனுமா சானர்கள் கருமத் தேவர்கள் பகர்முக் கியரிந் திரனாசான்**
**கனமார் பிரசா பதியென் விராட்டுப்பொன் கர்ப்பப் பிரமனென் றின்னோர்கள்**
**பினவா நந்தங்க ணுரையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மாநந்தம். (131)**

மனுடன்,மனுடகந்தருவன், தேவ நன் மா கந்தருவன்.ஒண்பிதிரோடே,
பனும்ஆஜானர்கள், கருமத் தேவர்கள்,பகர் முக்கியர்,இந்திரன், ஆசான்,
கனமார் பிரசாபதி என் விராட்டு,பொன் கர்ப்பப் பிரமன் என்று, இன்னோர்கள்
பி(ன்)ன ஆநந்தங்கள் நுரையாம்; பிரளய வெள்ளக் கடல் பிரமாநந்தம்.

1.மனுடன் (சார்வ பௌமன்) 2.மனுட கந்தர்வன் 3.தேவ கந்தர்வன் 4.பிதிரர் 5. ஆஜான தேவர் 6.கருமத்தேவர் 7. முக்கியத் தேவர் 8. இந்திரன் 9.பிருகஸ்பதி 10.பிரஜாபதி என்னும் விராட்டு 11.இரணியகருப்பன் என்னும் பிரமன் என்று தைத்திரிய உபநிடதம் கூறும் இப்பதினோரு பேர்களும் ஒருத்தருக்கு ஒருத்தர் நூறு நூறு பங்கு அதிகமாகப் பெற்றிருக்கும் ஆனந்தங்கள் முக்கியானந்தமாகிய பிரமானந்தத்தின் நுரை, நீர்க்குமிழி போல்வனவாம். பிரமானந்தம் பிரளய கால வெள்ளம் போன்றது ஆகும்.

**எவனா கிலுமிந்தத் துரியா தீதத்தி லேழாம் பூமியி லிருந்தானேல்**
**அவனா ரதன்சுகன் சிவன்மா லயன்முத லறிவோ ரநுபவ சுகபோதன்**
**விவகா ரதிர்சய மிதுவே யநுபவ மெனமுன் சொல்லிய விவகாரி**
**உவமா னமுமறி மகனே யவனடி யுதிரும் பொடிகளென் முடிமேலே. (132)**

எவனாகிலும், இந்தத் துரியாதீதத்தில் ஏழாம் பூமியில் இருந்தானேல்,
அவன் நாரதன்,சுகன்,சிவன்,மால்,அயன் முதல் அறிவோர் அநுபவ சுக போதன்;
விவகார அதிர்சயம், இதுவே அநுபவம் என,முன் சொல்லிய விவகாரி
உவமானமும் அறி மகனே ! அவன் அடி உதிரும் பொடிகள் என் முடி மேலே.

யாராக இருந்தாலும் இந்த துரியாதீதம் என்னும் ஏழாம் பூமியில் இருப்பவன் என்றால், அவன், நாரதன், சுகன், சிவன், மால், அயன் முதலானவர்களின் அனுபவமாகிய அறிவானந்த வடிவம் ஆவான். தவிரவும், தொய்வு, நித்திரை இல்லாத இந்நிலையே முக்கிய நிசானந்த அனுபவமாம் என்று முன்னே கூறிய முக்கிய நிசானந்தத்தை அனுபவிப்பனுக்கு நாரதன் முதலானோர் உவமானமும் ஆவர் மகனே! நீ அறிவாய். அவன் பாதத்திலிருந்து உதிர்கின்ற துகள்கள் என் சிரசின் மீது வைத்து தாங்கிக்கொள்ளத் தகுதியுடையதாகும்.

**இந்தவா றைந்துசுகஞ் சொல்லினோம் வித்தைசுக மினிமேற் சொல்வோம்**
**முந்தமா யையுஞ்சச்சி தாநந்தப் பொருளுமே மொழியும் போதில்**
**அந்தமா மத்துவித சுகமான்ம சுகமிரண்டு மங்கே சொன்னோம்**
**தொந்தமாற் றியமகனே யின்னமுனக் கையமுண்டேற் சொல்லு வாயே.(133)**

இந்தவாறு ஐந்து சுகம் சொல்லினோம்;வித்தை சுகம் இனிமேல் சொல்லுவோம்;
முந்த மாயையும்,சச்சிதாநந்தப் பொருளுமே மொழியும் போதில்,
அந்தமாம் அத்துவித சுகம்,ஆன்ம சுகம் இரண்டும் அங்கே சொன்னோம்;
தொந்த(ம்) மாற்றிய மகனே!இன்னம் உனக்கு ஐயம் உண்டேல் சொல்லுவாயே.

இவ்வாறு ஐந்து வகை ஆனந்தங்களையும் கூறினோம். வித்தியானந்தத்தை இனிமேல் சொல்வோம். முன்னே மாயையின் இலக்கணத்தையும், சச்சிதானந்த பதங்களின் அர்த்தத்தையும் கூறும்பொழுது முடிந்த முடிவாகிய அத்துவித ஆனந்தம் ஆன்மானந்தம் ஆகிய இரண்டையும் அங்கே சொன்னோம். பிரம அனுபூதி பயிற்சி வலிமையால் சுகதுக்கங்களின் வலியைப் போக்கிய மைந்தா! இன்னமும் உனக்குச் சந்தேகம் இருப்பின் கேட்டறிவாய்.

**குகன்றனையு மெனையுமுல கினையுமீன் றளித்தருளுங் குருவேகேளீர்**
**புகன்றசச்சி தாநந்தப் பதங்கடனித் தனியாகிப் பொருள்வே றானால்**
**உகண்டமன முறைப்பதெங்ஙன் பரியாய பதங்களைப்போ லுறவு காணேன்**
**அகண்டமா யொருசுவையாய்த் தேனிக்கூட் டியமதுவா யறிவிப் பீரே. (134)**

குகன் தனையும், எனையும்,உலகினையும் ஈன்று, அளித்து,அருளும் குருவே கேளீர்!
புகன்ற சச்சிதாநந்தப் பதங்கள்,தனித் தனியாகி, பொருள் வேறானால்,
உகண்ட மனம் உறைப்பது எங்ஙன்? பரியாய பதங்களைப் போல் உறவு காணேன்;
அகண்டமாய், ஒரு சுவையாய், தேனிக் கூட்டிய மதுவாய் அறிவிப்பீரே.

சுப்பிரமணியக் கடவுளையும் என்னையும் உலகையும் படைத்து அளித்தருளும் குருவே! சச்சிதானந்த சுபாவங்கள் ஆன்மாவின் வடிவு என்று முன்னே உரைத்தருளிய சத்து, சித்து, ஆனந்தம் என்னும் மூன்று சொற்களும், குடம், துணி என்னும் சப்தங்களைப் போல் வேறு வேறாகி தம்முள் அர்த்த பேதம் உடையனவாய் இருக்குமாயின், ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்திற்குத் தாவி சஞ்சலப்படுகின்ற மனம் ஆன்ம சொருபத்தில் அழுந்துவது எப்படி? ஒரே அர்த்தமுடைய பல சொற்களைப் போல் தொடர்பும் காணேன். அகண்டமாய் ஒரு சுவையாக தேனீக்கள் பல பூக்களிலிருந்து சேர்த்த தேன் போல அறிவிப்பீர்.

**குளிரிலகல் வெண்மையென்ற பதங்களினா னீர்மூன்று கூறா யிற்றோ**
**ஒளிதவனஞ் செம்மையென்ற பதங்களா லக்கினியு மொருமூன் றாமோ**
**வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட ரெனப்பிரித்து விலக்கி வேதம்**
**எளிதறிய முரண்மொழிந்த சத்தாதி யெனும்பிரம மேகந் தானே. (135)**

குளிர்,இலகல்,வெண்மை என்ற பதங்களினால், நீர் மூன்று கூறு ஆயிற்றோ?
ஒளி,தவனம், செம்மை என்ற பதங்களால், அக்கினியும் ஒரு மூன்றாமோ?
வெளி முதலாம் சகம் அசத்து, மூடம், இடர் எனப் பிரித்து விலக்கி,
வேதம் எளிதறிய முரண் மொழிந்த,சத்தாதி எனும் பிரமம் ஏகம் தானே.

குளிர்ச்சி-நெகிழ்ச்சி-வெண்மை என்னும் பதங்களால் நீர் முன்று பொருளாக ஆனதோ? பிரகாசம்-உஷ்ணம்-சிவப்பு என்னும் பதங்களால் அக்கினி முன்று பொருளாக ஆனதோ? ஆகவில்லை அல்லவா! அதுபோல் சத்-சித்து-ஆனந்தம் என்று சொல்லும் பதங்களால் ஆத்மாவும் முன்று கூறு ஆவதில்லை. ஆகாய முதல் அகங்காரம் வரையிலான பிரபஞ்சங்கள், அசத்து, சடம், துக்கங்கள் எனப் பிரித்து ஒழித்து எளிதாக அறியும் பொருட்டு அசத்து சட துக்கங்களுக்கு மாறாக வேதம் கூறிய சச்சிதானந்தம் என்னும் சத்தத்தின் அர்த்தமாகிய பிரமம் ஏகம் அதாவது ஒன்று தானே.

**நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதாநஞ் சாந்தம்**
**சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடத்தன் சாட்சி போதம்**
**சுத்தமிலக் கியஞ்சநா தநஞ்சீவன் தத்துவம்விண் சோதி யான்மா**
**முத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம் விதிகுணங்கண் மொழியும் வேதம். (136)**

நித்தியம்,பூரணம், ஏகம், பரமார்த்தம், பரப்பிரம்ம(ம்), நிதானம், சாந்தம்,
சத்தியம், கேவலம், துரியம், சமம் ,திருக்கு, கூடத்தன், சாட்சி, போதம்,
சுத்தம்,இலக்கியம், சநாதனம், சீவன், தத்துவம் ,விண், சோதி, ஆன்மா,
முத்தம், விபு ,சூக்குமம் என்று இவ்வண்ணம், விதி குணங்கள் மொழியும் வேதம்.

நித்தியம், பூரணம், ஏகம், பரமார்த்தம், பரப்பிரமம், நிதானம், சாந்தம், சத்தியம், கேவலம், துரியம், சமம், திருக்கு, கூடத்தன், சாட்சி, போதம், சுத்தம், இலக்கியம், சனாதனம், ஜீவன், தத்துவம், விண், சோதி, ஆன்மா, முத்தம், விபு, சூக்குமம் என்று இவ்வாறு ஆத்மாவின் விதிமுக விசேஷணங்களை வேதம் கூறும்.

**அசலநிரஞ் சநமமிர்த மப்பிரமே யம்விமலம் வசநா தீதம்**
**அசடமநா மயமசங்க மதுலநிரந் தரமகோ சரம கண்டம்**
**அசமநந்த மவிநாசி நிர்க்குணநிட் களநிரவ யவம நாதி**
**அசரீர மவிகார மத்துவித மெனவிலக்கா மநேக முண்டே. (137)**

அசலம்,நிரஞ்சனம்,அமிர்தம்,அப்பிரமேயம்,விமலம்,வசநாதீதம்,
அசடம் ,அநாமயம் ,அசங்கம். அதுலம்,நிரந்தரம், அகோசரம், அகண்டம்,
அசம்,அனந்தம் ,அவிநாசி ,நிர்குண(ம்),நிட்கள(ம்), நிரவயவம், அநாதி,
அசரீரம், அவிகாரம், அத்துவிதம் என, விலக்காம் அனேகம் உண்டே.

அசலம், நிரஞ்ஞனம், அமிர்தம், அப்பிரமேயம், விமலம், வசனாதீதம், அஜடம், அநாமயம், அசங்கம், அதுலம், நிரந்தரம், அகோசரம், அகண்டம், அசம், அநந்தம், அவிநாசி, நிர்க் குணம், நிட்களம், நிரவயவம், அநாதி, அசரீரம், அவிவகாரம், அத்துவிதம் என்று இவ்வாறு அளவிறந்த விலக்கு குணங்களையும் அதாவது மறைமுக விசேஷணங்களையும் கூறும்.

**இன்னவகை விதிவிலக்குக் குணங்க ணன்றாய்ச் சேர்ந்தொருமித் தெல்லாங்**
**கூடிச் சொன்னபொரு ளொன்றன்றி யிரண்டில்லை யொருபொருளைச் சொல்லுஞ்**
**சொற்கள்பின்னபத மாமதனாற் சத்தாதி குணப்பொருளாம் பிரம மேகம்**
**அன்னபொரு ளொருமையறிந் தகண்டபரி பூரணமா யாவாய் நீயே. (138)**

இன்னவகை விதி, விலக்குக் குணங்கள், நன்றாய்ச் சேர்ந்து, ஒருமித்து,எல்லாம் கூடி, சொன்ன பொருள் ஒன்றன்றி இரண்டு இல்லை, ஒரு பொருளைச் சொல்லும் சொற்கள்; பின்ன பதமாம்; அதனால் சத்தாதி குணப் பொருளாம் பிரமம் ஏகம்; அன்ன பொருள் ஒருமை அறிந்து,அகண்ட பரிபூரணமாய் ஆவாய் நீயே.

இப்படி பலவிதமாகச் வேதங்கள் கூறுகின்ற விதி விலக்கு குணங்கள் நன்றாகச் சேர்ந்து ஒருமித்து முழுதும் திரண்டு சொல்லிய வஸ்துவானது ஒன்றே அன்றி இரண்டல்ல. அகண்டமான பிரமத்தைச் சொல்கின்ற சொற்கள் தத்தமக்குள் வேறுபட்ட சத்தங்கள் ஆம். ஆனால் சத்து-சித்து-ஆனந்தம் என்னும் விசேடணத்தை உடைய வஸ்துவாகிய பிரமம் ஏக வடிவாம். அத்தன்மையான பிரமத்தின் ஏகத்தன்மையை உணர்ந்து அகண்ட பரிபூரணமாவாய் நீயே.

**நிற்குணவத் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியென நிகரென் னாதே**
**சற்குணனே வத்துநிலை யுரையாம லறியவல்ல சதுர ருண்டோ**
**நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப் பிரம்ம ஞானந் தோன்றச்**
**சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களன்று பிரமமாஞ் சொரூபந் தானே. (139)**

நிற்குண வத்துவின் குணங்கள் உரைப்பது,தாய் மலடியென(ல்) நிகர் என்னாதே; சற்குணனே! வத்துநிலை உரையாமல், அறியவல்ல சதுரர் உண்டோ? நற்குண வேதங்கள், இந்தச் சீவன் முத்தி பெற,பிரம்ம ஞானம் தோன்ற, சொற்குணங்கள் பிரமத்தின் குணங்கள் அன்று; பிரமமாம் சொரூபந்தானே.

நிர்க்குண வஸ்துவின் குணங்களைக் கூறுவது, தாய் மலடி என்ற சொல்லுக்கு நிகராகி விடுமோ என்று சந்தேகப்படாதே. நற்குணங்களை உடையவனே! வஸ்துவின் குணங்களைக் கூறாமல் வஸ்துவை அறிகின்ற சாமர்த்தியம் உடைய திறன்கொண்டவர் உளரோ? கருணையுடைய வேதங்கள் இந்த சீவன் முத்தி பெற பிரம ஞானம் தோன்றக் கற்பிக்கின்ற குணங்கள் பிரமத்தின் குணங்கள் அன்று, பிரமத்தின் சொருபமே.

**மோகவிருள் கெடக்கோடி யருணனென வருகுருவே மொழியக் கேளீர்**
**ஏகபரி பூரணமா மென்சொரூப மென்னுளத்தி லிறுகும் வண்ணம்**
**ஆகமங்கள் சொன்னபடி யென்னையகண் டார்த்தமா வறிந்தே னையா**
**ஊகமுமொத் திடவுரைத்தாற் பசுமரத்தி லாணிபோ லுறைக்கு நெஞ்சே. (140)**

மோக இருள் கெட,கோடி அருணன் என வரு(ம்) குருவே! மொழியக் கேளீர் !
ஏக பரிபூரணமாம் என் சொரூபம், என் உ(ள்)ளத்தில் இறுகும் வண்ணம்
ஆகமங்கள் சொன்னபடி, என்னை அகண்டார்த்தமா(ய்) அறிந்தேன் ஐயா!
ஊகமும் ஒத்திட உரைத்தால் பசு மரத்தில் ஆணி போல் உறைக்கும் நெஞ்சே.

அஞ்ஞான இருள் நாசமாக கோடி சூரியன் போல் எழுந்தருளும் குருவே! சொல்வதைக் கேட்பீர். ஏக பரிபூரணமாய் என் சொரூபம் என் உள்ளத்தில் அழுந்தும் படி சுருதிகள் கூறியவாறு என்னை அகண்டமாக அறிந்தேன். ஐயா! உத்தியும் (ஊகமும்) ஒத்துவர அருளிச் செய்தால் பசுமரத்து ஆணி போல் அனுபூதியில் மனம் அழுந்தும்.

**சத்தேசித் தாகுமய லெனிலசத்தா மசத்தானாற் சாட்சி யெங்கே**
**சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக்குத் திதியு மில்லை**
**ஒத்தேதோன் றியசத்துஞ் சித்துநல்ல சுகமாகு மூகத் துக்கோர்**
**வித்தேயன் னியமாகிற் சடமசத்தாஞ் சுகாநுபவம் விளைந்தி டாதே. (141)**

சத்தே சித்தாகும்; அயல் எனில் அசத்தாம்; அசத்தானால் சாட்சி எங்கே?
சித்தே சத்தாகும்; அயல் எனில் சடமாம்; சடங்களுக்குத் திதியும் இல்லை;
ஒத்தே தோன்றிய சத்தும், சித்தும் நல்ல சுகமாகும்; ஊகத்துக்கு ஓர் வித்தே;
அன்னியமாகில் சடம், அசத்து ஆம்; சுக அநுபவம் விளைந்திடாதே.

சத்தே சித்தாக விளங்குகின்றது. சத்திற்குச் சித்து வேறுபட்டதாக இருக்குமாயின், அப்போது சித்திற்கு இருப்பு இன்மையால் முயல்கொம்பு போல் அசத்தாகிவிடும். அவ்வாறு அசத்து ஆவதாலும், தன்னை அறியுந் தன்மையும் இருக்காது என்பதாலும் அது எவ்வாறு சாட்சியாக இருக்கும்? இருப்புத்தன்மையே (சத்து) இல்லாத சித்து சாட்சியாவது பொருந்தாது. ஆதலால் சத்தே சித்தாகும். எவ்வாறு சத்தே சித்தாய் இருக்கின்றதோ அவ்வாறே சித்தும் சத்தாய் இருக்கின்றது. சித்திற்குச் சத்து வேறுபட்டதாயின் அப்போது சத்திற்கு விளக்கம்-விளங்கும் தன்மை இருக்காது. அது குடம், துணி போல சடமாம். சடப் பொருள்களுக்குக் கயிற்றில் பாம்பு போல் இருப்பு இல்லாததால் சித்தே சத்தாகும். இவ்வாறு தம்முள் உத்திக்கு முரணாகாமல் ஒத்தே தோன்றிய சத்தும் சித்தும் பூரண ஆனந்தம் ஆகும். சத்திற்கும் சித்திற்கும் ஆனந்தம் வேறுபட்டதாக இருந்தால் அப்போது ஆனந்தத்திற்கு இருப்புத் தன்மையும் விளங்கும் தன்மையும் இல்லாது போக அது அசத்து ஜடமும் ஆகிவிடும். அசத்து ஜடங்களால் சுகானுபவம் உண்டாகாது. ஆதலால் சத்தும் சித்தும் ஆனந்தமாம். சச்சிதானங்களின் ஒருமையை ஆராய்ந்து அறிவதற்கு இந்த உத்தியே தலையாய உத்தியாம்.

**வீயாத சத்துமுன்னம் விளங்குவது தன்னாலோ வேறொன் றாலோ**
**வாயால்வே றெனிலதுவு மசத்தோசத் தோவசத்தேன் மலடி மைந்தன்**
**பேயாகா ரியஞ்செயுமோ சத்தெனவிப் படியதையும் பிரித்துச் சொன்னால்**
**ஓயாத வவத்தையாங் குதர்க்கவிகற் பங்களைவிட் டொழிந்தி டாயே (142)**

வீயாத சத்து, முன்னம் விளங்குவது தன்னாலோ? வேறு ஒன்றாலோ?
வாயால் வேறு எனில்,அதுவும் அசத்தோ?சத்தோ?அசத்தேல் மலடி மைந்தன்
பேயா காரியம் செ(ய்)யுமோ? சத்து என,இப்படி அதையும் பிரித்துச் சொன்னால்,
ஓயாத அவத்தையாம்; குதர்க்க, விகற்பங்களை விட்டு ஒழிந்திடாயே.

முக்காலத்தும் பொய் என்று நிச்சயிக்க முடியாத சத்து விளங்குவது தீபம் போன்று தன்னாலேயா? குடம் போன்று மற்றொன்றின் உதவியினாலா? அந்த சத்து, குடம் போன்று பிறவற்றால் விளங்குகிறது என்றால் சத்திற்கு வேறான அதுவும் சத்தா? அசத்தா? அசத்து என்று வாயினால் சொன்னால், மலடி மகன் ஒரு காரியம் செய்வது உண்டா? அசத்து மலடி மகன் போன்றது ஆகலின் அதனால் சத்து விளங்குகின்றது எனல் பொருந்தாது. சத்து என்று இவ்வாறு அதனையும் பிரித்துக் கூறினால் அது வரம்பின்றி அனவஸ்தா தோஷம் ஆகும். ஆதலால் பேய் அலைவது போல் அலையும் புத்தியுள்ள மகனே! குதர்க்கமாகிய விகற்பங்களை விட்டொழிந்திடுவாய்.

**சுருதியுத்தி யொத்ததுபோ லநுபவமுங் கேள்சுழுத்திச் சுகவா நந்தம்**
**மிருதிவடி வாதலிலவ் வாநந்த மேயறிவாம் வேறங் கில்லை**
**கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருந்திருளைக் காண்கின் றாயே**
**இருதயத்திப் படிநோக்கி யேகபரி பூரணமா யிருந்தி டாயே. (143)**

சுருதி, யுத்தி ஒத்தது போல் அநுபவமும் கேள்; சுழுத்திச் சுக ஆநந்தம்;
(ஸ்)மிருதி வடிவு; ஆதலில், அவ்வாநந்தமே அறிவாம்; வேறு அங்கில்லை;
கருது பிரளயம்,சுழுத்தி இரண்டிலு(ம்),நீ இருந்து, இருளைக் காண்கின்றாயே;
இருதயத்து இப்படி நோக்கி, ஏக பரிபூரணமாய் இருந்திடாயே.

சச்சிதானந்தம் தம்முள் வேறுபடாமல் அகண்ட அர்த்தமாக இருப்பதில் சுருதி, உத்தி ஒத்துப் போவது போல், அனுபவமும் ஒத்துப்போவதைக் கேட்பாய். சுழுத்தியில் சுக சொருபமாகிய ஆனந்தமானது அங்கே அஞ்ஞானத்தைப் பிரகாசமாகக் காட்டிக் கொண்டிருந்து விழித்தெழுந்தபோது ஒன்றும் அறியாமல் சுகமாய் இருந்தேன் என்னும் நினைவு வடிவாக உதித்தலால், அந்த ஆனந்தமே சித்தாகும். அந்த சுழுத்தியில் ஆனந்தத்தைத் தவிர பிரகாசம் வேறில்லை. கருதுகின்ற பிரளயமும் சுழுத்தி இரண்டிலும் நீ இருந்தே அஞ்ஞானமாகிய இருளைக் காண்கிறாய். உன் இருதயத்தில் இவ்வாறு நாடி, ஏக பரிபூரணமாக பிரமமாக இருப்பாய்.

**பலகலையு முணர்ந்த குரு மொழிந்தபடி யிவனுமநு பவம்வி டாமல்**
**பலமலரின் மதுப்போலச் சச்சிதா நந்தமொன்றாம் பரமார்த் தத்தைப்**
**பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந் தான்விழித்துப் பார்த்த போது**
**பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமா னானே. (144)**

பல கலையும் உணர்ந்த குரு மொழிந்தபடி, இவனும் அநுபவம் விடாமல்,
பல மலரின் மதுப் போல, சச்சிதாநந்தம் ஒன்றாம் பரமார்த்தத்தை,
பல பொழுதும் கண்மூடி,சமாதி இருந்தான்;விழித்துப் பார்த்த போது,
பல வடிவாம் சர அசர சித்திரங்கள் எல்(ல்)லாம்,தோன்றும் ஒரு படம் ஆனானே.

பல ஞானநூல்களையும் உணர்ந்த குரு உரைத்தபடி இவனும் அனுபவத்தை விடாமல் மேற்கொண்டு, பல மலர்களில் இருந்து சேகரிக்கப்பட்ட தேன் போல சச்சிதானந்தங்கள் அகண்டமாகிய பரமார்த்தத்தை—உண்மை நிலையை பலகாலும் கண்மூடிச் சமாதியில் இருந்தான். பின்னர் விழித்துப் பார்த்த போது அநேகவிதமான சராசரங்களாகிய சித்திரங்கள் அனைத்தும் தோன்றும் ஒரு திரையைப் போல் பிரமம் ஆனான்.

**இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே வினோதமன்றி யினிவே றுண்டோ**
**அதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றோ ஞானிகளுக் கான நீதி**
**முதலுரைத்த துரியாதீ தமுமேழாம் பூமியுமுக் கியமா மென்ற**
**பதமுமதன் வகையுமெனக் கெளிதாகத் தெளியும்வண்ணம் பணித்தி டீரே. (145)**

இதயம் ஒத்த சற்குருவே! நமக்கு இதுவே வினோதமன்றி,இனி வேறுண்டோ?
அதை உரைத்தும்,அதை நினைத்தும்இருப்பதன்றோ? ஞானிகளுக்கான நீதி;
முதல் உரைத்த துரியாதீதமும்,ஏழாம் பூமியு(ம்) முக்கியமாம் என்ற பதமும்,
அதன் வகையும் எனக்கு எளிதாகத் தெளியும் வண்ணம் பணித்திடீரே.

என் மனதிற்கு ஒத்த குருவே! பிரமத்தின் தொடர்நினைவு உண்டாவதற்குக் காரணமான வேதாந்த விசாரம் இதுவே வினோதம். இதைத் தவிர செய்வதற்குத் தகுந்த வேறொரு விசாரம் உண்டோ? ஆர்வம் உள்ளவர் வந்தால் அந்தப் பிரம விசாரத்தை உபதேசித்தும், தனித்திருக்கில் அதைத் தானே சிந்தித்தும் இருப்பதல்லவா ஞானிகளுக்கான நியாயம்! ஆதலால் முன்னே கூறிய துரியாதீதமும், ஏழாம்பூமியும் முக்கியமாகும் என்று சொல்லிய பதமும் அதன் வகைகளையும் எனக்கு எளிதாகத் தெளியும் வண்ணம் அருளுவீர்.

**வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூ மிகளே ழென்பார்**
**இனியவற்று ளஞ்ஞான பூமிகளே ழையுமுந்தி யியம்பக் கேளாய்**
**தனிவித்துச் சாக்கிரஞ்சாக் கிரமகா சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த**
**கனவுகனாக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென்றெழுபேர் கணித்தார் மேலோர்.(146)**

வினவுமிடத்து, அஞ்ஞான பூமிகள் ஏழ்; ஞான பூமிகள் ஏழ் என்பார்;
இனி அவற்றுள் ,அஞ்ஞான பூமிகள் ஏழையு(ம்), முந்தி இயம்பக் கேளாய்;
தனி வித்து,சாக்கிரம்,சாக்கிர மகா சாக்கிரம், சாக்கிரத்தைச் சார்ந்த கனவு,
கனா, கனவு சாக்கிரம்,சுழுத்தி என்று எழு பேர் கணித்தார் மேலோர்.

கேள்வி கேட்டு ஆராயும் போது, அஞ்ஞான பூமிகள் ஏழுவகை, ஞானபூமிகள் ஏழுவகை என்பர். இனி அவைகளில், ஏழு அஞ்ஞான பூமிகளையும் முதலில் சொல்கிறோம். 1.தனி வித்து சாக்கிரம் [கலப்பில்லாத பீஜ-(வித்து)-சாக்கிரம்] 2.சாக்கிரம் 3.மகா சாக்கிரம் 4.சாக்கிர சொப்பனம். 5.சொப்பனம்(கனவு) 6.சொப்பன சாக்கிரம் 7.சுழுத்தி என்று ஏழு பெயர்களால் பெரியோர்கள் அழைத்தனர்.

**முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல்வித் தாகும்**
**இந்தவறி விற்பண்டில் லாவகந்தை முளைபோலா மிதுந னாவாம்**
**வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகாந னாவாம்**
**நந்துமகங் கொடுநனவின் மனோராச்சி யஞ்செயலே நனாக்க னாவே. (147)**

முந்த அகண்டத்து எழும்,ஓர்அறிவு மாத்திரம்,அதுதான் முதல் வித்தாகும்;
இந்த அறிவில்,பண்டு இல்லா அகந்தை முளை போலாம்,இது நனாவாம்;
வந்து வந்து,பிறவிதொறும் அகம், மமதை வளரும்; அது மகா நனாவாம்;
நந்தும் அகம் கொடு நனவில் ,மனோராச்சியம் செயலே, நனாக் கனாவே.

1.சிருஷ்டியின் ஆரம்பத்தில் அல்லது ஜாக்கிரத்தி(நனவி)ன் ஆரம்பத்தில் மாயையோடு கூடிய சேதனத்திலிருந்தும் வெளிப்பட்ட ஆபாச சேதனமே (சீவனே) பிரதம அவஸ்தையான பீஜ சாக்கிரம்.(பீஜம், வித்து, விதை, மூலம் என்பன ஒரே பொருளுடைய சொற்கள்). தேக உற்பத்திக்குப் பின் வெளிப்பட்டு விருத்தியாகின்ற சித்தம், புத்தி, அகங்காரம் முதலிய பெயர் களுக்கும் அவற்றின் அர்த்தங்களுக்கும் காரணபூதமாய் இருப்பதால் இது பீஜ சாக்கிரம் என்று கூறப்படுகின்றது. 2. இந்த ஆபாச சேதனத்தில் முன்னில்லாத அக மமதை-யான் எனது-என்னும் தன்மைகள் முளை போல சூக்குமமாக எழுதலே சாக்கிரம்(நனவு). 3.இந்த ஆபாச சேதனத்தில் அக மமதைகள் பிறவிதோறும் இடைவிடாது சம்ஸ்கார வாயிலாக வந்து திடமாய் உண்டாதலே மகா சாக்கிரமாம். 4.இச்சேதனம் சாக்கிர அவஸ்தையில் அக மமதை காரணமாக முன்னர் தான் அறிந்துள்ள விஷயத்தைப் பற்றியாவது பூரணமாய் அறியாத விஷயத்தைப் பற்றியாவது அதனதன் மயமாய் நின்று மனோராச்சியம்-வீணான எண்ணம்-செய்தலே சாக்கிர சொப்பனமாம்.

**உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப் பனமெனும்பே ருடைய தாகும்**
**பண்டுகனாக் கண்டுமறந் ததைமீண்டு நினைப்பதுசொப் பனந னாவாம்**
**மண்டுமிருண் மூடுவது சுழுத்தியா மஞ்ஞான வகைகள் சொன்னோம்**
**விண்டுநிறை முத்திதரு ஞானபூ மிகளேழும் விளம்பக் கேளாய். (148)**

உண்டு, (உ)றங்கி, மனோ ராச்சியம் செயல் சொப்பனம் எனும் பேர் உடையதாகும்;
பண்டு கனாக் கண்டு,மறந்து,அதை மீண்டு(ம்) நினைப்பது,சொப்பன நனாவாம் ;
மண்டும் இருள் மூடுவது சுழுத்தியாம் ; அஞ்ஞான வகைகள் சொன்னோம்;
விண்டு நிறை முத்தி தரு(ம்), ஞான பூமிகள் ஏழும் விளம்பக் கேளாய்.

5.இந்த சேதனம் உண்டுறங்கி விழித்து அற்பகாலத்தில் தமது உற்பத்திக்கு இயன்ற கால தேசங்களைப் பெறாத அநேக விஷயங்களைக் கண்டறிந்தோம் என்று சிந்திப்பதே சொப்பனமாம். 6. இந்தச் சேதனம் முன்பு சொப்பனத்தில் கண்டு மறந்த விஷயங்களை மீண்டும் சிந்தித்து நினைப்பதே சொப்பன சாக்கிரமாம். 7. இந்த சேதனம் மேற்கூறிய ஆறு அவஸ்தைகளும் நீங்கப்பெற்று இனி அனுபவிக்கத்தக்க சுப அசுப கருமங்களின் சம்ஸ்காரம் இருத்தற்கு இடமாகிய அஞ்ஞான வடிவ இருளால் மூடப்பட்டுள்ள நிலைமையே சுழுத்தியாம். அன்பனே! இதுகாறும் யாம் அஞ்ஞான பூமிகளின் கூறுபாடுகளைக் கூறினோம். இனி அவித்தையிலிருந்தும் நீங்கிச் சர்வ வியாபகமாக விளங்கும் மோட்சத்தைச் சீவனுக்குத் தருகின்ற ஞானபூமிகள் ஏழினையும் கூறுகின்றோம். அவற்றை நீ கேட்பாயாக.

**புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணையிரண்டாம் பூமி யாகும்**
**நலதநுமா னசிமூன்றாம் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி**
**சொலுமசம்சத் திப்பேரும் பதார்த்தாபா வனைப்பேருந் துரியப் பேரும்**
**மலினமறு மகனேயைந் தாறேழு பூமிகளா வகுத்தார் மேலோர். (149)**

புலவர் புகழ் முதல் பூமி சுபேச்சை; விசாரணை இரண்டாம் பூமியாகும்;
நல தநுமானசி மூன்றாம் பூமி; சத்துவாபத்தி நாலாம் பூமி; சொ(ல்)லும்
அசம்சத்திப் பேரும் பதார்த்தாபாவனைப் பேரும், துரியப் பேரும்,மலினம்
அறு மகனே! ஐந்து, ஆறு ,ஏழு பூமிகளா(ய்) வகுத்தார் மேலோர்.

அறிந்த பெரியோர் புகழ்கின்ற சுபேச்சை முதல் பூமியாம். விசாரணை இரண்டாம் பூமியாம். நல்ல தனுமானசி என்பது மூன்றாம் பூமியாம். சத்துவாபத்தி என்பது நான்காம் பூமி. சொல்லுகின்ற அசம்சத்தி ஐந்தாம் பூமி. பதார்த்தபாவனை என்ற பெயர் உடையது ஆறாம் பூமி. துரியம் என்னும் பெயர் உடையது ஏழாம் பூமி என்று வகுத்துள்ளனர் பெரியோர்.

**துற்சங்க நிவர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சை யாகும்**
**நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசா ரணையா நம்பி**
**முற்சங்க வேடணைகள் விடறநுமா னசியிந்த மூன்றி னாலும்**
**சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்தி தானே. (150)**

துற்சங்க நிவர்த்தி வந்து, சிவஞானம் விரும்புவது சுபேச்சையாகும்;
நற்சங்க மொழி வினவி, ஞான நூல் பழகல் விசாரணையா(ம்);
நம்பி,முற்சங்க ஏடணைகள் விடல் தநுமானசி ; இந்த மூன்றினாலும்
சற்சங்க(ம்),மனதில் உண்மை அறிவு (உ)தித்தல்,சத்துவாபத்தி தானே.

1. முற்பிறப்பிலாவது, இப்பிறப்பிலாவது செய்துள்ள நிஷ்காம கர்ம உபாசனைகளின் வலிமையால் சித்த சுத்தி உண்டாகியிருப்பவன் தீயவர் சகவாசத்திலிருந்தும் நீங்கி, நான் இதுகாறும் மனைவி முதலியவர்களோடு கூடி முடனாய் இருக்கும் காரணம் என்ன? இனி அவ்வாறு இல்லாமல் பிரம நிஷ்டர்களாகிய ஞானிகளாலும், ஞான சாத்திரங்களாலும் ஞானத்தை அறிவேன் என்று பிரமஞானத்தை அடைய விரும்பும் தீவிர இச்சையே சுபேச்சையாகும். (சுப+இச்சை). 2. யான் பிரமஞானத்தை அடைய வேண்டும் என்னும் தீவிர இச்சையுள்ள அவன் சாது சங்கத்தோடு கூடியுள்ள சற்குருவை அடைந்து விதிப்படி வணங்கி, அவர் வாக்கால் சீவப் பிரம அபேதத்தை உணர்த்தும் வேதாந்த வாக்கியங்களைக் கேட்டு, அவற்றின் பொருள்கள் நன்றாக மனதில் பதியும் நிமித்தம் அவற்றை உத்திகளால் மனனம் செய்தலே விசாரணையாம். 3. அவன் இவ்விரண்டு பூமிகளின் அப்பியாச வலிமையால் குரு சாத்திர வாக்கிய அர்த்தங்களை நம்பிக்கையோடு நிதித்தியாசனம் செய்து அதன் அப்பியாச மிகுதியால் முன்னுள்ள மனைவி மக்கள் செல்வங்களில் உள்ள இச்சை நீங்குதலே தனுமானசியாம். 4. இம்மூன்று பூமிகளின் அப்பியாச வலிமையால் அனாத்ம சம்ஸ்காரம் நீங்கப்பெற்று, ஆத்ம சம்ஸ்காரத்தோடு கூடிய மனதின்கண் அவனுக்குச் சொருப சாட்சாத்காரம்-தன்னைஅறிதல்-உண்டாதலே சத்துவாபத்தியாம். (சத்துவ + ஆபத்தி).

**தத்துவத்தின் மன(மு)றைத்து மித்தையெலா மறத்தலசம் சத்தி யாகும்**
**அத்துவிதா நந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த்தாபா வனைய தாகும்**
**வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவு னசுபாவந் துரிய மாகும்**
**இத்துரிய பூமியைமுன் றுரியாதீ தப்பதமென் றதுவுங் கேளாய். (151)**

தத்துவத்தில் மனம் உறைத்து, மித்தையெலா(ம்) மறத்தல் அசம்சத்தி ஆகும்;
அத்துவிதாநந்தம் வரும்;திரிபுடி போம்;பதார்த்த அபாவனை அது ஆகும்;
வத்து நிலை இருந்தபடி ,இருந்த மவுன சுபாவம் துரியமாகும்;
இத்துரிய பூமியை முன், துரியாதீதப் பதம் என்றதுவும் கேளாய்.

5.அவன் முன்கூறிய நான்கு பூமிகளின் அப்பியாச வலிமையால், ஜீவப் பிரம ஐக்கியத்தில் மனம் அழுந்தி நிற்க, மித்தையான நாமரூபங்கள் எல்லாவற்றையும் நினையாதிருத்தலே அசம்சத்தியாம். 6.இந்த ஐந்து பூமிகளின் அப்பியாச மிகுதியால் அவன் அத்துவிதானந்தம் மேலிட அதனால் வெளியே உள்ளே காணப்படும் திரிபுடிகள் நீங்கப்பெற்றிருத்தலே பதார்த்தபாவனையாம் (பதார்த்த + அபாவம்). 7. இந்த ஆறு பூமிகளின் அப்பியாச மிகுதியால் அவன் ஆன்ம சுபாவத்தில் இருந்தபடி இருக்கும் மோன நிஷ்டையே துரியமாம். இத்துரிய பூமியை முன்னர் யாம் துரியாதீத பூமி என்று கூறியதன் காரணத்தையும் கூறுகின்றோம். நீ கேட்பாய். *(சம்சத்தி- நாமருபங்களின் சம்பந்தம். அ∴து இன்மை அசம்சத்தியாம். அசங்கம், அசம்சத்தி என்பன ஒருபொருள் உடைய சொற்கள். பதார்த்த பாவனை – பதார்த்த + அபாவனை எனப்பிரிபடும். பதார்த்தம்-பாகியாந்தரங்களின் அனுசந்தானம்(பற்று). அபாவனை-அ∴தின்மை. பதார்த்தபாவனை-பதார்த்த நினைவு ஒழிதல். ஞாதுரு-ஞானம்-ஞேயம் என்னும் காண்பான்-காட்சி-காணப்படும் பொருள் வடிவத் திரிபுடி. நான்காம் ஐந்தாம் பூமிகளைப் போல பாவ வடிவமாகவும், ஆறாம் பூமியைப் போல அபாவ வடிவமாகவும் தோன்றாது ஒழிய, தன்னாலும் பிறராலும் எழுந்து கொள்ளுதல் இல்லாத சொருபத்தில் நிலைத்த மனதின் நிலை துரியமாம். இந்த ஞான பூமிகள் ஏழினுள் முதல் மூன்று பூமிகள் தத்துவ ஞானத்திற்குச் சாதனமும், நான்காவது பூமி தத்துவ ஞான வடிவமாய் இருத்தலின் சீவன் முத்தி விதேக முத்திகளுக்குச் சாதனமும், ஐந்தாவது ஆறாவது ஏழாவது பூமிகள் சீவன் முத்தியின் விலட்சணானந்தத்திற்குச் சாதனமும் ஆகும். இங்கே முதலாவது சாதன சதுஷ்டய பூமியும், 2-ஆவது சிரவண மனன பூமியும், 3-ஆவது நிதித்தியாசன பூமியும், 4-ஆவது பிரம வித்துப் பூமியும், 5-ஆவது பிரம வித் வரன் பூமியும், 6-ஆவது பிரம வித் வரியான் பூமியும், 7-ஆவது பிரம வித் வரிட்டன் பூமியும் ஆகும்.)*

**முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமா மூன்றற் கப்பால்**
**சொற்பனமா மதுவுமெள்ள நமுவுமைந்தாம் பூமியே சுழுத்தி யாகும்**
**அற்புதமாஞ் சுகாநுபவ மிகுமாறாம் புவிதுரிய மதற்கப் பாலோர்**
**கற்பனையி லாதவிட மதீதமென்று மௌனமாக் காட்டும் வேதம். (152)**

முற்புவி மூன்றிலும் உலகம் தோன்றுதலால்,சாக்கிரமாம்;மூன்றற்கு அப்பால்,
சொற்பனமாம்; அதுவும் மெள்ள நழுவும் ஐந்தாம் பூமியே,சுழுத்தியாகும்;
அற்புதமாம் சுகானுபவம் மிகும், ஆறாம் புவி துரியம் ;அதற்கு அப்பால்
ஓர் கற்பனையிலாத இடம் அதீதம் என்று மௌனமாக் காட்டும் வேதம்.

சுபேச்சை முதலிய மூன்று பூமிகளிலும் பூரண ஞானம் இல்லாததால் சகத்து சத்தியமாகத் தோற்றுதலால் அம்மூன்றும் சாக்கிரமாம். அந்த மூன்றிற்கு அப்பால் நான்காம் பூமியில் சகத்து சொப்பனம் போல மித்தையாகத் தெரிவதால் அது சொப்பனம் ஆகும். மித்தையான தோற்றமும் கிரமமாக நீங்கப்பெறும் ஐந்தாம் பூமியே சுழுத்திக்குச் சமானமாய் இருப்பதால் சுழுத்தியாம். அற்புதமான ஆனந்த அனுபவம் மிகுந்து உண்டாகின்ற ஆறாம் பூமி நான்காம் அவத்தை ஆவதால் துரியமாம். அதற்கு அப்பால் சத்து, அசத்து முதலிய கற்பனைகளில் எந்தவொரு கற்பனையும் இல்லாத ஏழாம் பூமியை சகல விஷய சம்பந்தங்களும் அற்றிருத்தலால் துரியாதீதம் என்று வேதம் மௌனமாகக் காட்டும்.

**துரியநிலந் தனைத்துரியா தீதமெனின் மயக்கமென்று சுருதிமே லோர்**
**அரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா ரதுகணக்கி லாறாம் பூமி**
**மருவுசுழுத் தியிற்காட சுழுத்தி யென்பா ரென்பதுநீ மனத்திற் கொள்வாய்**
**பெருமைதரு ஞானபூ மியின் விகற்ப மின்னமுண்டு பேசக் கேளாய். (153)**

துரியநிலம் தனை,துரியாத்தம் எனில்,மயக்கம் என்று சுருதி,மேலோர்,
அரியதொரு விதேக முத்தி,அதீதம் என்பார்; அது கணக்கில் ஆறாம் பூமி;
மருவு சுழுத்தியில்,காட சுழுத்தி என்பார், என்பதும் நீ மனத்தில் கொள்வாய்;
பெருமைதரு(ம்) ஞானபூமியின் விகற்பம் இன்னம் உண்டு; பேசக் கேளாய்.

வேதப் பொருள் உணர்ந்த தூயவர் துரிய பூமியைத் துரியாதீத பூமி எனக் கூறினால் மந்த (தூலத்தில்) புத்தியுடையவர்களுக்கு மயக்கம் உண்டாகும் என்று எண்ணி, விதேக கைவல்லியத்தைத் துரியாதீத பூமி என்று கூறுவர். அவ்வாறு கூறும் கணக்கின்படி, பதார்த்தபாவனை என்னும் ஆறாம் பூமியை க்ஷீண சுழுத்தி என்னும், காட சுழுத்தி என்னும் இருவகை சுழுத்திகளில் காடசுழுத்தி என்பர். இவ்வாறு கூறும் கணக்கால் ஏழாவது பூமியைத் துரியாதீதம் என்பதற்குப் பதிலாக துரியம் என்று கூறுவர். இப்படியாக ஞானபூமியின் வகையைச் சிறிது வேறாகக் கூறுவதையும் நீ மனதில் கொள்வாய்.

**முன்னிலங்க ளேறியமூ வருமப்பி யாசிகளா முத்த ரல்லர்**
**பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன்முத்தர் பேத மாகும்**
**சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாந் தூய முத்தர்**
**இன்னமுமப் பூமிகளின் பெருமைதனை நீயறிய யான்சொல் வேனே. (154)**

முன் நிலங்கள் ஏறிய மூவரும் அப்பியாசிகளாம் ;முத்தர் அல்லர் ;
பின் நிலங்கள் வரன்,வரியான்,வரிட்டன் எனும் சீவன் முத்தர் பேதமாகும் ;
சொன்ன நடுப்பூமி வந்த ஞானிகளே,பிரமவித்தாம் தூய முத்தர்;
இன்னமும் அப்பூமிகளின் பெருமைதனை, நீ அறிய,யான் சொல்வேனே.

சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தபாவனை, துரியம் என்னும் ஞானபூமி ஏழினுள் முன்னுள்ள சுபேச்சை-விசாரணை-தனுமானசி என்னும் மூன்று பூமியிலும் ஏறியிருக்கும் மூவரும் அப்பியாசி (ஜிஞ்ஞாசு)களே அன்றி சீவன் முத்தர் அல்லர். பின்னுள்ள அசம்சத்தி, பதார்த்தபாவனை, துரியம் என்னும் மூன்று பூமியிலும் ஏறியிருக்கும் மூவரும் முறையே வரன், வரியான், வரிட்டன் என்று சொல்லப்படும் ஞானிகள் ஆவர். இவைகளின் இடையே உள்ள சத்துவாபத்தி என்னும் நான்காவது பூமியில் ஏறியிருக்கும் ஞானிகள் பிரம வித்து என்று கூறப்படுவர். வித்து, வரன், வரியான், வரிட்டன் என்னும் நால்வரும் சீவன் முத்தர் ஆவர். மேலும் அந்த ஞான பூமிகள் மகிமையை நீ அறியும்படியாகக் கூறுவேன்.

**நாலாம்பூ மியில்வருமுன் முன்றுபூ மியுமடைந்து நடந்து மாண்டோர்**
**மேலான பதமடைந்து பிறந்துமெள்ள மெள்ளவந்து வீடு சேர்வார்**
**மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்த மைந்தா**
**காலான முதற்பூமி கைவந்தான் முத்தியுங்கை வந்த தாமே. (155)**

நாலாம் பூமியில் வரு(ம்) முன்,முன்று பூமியும் அடைந்து,நடந்து மாண்டோர்;
மேலான பதம் அடைந்து,பிறந்து ,மெள்ள மெள்ள வந்து வீடு சேர்வார்;
மாலான பவத்தில் விழார்; முதல் பூமி கிடைப்பதுவே வருத்தம்; மைந்தா!
காலான முதல் பூமி கைவந்தால், முத்தியும் கைவந்ததாமே.

சத்துவாபத்தி என்னும் நான்காம் பூமியில் வருவதற்கு முன்னே சுபேச்சை-விசாரணை-தனுமானசி என்னும் அப்பியாச பூமிகள் மூன்றினையும் அடைந்து அப்பியாசம் செய்து மரணம் அடைந்தவர் தேவ விமானத்தின் மேலேறிச் சென்று சுவர்க்க முதலிய பதவிகளை அடைந்து அங்குள்ள போகங்களை அனுபவித்து, அப்போகம் அனுபவித்தற்கு உரிய வினை நசித்த பிறகு அப்பதவிகளிலிருந்து நீங்கிப் பூமியில் ஞானிகள் குலத்திலோ யோகிகள் குலத்திலோ பிறந்து காலக்கிரமத்தில் நான்காம்பூமியில் வந்து ஞானிகளாய் மோட்சம் அடைவர். மயக்கத்திற்குக் காரணமான பிறவிகளை அடையமாட்டார்கள். இங்கு கூறிவரும் ஞானபூமிகள் ஏழில் சுபேச்சை என்னும் முதல்பூமி கிடைப்பதே எவர்க்கும் கடினமாம். விசாரணை முதலிய பூமிகளை அடைவதற்குக் காரணமான முதற்பூமி ஒருவனுக்குக் கைவருமாயின் முத்தியும் அவனுக்கு வரப்பெறும்.

**இப்புவியி லிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தா ரானால்**
**அப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தர் குருபாதத் தாணை மெய்யே**
**தப்புரையென் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ சங்கி யாதே**
**செப்புமொழி வழிதிடமா யகம்பிரம மென்றிருந்து தெளிந்தி டாயே. (156)**

இப்புவியில்,இஞ்ஞான பூமியில்,ஒன்றில்,இரண்டில் அடைந்து இருந்தாரானால்,
அப்புருடர் மிலேச்சராகிலு(ம்) முத்தர்; குருபாதத்து ஆணை! மெய்யே!
தப்பு (உ)ரை என்றவர் கெடுவார்; நடுவான மறைகளை, நீ சங்கியாதே;
செப்பு(ம்), மொழி வழி திடமாய், அகம் பிரமம் என்று இருந்து தெளிந்திடாயே.

இந்த உலகில், ஞானபூமிகளுள் சுபேச்சை என்னும் முதற்பூமியிலாவது, விசாரணை என்னும் இரண்டாம் பூமியிலாவது அப்பியாசம் உடையவர்களாய் இருக்கும் அந்த புருடர்கள் மிலேச்சராயினும் முத்தர் ஆவர். குருபாதத்தின் மீது ஆணை. இது சத்தியம். தவறான வார்த்தை என்று சொல்பவர் கெட்டுப்போவார். புத்திரர்களிடத்தில் தாய்போல் பாரபட்சம் அற்ற வேத வாக்கிய நெறியில் உறுதி உடையவனாக, நான் பிரமமாய்-அகம்பிரம்மாஸ்மி- இருக்கின்றேன் என்று தெளிந்திடுவாய்.

**பொல்லாத மிலேச்ச ருக்கும் விதேகமுத்தி தருஞான பூமியென்று**
**நெல்லாகி முளைக்குமெனைத் தண்டுலமாக் கியகுருவே நீர்சொன் னீரே**
**இல்லாளுங் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்தே காங்கி யானோர்**
**அல்லாமன் முத்திபெறா ரென்றுசிலர் சொலுமயக்க மகற்று வீரே. (157)**

பொல்லாத மிலேச்சருக்கும், விதேகமுத்தி தரு(ம்) ஞானபூமி என்று,
நெல்லாகி முளைக்கும் எ(ன்)னை, தண்டுலம் ஆக்கிய குருவே! நீர் சொன்னீரே!
இல்லாளும்,குடும்பம் விட்டு,சந்நியாசம் புகுந்து,ஏகாங்கியானோர்
அல்லாமல் முத்தி பெறார், என்று சிலர் சொ(ல்)லும் மயக்கம் அகற்றுவீரே.

நெல் மீண்டும் விதையாகி முளைப்பது போல, பிறந்து இறக்கும் என்னை அரிசியைப் போலப் பிறந்து இறவாதபடி செய்த தேசிக உத்தமரே! தேவரீர் ஞானபூமி, பொல்லாத மிலேச்சருக்கும் விதேக முத்தியைக் கொடுக்கும் என்று சொன்னீர். இதற்கு மாறாக சிலர் மனைவியையும், குடும்பத்தையும் துறந்து, சந்நியாச ஆசிரமத்தை அடைந்து, மலை குகை முதலிய இடத்தில் தனித்திருந்து, ஞான பூமியைப் பெற அப்பியாசம் செய்பவரைத் தவிர ஏனையோர் மோட்சம்

**சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்**
**கட்டழியுந் துறவுநால் வகையாகு மவைகளுக்கங் காகும் பேர்கள்**
**பட்டதுயர் கெடுங்குடீ சகம்வெகூ தகமஞ்சம் பரம வஞ்சம்**
**விட்டகலுந் துறவுக்கு விராகங்கா ரணமன்றி வேட மன்றே. (158)**

சிட்டர் புகழ் மகனே! நீ சங்கித்த சங்கை நன்று; தெரியக் கேளாய்; கட்டு
அழியும் துறவு நால்வகையாகும்; அவைகளுக்கு அங்காகும் பேர்கள்,
பட்ட துயர் கெடும் குடீசகம், வெகூதகம் ,அஞ்சம், பரம அஞ்சம்;
விட்டு அகலும் துறவுக்கு, விராகம் காரணம் அன்றி, வேடம் அன்றே.

நல்லொழுக்கம் உடையோரால் புகழப்படும் மகனே! நீ ஆட்சேபித்த ஆட்சேபம் சரியானதே. அந்த ஆட்சேபம் அகல விடை கூறுகின்றேன். அதனை நீ கவனமாய்க் கேட்பாய். சந்நியாசம் நான்கு வகையாம். அவைகளின் பெயர்கள்– குடீசகம், பகூதகம், அம்சம், பரம அம்சம் என்பனவாம். இச்சந்நியாசத்திற்கு விராகம்-நிராசை-ஒன்றிலும் ஆசை யின்மை- காரணமே அல்லாமல் காவி உடை தரித்தல் முதலிய வேஷம் காரணம் ஆகாது.

**மந்தமுந்தீ விரமுந்தீ விரதரமு மெனமூன்று வகைவி ராகம்**
**வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும் விராக மந்தம்**
**இந்தவுட லளவுமனை தனம்வேண்டா மெனவிடறீ விரமென் பார்கள்**
**அந்தணனூர் மித்தையென விடலதுதீ விரதரமா மறிந்தி டாயே. (159)**

மந்தமும், தீவிரமும், தீவிரதரமும் என மூன்று வகை விராகம்;
வெந்துயரம் வரும் பொழுது, குடும்பத்தை வெறுத்து வரும் விராகம், மந்தம்;
இந்த உடல் அளவு மனை, தனம் வேண்டாம் என விடல், தீவிரம் என்பார்கள்;
அந்தணன் ஊர் மித்தை என விடல்,அது தீவிரதரமாம்; அறிந்திடாயே.

விராகம் அதாவது வைராக்கியம்–மந்தம், தீவிரம், தீவிரதரம் என மூவகையாகும். அவற்றுள் 1.மனைவி மக்கள் இறந்து போவதாலும், இருக்கின்ற பொருளை இழப்பதாலும், பிறவற்றாலும், கொடிய துக்கம் உண்டான காலத்தில் அதனால் இச்சம்சாரம் மிகக்கொடியது, இதனை எப்படியாவது விட்டு அகல வேண்டும் என்று அப்போது மாத்திரம் சம்சாரத்தை வெறுக்கும் விராகம் மந்த விராகம். 2. பிராரர்த்த கர்ம வசத்தால் இத்தேகம் இறவாது இருக்கும் அளவும் தாரம், தனம் முதலிய சம்சாரம் நமக்கு வேண்டாம் என்று அவற்றை விராகத்தால் விட்டிருத்தல் தீவிர விராகம் ஆகும். 3.பெரும் புண்ணியத்தால் கிடைப்பதான பிரம்மலோகம் கிரியை உடையதாயும் நாசம் உடையதாயும் இருத்தலால் மித்தையாம். அது நமக்கு வேண்டாம் என்று அதனையும் வெறுத்திருத்தல் தீவிரதர விராகம் ஆகும்.

**பாவிமந்த விராகத்திற் சந்நியா சங்க ளொன்றும் பலித்தி டாதே**
**தீவிரத்திற் குடீசகமும் வெகூதகமு மென்றிரண்டு திறங்க ளுண்டாம்**
**தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமுஞ் சகங்க ளெங்கும்**
**மேவிநடந் திடத்திடமுள் ளவர்க்குவெகூ தகமுமென விதித்தார் மேலோர்.(160)**

பாவி மந்த விராகத்தில்,சந்நியாசங்கள் ஒன்றும் பலித்திடாதே;
தீவிரத்தில் குடீசகமும்,வெகூதகமும் என்று இரண்டு திறங்கள் உண்டாம்;
தாவி நடந்திடத் திடம் இ(ல்)லாதவர்க்குக் குடீசகமும் ; சகங்கள் எங்கும்
மேவி நடந்திட, திடம் உள்ளவர்க்கு வெகூதகமும் என, விதித்தார் மேலோர்.

பாவியினது மந்த விராகத்தினால் நால்வகை சந்நியாசங்களில் எந்தவொரு சந்நியாசமும் சித்திக்காது. தீவிர வைராக்கியத்தினால் குடீசகம், பகூதகம் என்று சொல்லும் இருவித சந்நியாசங்கள் உள்ளன. யாத்திரை முதலியவை நடந்து செல்லச் சக்தி அற்றவர்களுக்கு குடீசகமும், உலகமெலாம் யாத்திரை செய்யச் சக்தி உள்ளவர்களுக்குப் பகூதகமும் என்று பெரியோர் விதித்துள்ளனர்.

**இருவகைதீ விரதரத்து மஞ்சனென்றும் பரமாஞ்ச னென்றுஞ் சொல்வர்**
**வருமஞ்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்தன்றி வாரா தென்பார்**
**பரமாஞ்ச னுக்குமுத்தி யிவ்வுலகின் ஞானத்தாற் பலிக்கு மென்பார்**
**திரமருவும் பரமாஞ்சன் றானுமிரு வகையாகுஞ் செப்பக் கேளாய். (161)**

இருவகை தீவிரதரத்தும்,அஞ்சன் என்றும்,பரமாஞ்சன் என்றும் சொல்வர்;
வரும் அஞ்சனுக்கு முத்தி, சத்தியலோகத்து அன்றி, வாராது என்பார்;
பரம அஞ்சனுக்கு முத்தி, இவ்வுலகில், ஞானத்தால் பலிக்கும் என்பார்;
திர(ம்) மருவும் பரமாஞ்சன் தானும் இருவகையாகும்; செப்பக் கேளாய்.

தீவிரதர வைராக்கியத்திலும், அம்சன் என்றும் பரம அம்சன் என்றும் இருவித சந்நியாச அதிகாரி உண்டென்று சொல்வர். வருகின்ற அம்ச சந்நியாசம் உடையோனுக்கு மோட்சமானது பிரமலோகத்தில் வருமே அன்றி இந்த லோகத்தில் வாராது என்று சொல்வர். பரம அம்ச சந்நியாசம் உடையோனுக்கு மோட்சமானது இவ்வுலகத்திலேயே தத்துவ ஞானத்தால் வாய்க்கும் என்று கூறுவர். இருக்கும் பரம அம்சனும் இருவகை ஆவர். அவ்விரு வகையையும் கூறக் கேட்பாய். *(அம்ச சந்நியாசி பிரமலோக இச்சையால் முமுட்சுத்துவம் இன்றி அக்கினியால் சாதிக்கப்படும் கர்மங்களை விட்டுப் பிராண உபாசனை செய்திருப்பவன் ஆகலின், அவனுக்குத் தத்துவ ஞானத்தால் சித்திக்கும் மோட்சம் இப்பிறவியில் சித்திக்காது. மறுமையில் பிரமலோகத்தில் அந்தக்கரண சுத்தி வாயிலாகத் தத்துவ ஞானம் உண்டாவதால் சித்திக்கின்றது என்பது சாஸ்திர நியமமாம்.)*

**சிஞ்ஞாசு ஞானவா னென்றிரண்டு பேர்களவ ரிற்சிஞ் ஞாசு**
**மெய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூ மியுணடக்கும் விவேகியா னோன்**
**சுஞ்ஞான வானென்போன் சீவன்முத்தி யடைந்திருக்குந் தூய மேலோன்**
**அஞ்ஞான மகலுமந்தச் சிஞ்ஞாசு மிருவகையா மதுவுங் கேளாய். (162)**

சிஞ்ஞாசு,ஞானவான் என்று இரண்டு பேர்கள்;அவரில் சிஞ்ஞாசு,
மெய்ஞ்ஞான பூமியில்,முன் மூன்று பூமியுள் நடக்கும் விவேகி ஆனோன்;
சுஞ்ஞானவான் என்போன்,சீவன் முத்தி அடைந்திருக்கும் தூய மேலோன்;
அஞ்ஞானம் அகலும் அந்த சிஞ்ஞாசும்,இருவகையாம்;அதுவும் கேளாய்.

பரம அம்ச சந்நியாசம் உடையோரும் சிஞ்ஞாசு என்றும் ஞானவான் என்றும் இரண்டு பேர்கள். அந்த இருவருள் சிஞ்ஞாசு என்பவன் மெய்ஞ்ஞான-தத்துவ ஞான-பூமிகளில் முன்னவையாகிய சுபேச்சை, விசாரணை, தனுமானசி என்னும் மூன்று பூமிகளின் அப்பியாசத்தில் செல்லும் விவேகி ஆவான். நல்ல ஞானவான் என்று சொல்லப்படுபவன் சீவன்முத்தியை அடைந்த சுத்த மேலோன். அஞ்ஞானம் கிரமமாக நீங்கப்பெறும் அந்த சிஞ்ஞாசுவும் இருவகை ஆகும். அதனையும் கேட்பாயாக.

**பந்தமனை துறந்துசில ரதிதிகளா யிருந்தடைவர் பரம ஞானம்**
**அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரரா யிருந்துசில ரடைவர் ஞானம்**
**இந்தவகைச் சாத்திரத்து முலகத்து நடப்பதுகண் டிருந்து மைந்தா**
**சிந்தனையின் மயக்கமென்னே சுருதியுத்தி யநுபவத்தாற் றெளிந் திடாயே.(163)**

பந்த மனை துறந்து சிலர்,அதிதிகளாய் இருந்து,அடைவர் பரம ஞானம்;
அந்தணர்,மன்னவர்,வணிகர்,சூத்திரராய் இருந்து சிலர் அடைவர் ஞானம்;
இந்தவகைச் சாத்திரத்தும்,உலகத்து(ம்) நடப்பது கண்டிருந்து மைந்தா!
சிந்தனையில் மயக்கம் என்னே! சுருதி, யுத்தி,அநுபவத்தால் தெளிந்திடாயே.

சிஞ்ஞாசுக்களில் சிலர், எனது என்னும் அபிமானத்தால் பந்த வடிவமாய் உள்ள மனைவி, புத்திரர், திரவியம், பூமி, பசு, வீடு, தானியம் என்னும் தனத்தைப் புத்தி பூர்வகமாகத் துறந்து யதிகளாய்-சந்நியாசிகளாய்ச் சற்குருவை அடுத்திருந்து சிரவண மனன நிதித்தியாசனம் செய்வது வாயிலாகத் தத்துவ ஞானத்தை அடைவர். சிலர் பிராமண-சத்திரிய-வைசிய-சூத்திர வருணம் நான்கில் ஒருவராய்த் தத்தமக்கு விதித்துள்ள கருமங்களை நிஷ்காமியமாகச் செய்து அகத் துறவு உடையவராகி சற்குருவை அடுத்திருந்து சிரவணம் முதலானவற்றால் தத்துவ ஞானம் அடைவர். மைந்தனே! இவ்வாறாக சிஞ்ஞாசுக்கள் இருப்பர் என்று சாத்திரங்கள் கூறுவதையும், உலகத்தில் சிஞ்ஞாசுக்கள் துறவிகளாகவும் இல்லறவாசிகளாகவும் ஒழுகுவதையும் அறிந்திருந்தும் குடும்பத்தை விட்டு துறவு கொண்டவரைத் தவிர ஏனையோர் முத்தி பெறார் என்று உனது சித்தத்தில் மயக்கம் உண்டானது வியப்பாக இருக்கிறது. சுருதி, உத்தி, அனுபவங்களால் இச்சந்தேகத்திலிருந்து தெளியக்கடவாய்.

**பிறந்ததுண் டானா லன்றோ பிறகுசா வதுதா னுண்டாம்**
**பிறந்ததே யில்லை யென்னும் பிரமமா வதுவு நானே**
**பிறந்தது நானென் றாகிற் பிரமமன் றந்த நானே**
**பிறந்தது மிறந்த தற்ற பிரமமா நானே நானே.** (164)

பிறந்தது (உ)ண்டானால் அன்றோ? பிறகு சாவதுதான் உண்டாம்;
பிறந்ததே இல்லை, என்னும் பிரமம் ஆவதுவும் நானே!
பிறந்தது நான் என்றாகில், பிரமம் அன்று அந்த நானே!
பிறந்ததும், இறந்தது(ம்) அற்ற பிரமமா(ம்) நானே! நானே!

பிறப்பு என்பது உண்டானால் தானே, பிறகு சாவது என்பதுவும் உண்டாகும். பிறந்ததே இல்லை என்னும் பிரம வடிவமே நான். ஒருகால் பிறந்தது நான் என்று சொன்னால் அந்த நான் என்பது பிரமவடிவம் ஆகாது. பிறப்பும் இறப்பும் அற்ற பிரமம் நானே நானே.

**நானென்ற பிரம மான நானேநா னறியே னென்றால்**
**நானென்ப தேது பின்னை நம்முடைப் புந்தி யென்னில்**
**தானது மயக்கந் தன்னிற் சாகுமே சாவா தாகி**
**நானென நிறைந்தி ருந்த ஞானமா நானே நானே.** (165)

நான் என்ற பிரமமான நானே, நான் அறியேன் என்றால்,
நான் என்பது ஏது? பின்னை நம்முடைப் புந்தி என்னில்,
தான் அது, மயக்கம் தன்னில் சாகுமே; சாவாதாகில்,
நான் என நிறைந்திருந்த ஞானமா(ம்) நானே! நானே!

நான் என்ற பிரம வடிவமான நானே நான். அறிய முடியவில்லையே என்றால் பின்னர் நான் என்பது எதுவாகும்? நம்முடைய புத்தி என்று சொன்னால், அந்தப் புத்தியானது சுழுத்தியில் இல்லாமல் போகிறதே! சுழுத்தியிலும் மறைந்து போகாமல் 'நான்' என்று நிறைந்து இருந்த ஞான வடிவமாகிய ஆன்மாவே நான்.

**நிறைந்தவா றெந்த வாறு நிலைதெரிந் திலனென் றாயேல்**
**அறிந்ததாஞ் சுழுத்தி தன்னி லாநந்த மதுவே யாகும்**
**குறைந்ததற் காநந் தந்தான் குவலயந் தன்னி லில்லை**
**நிறைந்ததே யிந்த வான்மா நிதானமிவ் வறிவு தானே. (166)**

நிறைந்தவாறு,எந்தவாறு நிலை தெரிந்திலன்? என்றாயேல்,
அறிந்ததாம் சுழுத்தி தன்னில் ,ஆனந்தம் அதுவே ஆகும்;
குறைந்ததற்கு ஆநந்தந்தான், குவலயம் தன்னில் இல்லை;
நிறைந்ததே இந்த ஆன்மா, நிதானம் இவ்வறிவு தானே.

ஞான வடிவமாகிய ஆன்மா எந்த வகையினால் பூரணமாயிருக்கும் தன்மை தெரியவில்லையே என்று கேட்கில், சுழுத்தியில் அஞ்ஞானத்தை அறிந்திருந்ததாகிய ஆனந்தமே அதுவாகும். குறைந்திருப்பதற்கு ஆனந்தமானது உலகத்தில் ஓரிடத்தும் காணப்படவில்லை. சுழுத்தியில் ஆனந்தமாய் உள்ள இந்த ஆன்மா பூரணந்தான். இப்பரிபூரணப் பிரம சைதன்னியமே சகத்திற்கு ஆதிகாரணமாம்.

**மனத்தினா லெண்ணித் தானே வந்ததிவ் வுலக மாகும்**
**நினைத்திடி லநேக லோக நிற்பதவ் வறிவி லன்றோ**
**அனைத்தையுங் கடந்தப் பாலு மந்தமற் றறிவி தாமென்**
**றெனைத்தனி விசாரித் திட்டா லேகமாய் நிறைந்தோ னானே. (167)**

மனத்தினால் எண்ணித் தானே ,வந்தது இவ்வுலகமாகும்;
நினைத்திடில், அநேக லோகம் நிற்பது, அவ்வறிவில் அன்றோ;
அனைத்தையும் கடந்து அப்பாலும்,அந்தமற்று,அறிவு இதாம் என்று,
எனைத் தனி விசாரித்திட்டால், ஏகமாய் நிறைந்தோன் நானே.

ஆகாயம் முதல் தேகம் வரையிலான இந்த பிரபஞ்சம் மனத்தினால் பாவனை செய்தே உண்டானதாம். ஆராய்ந்தால் மனதின் எண்ணங்களாகிய பாவனையால் உண்டான அநேக லோகங்களும் அந்த மனத்தோடு கூட நிற்பது-காற்றினால் உண்டான அலை, திரை, குமிழ்கள் கடலின்மேல்தான் உண்டாவது போல-மனதிற்கு ஆதாரமான-பிரம சைதன்னியத்தில் அல்லவா! ஆதலால் அறிவில் உண்டாகி அறிவில் நிற்கும் இந்த மனம் முதலான பிரபஞ்சம் அறிவே ஆகும் என்று அறிவாகிய என்னைச் சுத்தமாக விசாரித்திடில், மன முதலான பிரபஞ்சம் அனைத்தையும் கடந்து அதற்கு அப்பாலும் முடிவற்று சுவகத முதலிய பேதங்கள் அற்று நிறைந்திருப்பவன் நானே.

**அந்தவா றிருந்து கொண்டே யாநந்த மநுப விக்க**
**எந்தவா றிருந்து கொண்டா லெனக்கிது தெரியு மென்னில்**
**இந்தமுன் றவத்தை தம்மு ளெழுந்திடும் விருத்தி நீக்கில்**
**அந்தவா றிருந்து நீயு மாநந்த மடைய லாமே.** **(168)**

அந்தவாறு இருந்து கொண்டே, ஆநந்தம் அனுபவிக்க,
எந்தவாறு இருந்து கொண்டால்? எனக்கு இது தெரியும் என்னில்,
இந்த மூன்று அவத்தை, தம்முள் எழுந்திடும் விருத்தி நீக்கில்,
அந்தவாறு இருந்து, நீயும் ஆநந்தம் அடையலாமே.

முன் சொன்னபடி சர்வாதீதமாய், அனந்தமாய், ஏகமாய்ப் பரிபூரணமாயிருந்து கொண்டு ஆனந்தம் அனுபவிக்க எவ்வாறிருந்தால் எனக்கு இது தெரியும் என்று கேட்கில், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் முன்றுவித அவஸ்தைகளில் எழுந்திடும் கோர, முட விருத்திகளை ஒழிப்பாயாகில் முன்கூறிய வழியே நின்று ஆனந்தம் அடையலாமே.

**வாதனா வசத்தி னாலே வருகிற விருத்தி யெல்லாம்**
**ஏதினா லடக்க லாகு மென்றுதான் விசாரஞ் செய்யில்**
**போதமா மிராசன் றானாய்ப் புந்தியைம் புலன்க ளெல்லாம்**
**தாதரா யிருக்கப் பெற்றாற் சகலமு மடங்குந் தானே.** **(169)**

வாதனா வசத்தினாலே வருகிற, விருத்தி எல்லாம்,
ஏதினால் அடக்கலாகும்? என்று தான் விசாரம் செய்யில்,
போதமாம் இராசன் தானாய், புந்தி, ஐம்புலன்கள் எல்லாம்,
தாதராய் இருக்கப் பெற்றால், சகலமும் அடங்குந்தானே.

சம்ஸ்காரவசத்தால் அந்தக்கரணத்திலிருந்தும் எழுகின்ற விருத்திகள் அனைத்தையும் எந்த உபாயத்தால் அடக்கக்கூடும் என விசாரம் செய்திடில், தான் ஞானரூபமாகிய அரசன் போல் எஜமானனாக இருக்க, அந்தக்கரணமும் ஐவகை ஞானேந்திரியங்களும், கர்மேந்திரியங்களும் தனக்கு ஆளாக-வேலைக்காரனாக-இருக்கப்பெற்றால் சகலவாசனைகளும் தானே அடங்கும்.

**விருத்திக ளடக்க வின்னம் வினோதமாம் யோகத் தாலே**
**துருத்திபோ லூது மூச்சைச் சுகமுட னடக்கி னிற்கும்**
**கருத்ததற் கில்லை யென்னிற் காரண சரீர மாகிப்**
**பெருத்ததோ ரவித்தை தன்னைப் பிடுங்கிடி லடங்குந் தானே. (170)**

விருத்திகள் அடக்க, இன்னம், வினோதமாம் யோகத்தாலே,
துருத்தி போல் ஊதும்(ம்) மூச்சை, சுகமுடன் அடக்கில் நிற்கும்;
கருத்து அதற்கு இல்லை என்னில், காரண சரீரமாகி,
பெருத்ததோர் அவித்தை தன்னை, பிடுங்கிடில் அடங்குந்தானே.

விருத்திகளை அடக்க வேண்டின் (1) வினோதமாகச் செய்யும் பிரணாயாமம் என்னும் யோக சித்தியினால் கொல்லனது துருத்தி போல நாசித்துளை வழியே செல்கின்ற பிராண வாயுவை அநாயாசமாகத் தடைசெய்தால்-அடக்கினால்-விருத்திகள் அடங்கும். (2)அவ்வாறு யோக அப்பியாசம் செய்வதற்கு விருப்பம் இல்லையெனின், தூல சூக்கும தேகங்களுக்குக் காரண தேகமாய் உள்ள அவித்தையை நாசம் செய்தால், தமது முதல் காரணமான அவித்தையின் நாசத்தால் விருத்திகள் தாமே அதாவது முயற்சியின்றியே அடங்கும். *(நூல் தீயால் நாசமானபோது அதன் காரியமான ஆடையும் அதன் விகாரங்களும் நாசமாவது போல, அவித்தை தத்துவஞானத்தால் நாசமான போது அதன் காரியமான அந்தக்கரணமும் அதன் விருத்திகளும் நாசமாகும் என்பதாம்.)*

**காரண சரீரந் தன்னைக் களைவதெவ் வாறென் றோதில்**
**ஆரணம் பொய்சொல் லாதே யதன்பொரு ளகத்தி லுய்த்துப்**
**பூரண மாகு மென்மேற் புவனங்க டோற்ற மென்று**
**தாரணை வந்த தாகிற் றரித்திடு மவித்தை யெங்கே. (171)**

காரண சரீரம் தன்னைக் களைவது எவ்வாறு ?என்று ஓதில்,
ஆரணம் பொய் சொல்லாதே; அதன் பொருள் அகத்தில் உய்த்து,
பூரணமாகும் என் மேல், புவனங்கள் தோற்றம் என்று,
தாரணை வந்ததாகில், தரித்திடும் அவித்தை எங்கே?

காரண தேகமான அவித்தையைப் போக்குவது எந்த உபாயத்தால் என்று கேட்டால், வேதம் பொய் சொல்லாதே, அதன் அர்த்தத்தை மனதில் திடமாகக் கொண்டு, பரிபூரணமான சொருபமாகிய என்னிடத்தில் பிரபஞ்சங்கள் கயிற்றில் பாம்பு போல கற்பிதமாகத் தோன்றுகின்றன என்று நிச்சயம்-தாரணை-வந்திடில், அவித்தை எங்கே இருக்கும்? ஒரு இடத்திலும் இல்லாமல் நாசமாய்விடும்.

**அப்படி யிருக்கச் சித்த மலைதலால் விவகா ரத்தில்**
**எப்படி கூடு மென்னி லென்னைவிட் டொன்று மில்லை**
**இப்படி கண்ட வெல்லா மென்மய மென்க னாப்போல்**
**கற்பித மென்று தானே காண்கின்ற சித்து நானே. (172)**

அப்படியிருக்க, சித்தம் அலைதலால் ,விவகாரத்தில்
எப்படிக் கூடும் ? என்னில், என்னை விட்டு ஒன்றும் இல்லை;
இப்படிக் கண்ட எல்லாம் என்மயம், என் கனாப் போல்,
கற்பிதம் என்று ,தானே காண்கின்ற சித்து நானே.

முன் சொன்னபடி பரிபூரணமாகிய என்னிடத்தில் அகங்காரம், ஆகாயம் முதலான பிரபஞ்சம் தோற்றம் மாத்திரமே என்ற தாரணை-நிச்சயம் கூடி நிற்க, பிராரர்த்த வசத்தால் வருகின்ற லௌகிக அல்லது வைதிக விவகாரத்தில் சித்தம் அலைதலால், எப்படிக் கூடும் என்னில், அசங்க சிதான்மாவான என்னைத் தவிர யாதொரு பிரபஞ்சமும் முயல்கொம்பு, மலடிமகன் போன்று இல்லை. இப்படி நாமரூபங்களால் காண்கின்ற பிரபஞ்சங்கள் அனைத்தும்-அலை, திரை, குமிழ்கள் எப்படி ஜலமயமோ, கடகம், மோதிரம், கழுத்துச் சங்கிலி ஆபரணங்கள் எப்படி பொன்மயமோ அப்படி அகண்ட சச்சிதானந்த ரூபனான-எனது மயமாம். அல்லது எனது சொப்பனத்தில் தோன்றிய பிரபஞ்சம் போல மித்தையாம் என்று நிச்சயித்து காண்கின்ற சுயமே அறிகின்ற சித்தாகிய ஆன்மாவே நான்.

**சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதி ருந்தால்**
**எத்தனை யெண்ணி னாலு மேதுசெய் தாலு மென்ன**
**நித்திரை யுணர்ந்த பின்பு நிற்கின்ற கனாவே போல**
**அத்தனை யும்பொய் தானே யாநந்த வடிவு நானே. (173)**

சித்து நான் நிறைந்தோன், என்ற திடம் மறவாதிருந்தால்,
எத்தனை எண்ணினாலும் ,ஏது செய்தாலும் என்ன?
நித்திரை உணர்ந்த பின்பு, நிற்கின்ற கனாவே போல,
அத்தனையும் பொய் தானே; ஆநந்த வடிவு நானே.

சித்தாயுள்ள நான் பூரணமாய் இருப்பவன் என்னும் உறுதியை மறவாமல் இருந்தால், மனத்தினால் எவ்வளவு சங்கற்பம் செய்தாலும், வாக்கால் யாது கூறினாலும் தேகத்தால் எத்தொழிலைச் செய்தபோதிலும், அவைகளால் யாதொரு கெடுதியும் இல்லையாம். ஆதலால், நித்திரையில் இருந்து விழித்த பிறகு மித்தையாக இருக்கின்ற சொப்பன விவகாரம் போல, மனோ வாக்கு காயங்களால் செய்யப்படும் வியாபாரம் அவ்வளவும் மித்தையே ஆகும். அதனால் நான் ஆனந்த வடிவமே ஆவேன்.

**நானென வுடலைத் தானே நம்பினே னநேக சன்மம்**
**ஈனராய்ப் பெரியோ ராகி யிருந்தவை யெலாமிப் போது**
**கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே**
**நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே. (174)**

நான் என உடலைத் தானே ,நம்பினேன் அநேக சன்மம்;
ஈனராய், பெரியோர் ஆகி இருந்தவை எல்(ல்)லாம், இப்போது,
கானலில் வெள்ளம் போலக் கண்டு, சற்குருவினாலே
நான் என ,என்னைத் தானே நம்பி ,ஈடேறினேனே.

கடந்து போன அளவிறந்த சென்மங்களில் மனித வடிவ தேகங்களையே பிராந்தியால் நானென்று நம்பியிருந்தேன். அப்போது இழிந்தோராயும், உயர்ந்தோராயும் இருந்த அவை அனைத்தையும் இப்போது சற்குருவின் கிருபையினால் கானல் சலம் போல் மித்தையாகக் கண்டு, பிரத்தியக் அபின்ன பிரமமாகிய என்னையே நானென உள்ளவாறு நம்பி உய்ந்தேன்.

**என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ காணேன்**
**நன்னிலந் தனிலெழுந்த நாரணன் கிருபை யாலே**
**தன்னிய னானே னானுத் தரீயத்தை வீசு கின்றேன்**
**தன்னிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன். (175)**

என்ன புண்ணியமோ செய்தேன்! ஏது பாக்கியமோ காணேன்!
நன்னிலம் தனில் எழுந்த, நாரணன் கிருபையாலே,
தன்னியன் ஆனேன் நான்! உத்தரீயத்தை வீசுகின்றேன்!
தன்னியன் நின்னு, நானே தாண்டவம் ஆடுகின்றேன் !

எப்படிப்பட்ட உயர்ந்த புண்ணியங்களை யான் செய்தேனோ? யாது அதிர்ஷ்டமோ? யான் அறியேன். நன்னிலம் என்னும் தலத்தில் எழுந்த நாராயண தேசிகருடைய கருணையினாலே நான் தன்னியன் ஆனேன். மேலாடையை ஆகாயத்தில் வீசி எறிந்து விளையாடுகின்றேன். தன்னியன் ஆனேன். இன்னும் ஆனந்தத் தாண்டவம் ஆடுகின்றேன்.

**தத்துவ ஞானம் வந்த சந்தோட வதிச யத்தால்**
**நித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய றிந்த**
**சத்திய மதனா லன்றோ தாண்டவா வென்ற ழைத்தார்**
**அத்தனை மகிமை யுள்ளோ ரன்னையும் பிதாவுந் தாமே.** **(176)**

தத்துவ ஞானம் வந்த சந்தோட அதிசயத்தால்,
நித்தம் ஆடுவன் காண், என்ற நிலை முன்னமே அறிந்த,
சத்தியம் அதனால் அன்றோ, தாண்டவா என்று அழைத்தார்;
அத்தனை மகிமை உள்ளோர், அன்னையும், பிதாவும் தாமே.

(சகல அனர்த்தங்களையும் ஒழித்து ஒப்பு உயர்வற்ற ஆனந்தத்தை நேரடியாகத் தரவல்ல) தத்துவ ஞானத்தால் உண்டான வித்தியானந்தம் மேலீட்டால் நாடோறும் நடனம் ஆடுவன் என்ற நிலை முன்னமே அறிந்திருந்ததால், 'தாண்டவா' என்று பெயரிட்டு அழைத்தனர். அத்தனை மகிமையுள்ளவர் அன்னையும் பிதாவும் ஆவர்.

**வந்ததோ ரிவ்வா நந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்**
**சிந்தையி லெழுந்து பொங்கிச் செகமெலா நிறைந்து தேங்கி**
**அந்தமில் லாத தாயிற் றப்படி குருவே தாந்த**
**மந்திர மருளு மீசன் மலரடி வணங்கி னேனே.** **(177)**

வந்தது ஓர் இவ்வாநந்த மகிழ்ச்சி யாருடன் சொல்வேன் யான்?
சிந்தையில் எழுந்து, பொங்கி, செகம் எ(ல்)லாம் நிறைந்து, தேங்கி,
அந்தம் இல்லாதது ஆயிற்று; அப்படி குரு ,வேதாந்த மந்திரம்
அருளும், ஈசன் மலர் அடி வணங்கினேனே.

தத்துவ ஞானத்தால் உண்டானதாகிய இந்த வித்தியானந்தத்தின் பெருக்கை யான் எவரிடத்தில் கூறுவேன்? அந்த வித்தியானந்தம் சத்துவ குணத்தால் வைராக்கிய மயமான அந்தக்கரணத்தின் சாந்த விருத்தியினின்றும் தோன்றி மேலிட்டுப் பிரபஞ்சம் முழுதும் வியாபித்துப் பூரணமாய் முடிவற்றதாக ஆயிற்று. அவ்வாறு ஒப்பு உயர்வற்ற ஆனந்தம்- நிரதிசயானந்தம்-எனக்கு உண்டாகுமாறு குருவாகவும் வேதாந்த சாஸ்திரமாகவும் இருந்து அருள் செய்த பரமேசுவரனது பங்கயப் பாதங்களை வணங்கினேன்.

**வித்தியா நந்த மிந்த விதமென விளம்பி னோமே**
**பத்தியா லிந்த நூலைப் பார்த்தநு பவித்த பேர்கள்**
**நித்திய தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவன்**
**முத்தியை யடைந்தி ருந்த முனிவர ராகு வாரே.** **(178)**

வித்தியாநந்தம் இந்த விதம் என, விளம்பினோமே;
பத்தியால், இந்த நூலைப் பார்த்து, அநுபவித்த பேர்கள்,
நித்திய தரும நிட்டை நிலைதனை அறிந்து,
சீவன் முத்தியை அடைந்திருந்த, முனி வரர் ஆகுவாரே.

வித்தியானந்தம்-துக்க அபாவம், சர்வகாமாப்தி, கிருதகிருத்தியம், பிராப்தப் பிராப்பியம் என்னும் நான்குவகையாம்-இதுகாறும் கூறினோம். விசுவாசத்தோடு இந்த கைவல்ய நவநீத நூலினைக் கேட்டு விசாரித்து அனுபவித்தோர்கள் நித்தியமான புண்ணிய விசேஷத்தை உடைய சமாதியின் ஆருடத்தை அனுபவித்து சீவன் முத்தியை அடைந்து முனிவர்க்கு நிகராவர்.

**ஆரணப் பொருளாம் வித்தி யாநந்தம் விளங்க வேதும்**
**காரணங் குறைவி லாமற் கைவல்ய நவநீ தத்தைப்**
**பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தில்**
**நாரண குருந மக்கு நவின்றனர் யோகில் வந்தே. (179)**

ஆரணப் பொருளாம் வித்தியாநந்தம் விளங்க ஏதும்
காரணம் குறைவி(ல்)லாமல், கைவல்ய நவநீதத்தைப்
பூரணமாக்க வேண்டி, பூர்வ மா நன்னிலத்தில்,
நாரண குரு ,நமக்கு நவின்றனர், யோகில் வந்தே.

வேதார்த்தமான சாதன சதுஷ்டய முதல் வித்தியானந்தம் வரை அதிகாரிக்குச் செவ்வையாக விளங்கிக் கொள்வதற்காக எடுத்துக் கூறவேண்டிய காரணங்களுள் யாதொன்றும் குறைவுபடாதவாறு கைவல்ய நவநீதம் என்னும் இந்நூலினைப் பூரணமாக்க விரும்பி, நன்னிலம் என்னும் திவ்விய சேத்திரத்தில் எழுந்தருளி இருந்த நாராயண தேசிகர் எனக்குக் கனவில் தோன்றிக் கூற வேண்டுவன அனைத்தையும் இந்நூல் முற்றுப்பெறும் அளவும் கூறியருளினர்.

**குலவுசற் குருவின் பாதக் குளிர்புனற் றலைமேற் கொண்டால்**
**உலகினிற் றீர்த்த மெல்லா முற்றபே றடைவார் போல**
**நலமெய் யாகியகை வல்ய நவநீத நூலைக் கற்றோர்**
**பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார். (180)**

குலவு சற்குருவின் பாதக் குளிர் புனல், தலை மேல் கொண்டால்
உலகினில் தீர்த்தம் எல்லாம் , உற்ற பேறு அடைவார் போல,
நல(ம்) மெய்யாகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்,
பலகலை ஞான நூல்கள் படித்த ,ஞானிகளாய் வாழ்வார்.

சற்குருவின் திருவடியில் அபிஷேகம் செய்த தீர்த்தத்தைத் தமது சிரசில் தெளித்துக் கொண்டவர், அதனால் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தம் அனைத்திற்கும் சென்று மூழ்கினோர் அடையும் பயன் எல்லாம் அடைவர். அதுபோல், கைவல்ய நவநீதம் என்னும் இந்த மெய்ஞ்ஞான சாத்திரத்தைக் கற்று தெளிந்தவர் ஞான சாத்திரங்கள் பலவற்றினையும் படித்து உணர்ந்த ஞானிகளைப் போலச் சிறப்புற்று வாழ்வர்.

| | |
|---|---|
| அகமெனும் ஆன்மா | 82 |
| அக்கினி கட்டுப் பட்டால் | 49 |
| அசத்தில் எம்மட்டும் | 116 |
| அசலம் நிரஞ்சனம் | 131 |
| அச்சுவத்தம் | 92 |
| அடங்கிய விருத்தியான் | 13 |
| அதனையின்னதென்று | 110 |
| அதுதானெப்படி யென்றக் | 18 |
| அத்தியாரோப மென்றும் | 17 |
| அநுபவானந்த வெள்ளத்து | 46 |
| அந்தக் கணம் உடல் | 127 |
| அந்தமும் நடுவுமின்றி | 6 |
| அந்தவாறிருந்து | 148 |
| அப்படி இருக்க சித்தம் | 150 |
| அரவன்று கயிறு | 27 |
| அரிதாகு மிவர்கள் | 54 |
| அரிய மெய்ஞானத்தியால் | 56 |
| அருவமாகும் மாயாவி | 111 |
| அருளுமையனே | 103 |
| அழிவிலாத தத்பதம் | 89 |
| அழுக்கொடு பற்றும் | 21 |
| அளிமகன் நெடும் போது | 46 |
| அறியாத மயல் அஞ்ஞானம் | 35 |
| அறிவுக்கு அறிவு செய்யும் | 41 |
| அறுசுவையின் குணம் | 75 |
| அனக மைந்தனே | 86 |
| அன்ன பானாதி சுக சாதனம் | 120 |
| அன்ன தன் சிசுவை | 11 |
| ஆகமப் பிரமாணத்தால் | 61 |
| ஆடவர் செய் தொழில் | 76 |
| ஆதாரம் மறைந்து போனால் | 29 |
| ஆதிமுக்குணம் | 22 |
| ஆரணப் பொருளாம் | 153 |
| ஆரோபம் அத்தியாசம் | 17 |
| ஆர்க்குங் காணவும் | 113 |
| ஆனபாவி களடைவன | 88 |
| ஆனபின் மனைவி | 10 |
| ஆனாலையா குருவே | 79 |
| இகமான குருநாதனே | 118 |
| இக்குணங்களிலே | 20 |
| இங்குமப்படி சச்சிதா | 98 |
| இதயமொத்த சற்குருவே | 135 |
| இது நினக்கு அறியும் | 34 |
| இந்தச் சீவனால் வரும் | 92 |
| இந்த ஞானந்தான் | 94 |
| இந்த நிச்சயம் முத்தருள் | 107 |
| இந்த நீ துவம் பதத்தின் | 42 |
| இந்த மாயையினால் | 33 |
| இந்தவாறு ஐந்து சுகம் | 129 |
| இப்படிப்போல நாம ரூபம் | 18 |
| இப்புவியில் இஞ்ஞான பூமி | 142 |
| இம்பரில் நஞ்சை | 32 |
| இராசத குணத்தில் | 23 |
| இருவகை தீவிரதரத்தும் | 144 |
| இருளாக முடும் சுழுத்தியில் | 120 |
| இலக்கமாயிரம் சுருதியால் | 87 |
| இல்லையாகிய சத்தியை | 112 |
| இவனதிகாரி யானோன் | 10 |
| இவனயன் மால் சிவனாகிய | 83 |
| இவ்வாறுரை செயும் | 124 |
| இவ்வுடன் மருவுஞ் சீவன் | 23 |
| இன்னது தேகம் தேகி | 15 |
| இன்னவகை விதி விலக்கு | 132 |
| இன்னவாறந்த பிரமத்தை | 96 |
| ஈசர் காரியம் | 91 |
| ஈசனுக் கிது சுழுத்தி | 20 |
| ஈசனுமா யருவாய் | 81 |
| ஈனந்தரு சுகம் | 125 |
| ஈன்றளித்தழிக்கும் | 4 |
| உண்டுறங்கி | 137 |
| உதவும் புவியில் | 126 |
| உத்தமவெளுப்புச் செம்மை | 19 |
| உத்தம குருவே | 80 |
| உருக்கிய தரா நீர் | 64 |
| உருவங்க ளிரதங்கள் | 117 |
| உலகமான அஞ்ஞானமும் | 101 |
| உன்முகம் போல் | 64 |
| எத்தனை நாள் ஞாதாவும் | 50 |
| எரிகின்ற விளக்கால் | 65 |
| எல்லாங் கண்டறியும் | 40 |
| எல்லாச் சீவரும் | 81 |
| எவருடை அருளால் | 5 |
| எவனாகிலும் இந்த | 129 |
| எனவுரைத் தருளும் | 60 |
| என் மனந் திருக்கோயிலாய் | 89 |
| என்ன புண்ணியமோ | 151 |
| என்னுடை மனது | 5 |
| என்னைத்தான் சடனா | 14 |
| ஏகமாய் மனம் இறந்தால் | 69 |
| ஏமமாயா விநோத | 21 |
| ஐந்து பூதமும் பத்தாக்கி | 24 |
| ஐயனே எனதுள்ளே நின்று | 47 |
| ஐயா கேளீர் | 78 |
| ஒருவழி யிதுவாம் | 19 |
| ஒன்றாகிய பிரமானந்தம் | 127 |
| ஒன்று கேள் மகனே | 94 |

| | |
|---|---|
| ஓய்ந்த கனாவில் | 78 |
| கங்கையில் கோஷம் | 43 |
| கடநீரின் மேகநீரில் | 45 |
| கடமெனும் உபாதி | 57 |
| கண்டறிந்தது ஞானம் | 104 |
| கரணமாம் மனது | 38 |
| கருதுமனோ குணம் | 66 |
| கருப்பை முட்டையுள் | 113 |
| களங்கமற்ற கண்ணாடி | 68 |
| கள்ளுமூனும் நீ விரும்பினால் | 100 |
| கற்பனை வந்தவாறு | 26 |
| காமமாதி வந்தாலும் | 52 |
| காமியத்தவம் | 85 |
| காரண சரீரம் தன்னைக் | 149 |
| காரியாங்களும் | 111 |
| கானனீர் கிளிஞ்சில் வெள்ளி | 58 |
| கிளர் மகனே கேள் | 77 |
| குகன்தனையும் | 130 |
| குரவர் சிகாமணியே | 77 |
| குலவு சற்குருவின் பாதக் | 154 |
| குளிரிளகல் வெண்மை | 130 |
| கெடலான பொழுது | 122 |
| கேவல நிலை தோன்றாமல் | 30 |
| கைதவங்களை | 87 |
| சகமதில் இதுவென் | 30 |
| சடமதாகிய தியானம் | 105 |
| சடமான மூடத் தருக் | 118 |
| சட்டி குடங்களில் | 82 |
| சத்தி சத்தனைத் தவிர | 112 |
| சத்தே சித்தாகும் | 133 |
| சத்தொடு சித்தாநந்தம் | 38 |
| சந்ததம் புருடன் தன்னை | 60 |
| சமம் தமம் விடல் | 8 |
| சருவ முத்தியைத் தருகின்ற | 105 |
| சாதனமின்றி ஒன்றை | 9 |
| சிஞ்ஞாசு ஞானவான் | 145 |
| சிட்டர் புகழ் மகனே | 143 |
| சிட்டனிவ்வாறு கூற | 47 |
| சித்து நான் நிறைந்தோன் | 150 |
| சிரவணப் பொருளை | 9 |
| சிவ சொரூபமாம் | 85 |
| சிறந்த நன்மையும் | 90 |
| சீரிய வீசனார்க்கும் | 25 |
| சீவ பேதங்கள் | 88 |
| சீவன் முத்தரை சேவித்தோர் | 55 |
| சுத்தமாஞ் சத்துவமே | 71 |
| சுத்தியில் வெள்ளி போல | 32 |
| சுருதி யுத்தி ஒத்தது | 134 |
| சுழுத்தியில் பிரளயத்தில் | 31 |
| சூக்கும சடம் இம்மட்டும் | 24 |
| செய்கையும் செய்விக்கையும் | 74 |
| சென்மாந்தரம் செய்த | 119 |
| சென்றது கருதார் | 53 |
| சொரூப ஞானமும் | 102 |
| சொல்லிய மகனே | 57 |
| சொற்பனந்தனில் | 109 |
| சொன்னது கேட்கமாட்டா | 12 |
| ஞானம் காரணம் | 115 |
| ஞானமார் சீவன் முத்தர் | 51 |
| தசபுமான் தனைக் | 36 |
| தஞ்சமாங் குருவும் சொன்ன | 45 |
| தடத்து நீர் நிலாத்திரி | 83 |
| தடையெவை எனில் | 48 |
| தத்துவஞானம் வந்த | 152 |
| தத்துவத்தின் மனமுறைத்து | 139 |
| தத்துவமெனும் பதங்கள் | 44 |
| தத்துவஅநுபோகந்தான் | 50 |
| தத்துவ விசாரம் செய்து | 34 |
| தர்ப்பணத்தில் | 97 |
| தன்பதியல்லா போர்கள் | 63 |
| தன்னையுந் தனக்காதார | 14 |
| தாகப்படும் பொருளிலும் | 122 |
| தாமத மிராசதம் | 117 |
| தாலத்தின் மரங்கள் | 16 |
| தானன்றி வேறொன்று | 116 |
| தானிகர் தனக்காம் | 28 |
| திகழ்ந்த ஈசனார் | 90 |
| தினமும் மண் நுகர் | 99 |
| தீரராய் பிரம்ம வித்தாய் | 51 |
| துரிய நிலந்தனை | 140 |
| துருத்தி மாயையை | 102 |
| துற்சங்க நிவர்த்தி வந்து | 138 |
| துளங்கு தர்ப்பணம் | 97 |
| தூங்குஞ் சுகம் | 125 |
| தூடண தமத்தில் வந்த | 28 |
| தூல சூக்கும அஞ்ஞானம் | 40 |
| தூலமே மருவுஞ் சீவன் | 25 |
| தெரிதரு மகனே | 79 |
| தேகத்தனல னாகி | 73 |
| தேகமல்லாமல் வேறே | 15 |
| தொடர்பவம் தொலையும் | 12 |
| தோற்றமாம் சத்தி தன்னில் | 22 |
| தோற்றமாம் சத்தி தானும் | 31 |
| நராின் மன்னனை | 84 |
| நரர் குழி பறித்து | 59 |
| நலமெய் ஐயனே | 93 |

| | |
|---|---|
| அகமெனும் ஆன்மா | 82 |
| அக்கினி கட்டுப் பட்டால் | 49 |
| அசத்தில் எம்மட்டும் | 116 |
| அசலம் நிரஞ்சனம் | 131 |
| அச்சுவத்தம் | 92 |
| அடங்கிய விருத்தியான் | 13 |
| அதனையின்னதென்று | 110 |
| அதுதானெப்படி யென்றக் | 18 |
| அத்தியாரோப மென்றும் | 17 |
| அநுபவானந்த வெள்ளத்து | 46 |
| அந்தக் கணம் உடல் | 127 |
| அந்தமும் நடுவுமின்றி | 6 |
| அந்தவாறிருந்து | 148 |
| அப்படி இருக்க சித்தம் | 150 |
| அரவன்று கயிறு | 27 |
| அரிதாகு மிவர்கள் | 54 |
| அரிய மெய்ஞானத்தீயால் | 56 |
| அருவமாகும் மாயாவி | 111 |
| அருளுமையனே | 103 |
| அழிவிலாத தத்பதம் | 89 |
| அழுக்கொடு பற்றும் | 21 |
| அளிமகன் நெடும் போது | 46 |
| அறியாத மயல் அஞ்ஞானம் | 35 |
| அறிவுக்கு அறிவு செய்யும் | 41 |
| அறுசுவையின் குணம் | 75 |
| அனக மைந்தனே | 86 |
| அன்ன பானாதி சுக சாதனம் | 120 |
| அன்ன தன் சிசுவை | 11 |
| ஆகமப் பிரமாணத்தால் | 61 |
| ஆடவர் செய் தொழில் | 76 |
| ஆதாரம் மறைந்து போனால் | 29 |
| ஆதிமுக்குணம் | 22 |
| ஆரணப் பொருளாம் | 153 |
| ஆரோபம் அத்தியாசம் | 17 |
| ஆர்க்குங் காணவும் | 113 |
| ஆனபாவி களடைவன | 88 |
| ஆனபின் மனைவி | 10 |
| ஆனாலையா குருவே | 79 |
| இகமான குருநாதனே | 118 |
| இக்குணங்களிலே | 20 |
| இங்குமப்படி சச்சிதா | 98 |
| இதயமொத்த சற்குருவே | 135 |
| இது நினக்கு அறியும் | 34 |
| இந்தச் சீவனால் வரும் | 92 |
| இந்த ஞானந்தான் | 94 |
| இந்த நிச்சயம் முத்தருள் | 107 |
| இந்த நீ துவம் பதத்தின் | 42 |
| இந்த மாயையினால் | 33 |
| இந்தவாறு ஐந்து சுகம் | 129 |
| இப்படிப்போல நாம ரூபம் | 18 |
| இப்புவியில் இஞ்ஞான பூமி | 142 |
| இம்பரில் நஞ்சை | 32 |
| இராசத குணத்தில் | 23 |
| இருவகை தீவிரதரத்தும் | 144 |
| இருளாக முடும் சுழுத்தியில் | 120 |
| இலக்கமாயிரம் சுருதியால் | 87 |
| இல்லையாகிய சத்தியை | 112 |
| இவனதிகாரி யானோன் | 10 |
| இவனயன் மால் சிவனாகிய | 83 |
| இவ்வாறுரை செயும் | 124 |
| இவ்வுடன் மருவுஞ் சீவன் | 23 |
| இன்னது தேகம் தேகி | 15 |
| இன்னவகை விதி விலக்கு | 132 |
| இன்னவாறந்த பிரமத்தை | 96 |
| ஈசர் காரியம் | 91 |
| ஈசனுக் கிது சுழுத்தி | 20 |
| ஈசனுமா யருவாய் | 81 |
| ஈனந்தரு சுகம் | 125 |
| ஈன்றளித்தழிக்கும் | 4 |
| உண்டுறங்கி | 137 |
| உதவும் புவியில் | 126 |
| உத்தமவெளுப்புச் செம்மை | 19 |
| உத்தம குருவே | 80 |
| உருக்கிய தரா நீர் | 64 |
| உருவங்க ளிரதங்கள் | 117 |
| உலகமான அஞ்ஞானமும் | 101 |
| உன்முகம் போல் | 64 |
| எத்தனை நாள் ஞாதாவும் | 50 |
| எரிகின்ற விளக்கால் | 65 |
| எல்லாங் கண்டறியும் | 40 |
| எல்லாச் சீவரும் | 81 |
| எவருடை அருளால் | 5 |
| எவனாகிலும் இந்த | 129 |
| எனவுரைத் தருளும் | 60 |
| என் மனந் திருக்கோயிலாய் | 89 |
| என்ன புண்ணியமோ | 151 |
| என்னுடை மனது | 5 |
| என்னைத்தான் சடனா | 14 |
| ஏகமாய் மனம் இறந்தால் | 69 |
| ஏமமாயா வினோத | 21 |
| ஐந்து பூதமும் பத்தாக்கி | 24 |
| ஐயனே எனதுள்ளே நின்று | 47 |
| ஐயா கேளீர் | 78 |
| ஒருவழி யிதுவாம் | 19 |
| ஒன்றாகிய பிரமானந்தம் | 127 |
| ஒன்று கேள் மகனே | 94 |

| | |
|---|---|
| ஓய்ந்த கனாவில் | 78 |
| கங்கையில் கோஷம் | 43 |
| கடநீரின் மேகநீரில் | 45 |
| கடமெனும் உபாதி | 57 |
| கண்டறிந்தது ஞானம் | 104 |
| கரணமாம் மனது | 38 |
| கருதுமனோ குணம் | 66 |
| கருப்பை முட்டையுள் | 113 |
| களங்கமற்ற கண்ணாடி | 68 |
| கள்ளுமூனும் நீ விரும்பினால் | 100 |
| கற்பனை வந்தவாறு | 26 |
| காமமாதி வந்தாலும் | 52 |
| காமியத்தவம் | 85 |
| காரண சரீரம் தன்னைக் | 149 |
| காரியங்களும் | 111 |
| கானனீர் கிளிஞ்சில் வெள்ளி | 58 |
| கிளர் மகனே கேள் | 77 |
| குகன்தனையும் | 130 |
| குரவர் சிகாமணியே | 77 |
| குலவு சற்குருவின் பாதக் | 154 |
| குளிரிளகல் வெண்மை | 130 |
| கெடலான பொழுது | 122 |
| கேவல நிலை தோன்றாமல் | 30 |
| கைதவங்களை | 87 |
| சகமதில் இதுவென் | 30 |
| சடமதாகிய தியானம் | 105 |
| சடமான மூடத் தருக் | 118 |
| சட்டி குடங்களில் | 82 |
| சத்தி சத்தனைத் தவிர | 112 |
| சத்தே சித்தாகும் | 133 |
| சத்தொடு சித்தாநந்தம் | 38 |
| சந்ததம் புருடன் தன்னை | 60 |
| சமம் தமம் விடல் | 8 |
| சருவ முத்தியைத் தருகின்ற | 105 |
| சாதனமின்றி ஒன்றை | 9 |
| சிஞ்ஞாசு ஞானவான் | 145 |
| சிட்டர் புகழ் மகனே | 143 |
| சிட்டனிவ்வாறு கூற | 47 |
| சித்து நான் நிறைந்தோன் | 150 |
| சிரவணப் பொருளை | 9 |
| சிவ சொரூபமாம் | 85 |
| சிறந்த நன்மையும் | 90 |
| சீரிய வீசனார்க்கும் | 25 |
| சீவ பேதங்கள் | 88 |
| சீவன் முத்தரை சேவித்தோர் | 55 |
| சுத்தமாஞ் சத்துவமே | 71 |
| சுத்தியில் வெள்ளி போல | 32 |
| சுருதி யுத்தி ஒத்தது | 134 |
| சுழுத்தியில் பிரளயத்தில் | 31 |
| சூக்கும சடம் இம்மட்டும் | 24 |
| செய்கையும் செய்விக்கையும் | 74 |
| சென்மாந்தரம் செய்த | 119 |
| சென்றது கருதார் | 53 |
| சொரூப ஞானமும் | 102 |
| சொல்லிய மகனே | 57 |
| சொற்பனந்தனில் | 109 |
| சொன்னது கேட்கமாட்டா | 12 |
| ஞானம் காரணம் | 115 |
| ஞானமார் சீவன் முத்தர் | 51 |
| தசபுமான் தனைக் | 36 |
| தஞ்சமாங் குருவும் சொன்ன | 45 |
| தடத்து நீர் நிலாத்திரி | 83 |
| தடையெவை எனில் | 48 |
| தத்துவஞானம் வந்த | 152 |
| தத்துவத்தின் மனமுறைத்து | 139 |
| தத்துவமெனும் பதங்கள் | 44 |
| தத்துவஅநுபோகந்தான் | 50 |
| தத்துவ விசாரம் செய்து | 34 |
| தர்ப்பணத்தில் | 97 |
| தன்பதியல்லா பேர்கள் | 63 |
| தன்னையுந் தனக்காதார | 14 |
| தாகப்படும் பொருளிலும் | 122 |
| தாமத மிராசதம் | 117 |
| தாலத்தின் மரங்கள் | 16 |
| தானன்றி வேறொன்று | 116 |
| தானிகர் தனக்காம் | 28 |
| திகழ்ந்த ஈசனார் | 90 |
| தினமும் மண் நுகர் | 99 |
| தீரராய் பிரம்ம வித்தாய் | 51 |
| துரிய நிலந்தனை | 140 |
| துருத்தி மாயையை | 102 |
| துற்சங்க நிவர்த்தி வந்து | 138 |
| துளங்கு தர்ப்பணம் | 97 |
| தூங்குஞ் சுகம் | 125 |
| தூடண தமத்தில் வந்த | 28 |
| தூல சூக்கும அஞ்ஞானம் | 40 |
| தூலமே மருவுஞ் சீவன் | 25 |
| தெரிதரு மகனே | 79 |
| தேகத்தனல னாகி | 73 |
| தேகமல்லாமல் வேறே | 15 |
| தொடர்பவம் தொலையும் | 12 |
| தோற்றமாம் சத்தி தன்னில் | 22 |
| தோற்றமாம் சத்தி தானும் | 31 |
| நரரின் மன்னனை | 84 |
| நரர் குழி பறித்து | 59 |
| நலமெய் ஐயனே | 93 |

| | |
|---|---|
| நல்லவனே கேள் | 80 |
| நற்கருத்து உடையோனாகி | 59 |
| நனவுகண்டது | 16 |
| நன்மையாம் குருவே | 99 |
| நாசச் சரீரத்திருக்கும் | 119 |
| நாலாம் பூமியில் | 141 |
| நானென உடலைத்தானே | 151 |
| நானென்ற பிரமமான | 146 |
| நிசமானது முக்கியமோ | 128 |
| நித்தியம் பூரணம் | 131 |
| நித்தியவ நித்தியங்கள் | 8 |
| நிறைந்தவாறு | 147 |
| நிற்குண வத்துவின் | 132 |
| நீ நானென்றிரண்டிலாமல் | 48 |
| நெய்யும் வெண்ணையும் | 126 |
| பங்கயாசனன் முதல் | 108 |
| பஞ்சகோசமும் விட்டு | 39 |
| பஞ்சினை ஊழித்தீப்போல் | 55 |
| படமும் நூலும் போல் | 27 |
| படர்ந்த வேதாந்தம் | 6 |
| பத்தியும் வைராக்கியமும் | 95 |
| பந்த மனை துறந்து | 145 |
| பலகலையும் உணர்ந்த | 135 |
| பன்னிய சோயமென்னும் | 44 |
| பாவிமந்த விரகத்தில் | 144 |
| பிரமஞானிகளும் | 54 |
| பிரமபாவனையை மூடி | 49 |
| பிரமமாம் தனை மறந்த | 33 |
| பிரமரூபத்தை தியானித்த | 106 |
| பிறந்தது உண்டானால் | 146 |
| பிறிவதெப்படி என்றக்கால் | 37 |
| பின்னை மூவரில் | 53 |
| புண்ணிய பதிகன் | 35 |
| புலவர் புகழ் முதல் பூமி | 137 |
| புலியும் அனுகூலம் எனில் | 123 |
| பூச்சிய வீசன் | 37 |
| பூரிக்கும் கன சச்சிதா | 115 |
| பூன்றமாம் பிரமத்துக்கும் | 29 |
| பேத கன்மத்தால் | 52 |
| பேதமானதுவும் கேளாய் | 42 |
| பொய்யை மெய்யென்ற | 109 |
| பொல்லாத மிலேச்சருக்கும் | 142 |
| பொறுமையால் பிராரத்தத்தை | 56 |
| பொன்னில மாதராசை | 4 |
| போகத்தில் வருசுகம் | 124 |
| போகமாருயிர் | 100 |
| போனசன்மங்கள் தமில் | 95 |
| மதுரமாம் கட்டி சுட்ட | 41 |
| மதுவிறைச்சிகள் | 101 |
| மந்தமும் தீவிரமும் | 143 |
| மந்திர மூர்த்திதன்னால் | 61 |
| மரங்கள் போல் | 26 |
| மலடி மைந்தனும் | 107 |
| மற்றைமுப்பிரமாணத்தால் | 62 |
| மனது சத்துவ சொரூபம் | 67 |
| மனத்தினால் எண்ணித் | 147 |
| மனநாசம் சொரூபம் | 70 |
| மனுடன் மனுடகந்தர்வன் | 128 |
| மனைக்குள் வைத்த | 98 |
| மனைவிலங்கு அறு | 93 |
| மாயை என்பது பொய்யெனில் | 108 |
| மாயை என்பதேது | 110 |
| மானஞ்சிறந்த குருநாதனே | 123 |
| முத்தனை வேங்கடேச | 7 |
| முத்தி நல்கிய சற்குருவே | 84 |
| முந்தவகண்டத்து | 136 |
| முந்திய சங்கை தீர | 63 |
| முற்புவி மூன்றிலும் | 140 |
| முன்புகல் தசமன் | 39 |
| முன்னிலங்களேறிய | 141 |
| மூவராம் பரன் | 91 |
| மெய்யுங் கொண்டு | 76 |
| மேவு மண்ணில் | 114 |
| மோகவிருள் கெட | 133 |
| யோக ஞானமே | 86 |
| வகுத்த கர்மங்கள் | 104 |
| வஞ்சகமில் பரமார்த்த | 66 |
| வடநூல் வல்லவர்கள் | 43 |
| வணங்கி நின்று அழுது | 11 |
| வந்ததோ ரிவ்வாநந்தம் | 152 |
| வாக்கியந் தனக்கெட்டாது | 62 |
| வாதனா வசத்தினாலே | 148 |
| வாயுத்தம்பனம் | 114 |
| வாராயென் மகனே | 13 |
| விடயசுகம் அதில் வருதல் | 121 |
| விண்ணொன்றை | 36 |
| வித்தியானந்தம் | 153 |
| விருத்திகளடக்க | 149 |
| விருத்தி ஞானம் | 103 |
| விருத்தியும் பலமும் | 65 |
| விவகார வேளையெல்லாம் | 72 |
| வினவுமிடத்து அஞ்ஞான | 136 |
| வீடதாம் பரிபூரண | 106 |
| வீயாத சத்து முன்னம் | 134 |
| வேகின்ற கோபங்களால் | 121 |
| வேடமாறிய பேர்களை | 96 |

## பிற்சேர்க்கை

(1.29) சூக்கும பூதங்கள்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆகாயம் | சப்தம் | | | | |
| காற்று | சப்தம் | பரிசம் | | | |
| அக்னி | சப்தம் | பரிசம் | ஒளி | | |
| நீர் | சப்தம் | பரிசம் | ஒளி | சுவை | |
| மண் | சப்தம் | பரிசம் | ஒளி | சுவை | வாசனை |

(1.30) சூக்கும தேகம்:

| | பூதம் | கரணம் | உடலில் உள்ள இடம் | தேவதை | தொழில் |
|---|---|---|---|---|---|
| வாயுக்கள் | ஆகாயம் | வியானன் | உடலெங்கும் | விசுவயோனி | தாங்குதல் |
| | காற்று | பிராணன் | இருதயம் | விசிட்டன் | மூச்சுவிடல் |
| | நெருப்பு | அபானன் | குதம் | விசுவகர்த்தா | சீரணித்தல் |
| | நீர் | சமானன் | நாபி | சபன் | உணவை இழுத்துசெல்லுதல் |
| | மண் | உதானன் | கண்டம் | அயன் | உணவைக் கடைதல் |
| கர்மேந்திரியங்கள் | ஆகாயம் | வாக்கு | வாய் | அக்கினி | பேசுதல் |
| | காற்று | கை | கை | இந்திரன் | கொடுத்தல் வாங்குதல் |
| | நெருப்பு | பாதம் | கால் | உபேந்திரன் | நடத்தல் |
| | நீர் | குதம் | குதம் | யமன் | கழித்தல் |
| | மண் | பிறப்புஉறுப்பு | குய்யம் | பிரஜாபதி | ஆனந்தித்தல் |

(1.34) பஞ்சீகரணம்:

| அரைப்பங்கு (50%) | அரைப்பங்கு (50%) | | | |
|---|---|---|---|---|
| பூதங்களின் ½ அரைப்பங்கு | 1/8 பங்கு | 1/8 பங்கு | 1/8 பங்கு | 1/8 பங்கு |
| ஆகாயம் | காற்று | நெருப்பு | நீர் | மண் |
| காற்று | ஆகாயம் | நெருப்பு | நீர் | மண் |
| நெருப்பு | ஆகாயம் | காற்று | நீர் | மண் |
| நீர் | ஆகாயம் | காற்று | நெருப்பு | மண் |
| மண் | ஆகாயம் | காற்று | நெருப்பு | நீர் |

தூலபூதங்களில் இருந்து தூல தேக தத்துவம் ஆறும் தோன்றின. 1. தோல் (சருமம்) 2. ரத்தம் (உதிரம்) 3. சதை (மாமிசம்) இந்த மூன்றும் தாயின் சுரோணிதத்தால் உண்டானவை. 4. நரம்பு (சனாயு) 5. எலும்பு (அஸ்தி) 6. எலும்பிலுள்ள மூளை (மஜ்ஜை) இந்த மூன்றும் தந்தையின் சுக்கிலத்தால் உண்டானவை. ஆக ஆறும் தூல தேக தத்துவம் எனப்படுகிறது.

இந்த தூல தேகம் நால்வகைப் பிறப்பாய், மூவகை சாதியாய் உலகத்தில் தோன்றின. நால்வகைப் பிறப்பு: 1. கருப்பையில் பிறப்பன (சராயுஜம்) 2. முட்டையில் பிறப்பன (அண்டஜம்) 3. வியர்வையில் பிறப்பன (சுவேதஜம்) 4. (பூமியைப் பிளந்துகொண்டு தத்தம்) விதை முதலியவற்றில் பிறப்பன (உத்பிச்சம்).

இவைகள் மூவகை சாதியாய் அமைந்தன. அவைகள்: 1. உத்தம சாதி- (இகலோக பரலோக புத்தியுடைய) மானுடம். 2. மத்திம சாதி -(பரலோகபுத்தி மறைந்து இகலோக புத்தியுடைய) பசு,பட்சி போன்றவை. 3. அதமசாதி - (இரண்டும் இல்லாத) மரம், செடி, கொடி முதலியன. இந்த தூல தேக தத்துவம் மண்ணில் தோன்றுபவை.

இதே போல, நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் இந்த பூதங்களில் தோன்றுபவைகளில் மூவகை சாதிகள் இருக்கின்றன. நீர் என்பது பிதிர்லோகம். நெருப்பு என்பது தேவலோகம். காற்று என்பது யட்ச கந்தர்வ லோகம். ஆகாயம் என்பது சித்தர் லோகம். இவைகளில் மூவகை சாதியாவது : 1. உத்தமசாதி - சந்திரன், நட்சத்திரமாகத் தோன்றும் பிதிர்கள், சூரியன், சித்தர், யட்சர் போன்றவர்கள். 2. மத்திம சாதி - காமதேனு, ஐராவதம், அன்னப்பறவை, கருடன் முதலியன. 3. அதம சாதி - கற்பக விருட்சம், பாரிஜாதம் முதலியன. இவ்வாறு தூல தேக தத்துவம் சொல்லப்பட்டது.

| தேகம் | கோசம் | |
|---|---|---|
| தூல தேகம் | அன்னமய கோசம் | |
| சூக்கும தேகம் | 1. பிராணமய கோசம் | பிராணன்+கர்மேந்திரியம் |
| | 2. மனோமய கோசம் | மனம்+ஞானேந்திரியம் |
| | 3. விஞ்ஞானமய கோசம் | புத்தி+ஞானேந்திரியம் |
| காரண தேகம் | ஆனந்த மய கோசம் | |




| | |
|---|---|
| இதனுடன் முலப்பிரகிருதி சுத்த சத்துவம், சுத்த ரஜஸ், சுத்த தமஸ்-முக்குணவடிவாக உள்ளது. | |
| அதாவது ஒரு கணத்தில் ஒரு குணம் மட்டுமே மேலோங்கி நிற்கும். | |
| சத்துவம் அமிழ்த்தப்படாமல் உள்ள போது மாயை எனப்படும் | இரஜோகுணம் மேலோங்கிய போது அவித்தை எனப்படும் |
| மாயையில் பிரதிபிம்பம் ஈசுவரன் | அவித்தையில் பிரதிபிம்பம் சீவர்கள் |
| காரண தேக தத்துவம் - 5 : பிரமம், ஈசுவரன், மாயை, சீவன், அவித்தை | |

பின்பு, முக்குணங்களும் தம்முள் ஒன்றோடு ஒன்று கலந்து விடுகின்றன

| | | | | | காரண தேகம் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சத்துவத்தில் | சத்துவம் | மிகும் போது | ஈசுவரன் பிரதி பலிக்க பிரதி பிம்பம் | விஷ்ணு | | ரஜசில் | சத்துவம் | மிகும் போது | சீவன் பிரதி பலிக்க பிரதி பிம்பம் | தத்துவ ஞான நிஷ்டன் |
| | இரஜஸ் | | | அயன் | | | இரஜஸ் | | | கர்ம நிஷ்டன் |
| | தமஸ் | | | ருத்ரன் | | | தமஸ் | | | சோம்பல், மயக்கம் உடையவன் |

| | |
|---|---|
| தமோகுணம் இரண்டாகப் பிரிகிறது | 1. ஆவரணம் (முடல்) |
| | 2. விட்சேபம் (தோற்றம்) |

சூக்கும தேகம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முதலில், சூக்கும பூதங்கள் என்ற அபஞ்சீகிருத பூதங்கள் ஐந்தும் தோன்றுகின்றன | | | | | |
| சமட்டி | தமோகுணத்தில் | சத்துவம் | மிகும் போது | அந்தக்கரணங்கள் | 5 |
| வியட்டி | | | | ஞானேந்திரியங்கள் | 5 |
| சமட்டி | தமோகுணத்தில் | இரஜஸ் | | வாயுக்கள் | 5 |
| வியட்டி | | | | கர்மேந்திரியங்கள் | 5 |
| ஆக மொத்தம் | | | | | 20 |

தூல தேகம்

| |
|---|
| தூலபூதங்கள் என்ற பஞ்சீகிருத பூதங்கள்-5 , தூல தேக தத்துவம்-6 தோன்றுகின்றன |
| மொத்த தத்துவங்கள் |
| காரணதேக தத்துவம்-5, சூக்குமதேக தத்துவம்-20, தூலபூதம்-5,தூலதேகதத்துவம்-6 ஆக 36 |

## நிர்க்குண அஷ்டோத்திரம்

ஓம் அஸ்ய ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சாரிய
ஸ்தாபித கயிலாச சம்பத்கிரி பிரம்மபீட
பரம்பரை அகண்ட சச்சிதானந்த பர
பிரம்ம சொரூப ஸ்ரீமத் அமலானந்த
சுவாமி பாதாரவிந்த வில்வபத்திர
நானாவித புஷ்ப நிற்குண அஷ்டோத்திர பூஜாங்கரிஷ்யே:

1. ஓம் அச்சுதாநந்தாய நம:
2. ஓம் நிஜாநந்தாய நம:
3. ஓம் கங்காராமாய நம:
4. ஓம் ராஜாநந்தாய நம:
5. ஓம் அமலாநந்தாய நம:
6. ஓம் லக்ஷ்மணானந்தாய நம:
7. ஓம் சுந்தராநந்தாய நம:
8. ஓம் சப்தகிரியாய நம:
9. ஓம் துரைராஜாய நம:
10. ஓம் மாணிக்காய நம:
11. ஓம் பரிபூரணாநந்தாய நம:
12. ஓம் நரசிம்மாய நம:
13. ஓம் கேசவானந்தாய நம:

ஞானஸ்வரூபாய நம:
ஆனந்தஸ்வரூபாய நம:
ஆத்மஸ்வரூபாய நம:
கூடஸ்தாய நம:
அகண்டாய நம:
அபரிச்சின்னாய நம:
ஆதியே நம:
அநாதியே நம:
காரணாய நம:
அகாரணாய நம: 10
அஹேயாய நம:
அகர்த்தாய நம:
அகர்மணாய நம:
அக்ரோதாய நம:
அவ்யாகிர்தாய நம:
அவாங்மநோகோசராய நம:
அசங்சாய நம:
அசரீராய நம:
அக்ஷராய நம:
அசலாய நம: 20
அச்சுதாய நம:
அசம்சாரியாய நம:
அணுவே நம:
ஸ்தாணுவே நம:
அத்வைதாய நம:
அநந்தாய நம:
அநாவிர்தாய நம:
அநாதிமுக்தாய நம:
அநுபாதேயாய நம:
ஏகஸ்வரூபாய நம: 30
அநேகஸ்வரூபாய நம:
அபரோக்ஷாய நம:
அபயாய நம:
அபேதாய நம:
அப்ரவிர்தாய நம:
அப்ராணாய நம:
அப்ரமேயாய நம:
அபோக்தாய நம:
அமநஸாய நம:
அமிர்தாய நம: 40
அலோபநாய நம:
உந்நதாய நம:
ஏகாத்மநே நம:
சர்வாத்மநே நம:
சர்வக்ஞாய நம:
சர்வகதாய நம:

சர்வாகாராய நம:
சர்வாபாவாய நம:
சர்வகாரணாய நம:
சர்வசமநாய நம: 50
சர்வாதாராய நம:
சர்வாதிஷ்டாய நம:
சத்தேயாய நம:
சத்தியாய நம:
சச்சிதாநந்தாய நம:
சாக்ஷியாய நம:
சாந்தாய நம:
சிந்மாத்ராய நம:
சிவாய நம:
சூந்யாய நம: 60
மகாசூந்யாய நம:
ஸ்வயம்பிரகாசாய நம:
ஸ்வப்பிரகாசாய நம:
சுத்தாய நம:
புத்தாய நம:
சுயம்புவே நம:
க்ஷேத்திரக்ஞாய நம:
திர்க்காய நம:
திர்ஸ்யாய நம:
நாநாரூபாய நம: 70
நிர்விகாராய நம:
நிஷ்கிரியாய நம:
நிர்ச்சம்பந்தாய நம:
நிர்லேபாய நம:
நிந்மலாய நம:
நிரூபாதிகாய நம:
நிரவயவாய நம:
நிர்விகல்பாய நம:
நிர்க்குணாய நம:
நிராகாராய நம: 80

நிரீசுவாராய நம:
நிரீந்திராய நம:
நிர்ஜ்ஜீவாய நம:
நிஷ்பிரகிர்தியே நம:
நிர்விசேஷாய நம:
நிஷ்ப்ரபஞ்சாய நம:
நிரஞ்சநாய நம:
நித்தியாய நம:
நித்யாநந்தாய நம:
நித்யமுத்தாய நம: 90
நிராதாராய நம:
நிர்விஷயாய நம:
நிர்த்தோஷாய நம:
துரியாய நம:
துரியாதீதாய நம:
பரமார்த்தாய நம:
பரப்பிரஹ்மாய நம:
பிரத்தியக்ஷாய நம:
புராணாய நம:
புராதநாய நம: 100
புரணாய நம:
மகத்தாய நம:
முக்தாய நம:
வஸ்துவாய நம:
விபுக்தாய நம:
அதோமுக்ய நம:
ஶ்ரீசற்குருவே நம:
சம்பூர்ணசமப்தா 108

ஓம் - தத் - ஸத்
முற்றிற்று.





## ஸ்ரீமத் சுந்தரானந்த சுவாமிகள்

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே.

- திருமந்திரம்



## ஸ்ரீமத் லக்ஷ்மணானந்த சுவாமிகள்

திடஞானி தெரிசனமே தீர்த்த மாடல்
திடஞானி தெரிசனமே தேவபூஜை
திடஞானி தெரிசனமே ஜெபதபங்கள்
திடஞானி தெரிசனமே செய்யுமறங்கள்
திடஞானி தெரிசனமே சிவத்தைக் காணல்
திடஞானி தெரிசனமே சிவத்தின் சேவை
திடஞானி தெரிசனமே மேவுவதற்குத்
திரிவிதமா உலகத்தில் அரிதாம் யார்க்கும்

- ரிபு கீதை